விலை : ரூ. 60/-

மரண வீட்டின் குறிப்புகள் ❖ தாஸ்தாயெவ்ஸ்கி ❖ தமிழில்: வி.எஸ்.வெங்கடேசன் ❖ பதிப்பு: 2001 ❖ பதிப்பாளர்: சந்தியா நடராஜன்- புதுமைப்பித்தன் பதிப்பகம், 52 (ப. எண்:7), முதல் தளம், நான்காவது தெரு, அஞ்சுகம் நகர், அசோக் நகர், சென்னை - 600 083 தமிழ்நாடு, தென்இந்தியா மின் அஞ்சல்: piththan@yahoo.com ❖ அச்சுக்கோப்பு: புதுமைப்பித்தன் பதிப்பகம் ❖ அச்சாக்கம் : மணி ஆப்செட், சென்னை- 600 005.

புதுமைப்பித்தன் பதிப்பக வெளியீடு : 17

Marana Veetin Kurippukal ❖ Dostoevsky ❖ Translated by : V.S.Vankatasan ❖ Edition : 2001 ❖ Size of Book : 1/8 Demy ❖ No. of Copies : 1000 ❖ No. of Pages : 176 ❖ Paper used for text : 18.6 Maplitho ❖ Printing Type : 11 Points ❖ Publisher : Sandhya Natarajan ❖ Published by: Pudhumaippitthan Pathippagam, #52(Old No. 7), First Floor, Fourth Street, Anjugam Nagar, Ashok Nagar, Chennai - 600 083 Tamilnadu, South India. Ph: 044 - 4899968 E-Mail : piththan@yahoo.com ❖ Typeset at : Pudhumaippitthan Pathippagam ❖ Printed at : Mani Offset, Chennai 600 005. ❖

Price : Rs. 60/-

# பதிப்புரை

மகோன்னதக் கலைஞன் தாஸ்தாயெவ்ஸ்கியின் ஆரம்பகால படைப்பு 'மரண வீட்டின் குறிப்புகள்'. தனது பிற்கால படைப்புகளில் ஆன்ம விடுதலை குறித்தும், கடவுளின் இருப்பு குறித்தும் பிரமிக்கத்தக்க சிந்தனைப்பாய்ச்சலை நிகழ்த்திக்காட்டிய தாஸ்தாயெவ்ஸ்கியின் சீரிய பயணம் இந்த நாவலில் இருந்துதான் துவங்குகிறது.

சமூகத்தால் அங்கீகரிக்கப்பட்ட அடக்கு முறைக்கும், உறுத்தலே இல்லாத வன்முறைக்கும் அருவருக்கத்தக்க சாட்சியாய் இருப்பவை சிறைச் சாலைகள். சிறைச் சாலை ஒன்றை களமாகக் கொண்டு விரியும் இந்த நாவல் மனித மனங்களினூடே பிரவேசித்து அதன் சகல குணங்களையும் நம் முன் காட்சிப்படுத்துகிறது. சிறை அதிகாரிகள், ஆயுள் கைதிகள், தண்டனைக்குக் காத்திருப்போர், தண்டனையை நிறைவேற்றுபவர்கள், ராணுவக் கைதிகள், மருத்துவமனையின் நோயாளிக் கைதிகள் என யாவரின் அக உலகையும் சிறைச் சாலையின் அனைத்து நடவடிக்கைகளையும் தன்னளவில் எவ்வித உணர்ச்சியையும் வெளிப்படுத்தாது ஒரு ஊமைப்படம்போல விவரித்துச் செல்கிறது.

எண்ணற்ற இளைஞர்களின் இளமையை, கணக்கற்றோரின் வாழ்வை, திறமையை ஒட்டுமொத்தமாக உறிஞ்சுவிட்டு அவர்களை சக்கைகளாக்கி நெடிதே நிற்கின்றன சிறைச்சாலை மதில்கள். தனிமை மறுக்கப்பட்டு, சுதந்திரம் பறிக்கப்பட்டு மனித மந்தைகளாக்கப்படுகின்றனர் சிறைவாசிகள். கொடிய வன்முறை மூலம் உடல் சிதைக்கப்பட்டு, மனம் நசுக்கப்பட்டு, ஆன்மா கந்தலாக்கப்பட்டு நடைபிணங்கள் நடமாடும் வீடாகிறது சிறைச் சாலை.

வெளிஉலகிலிருந்து முற்றாக துண்டிக்கப்பட்டு விட்டாலும் மனித சமூகத்தின் கீழ்மையின் - அச்சத்தின் நிழல் சிறைச்சாலையினுள் படராமல் இல்லை. சீமானாக வாழ்ந்து சிறை செல்பவனை இறுதிவரை சாதாரண கைதிகள் ஏற்க மறுக்கின்றனர். மனித இனத்தை துண்டுபடுத்திவிட்ட வர்க்க வேறுபாடு பூதாகாரமாக எழுந்து நிற்கிறது.

பேடிமையும், கோழைத்தனமுமே அடக்குமுறையை கையிலெடுக்கத் தூண்டுகின்றன. கைதிகள் மீதான பயத்தின் காரணமாகவே வன்முறையை கையில் எடுக்கின்றனர் சிறை அதிகாரிகள். அதிகார வர்க்கத்திற்கு வன்முறை என்பது உறுத்தலே இல்லாத வாழ்முறை ஆகிப்போகிறது. இதில் தண்டனையை நிறைவேற்றும்போது கோபத்தோடு ஏசுபவன் கெட்ட அதிகாரியாகவும் வேத நூலின் வசனத்தைக்கூறி தண்டனையை அனுபவிக்கச்சொல்லும் அதிகாரி நல்லவனாகவும் கைதிகளுக்கு தோன்றுகின்றனர்.

எத்தனை கொடிய துன்பத்திற்கு ஆட்பட்டாலும் ஆன்மாவானது இறுதிவரை அழுகையையும், உயிர்ப்பையும் தக்கவைத்துக்கொள்வதையும் இங்கு காண முடிகிறது. சமூகத்தின் பாதுகாப்பான பொந்துகளில் உட்கார்ந்துகொண்டு பார்க்கும் ஆந்தை கண்களுக்கு முரட்டு ஆத்மாக்கள் போல் காட்சியளிக்கும் சிறைவாசிகள் சின்ன விஷயங்களுக்குக்கூட குழந்தைகள்போல் குதூகலிப்பதும், திருவிழாக்களை ஆவலுடன் எதிர்பார்ப்பதும், நாடகங்களை நடத்தி சந்தோஷப்பட்டுக்கொள்வதும் நம்மை நெகிழச் செய்கின்றன.

தண்டனைக்குக் காத்திருக்கும் கைதி, துப்பாக்கி மட்டை அடிபட்டு மீண்டும் உயிரோடு வருவதென்பது நிச்சயமற்ற நிலையில்கூட, அதன்பின் தப்பித்துச்செல்ல திட்டமிட்டுக்கொண்டிருக்கிறான். இது வாழ்வின்மீது, விடுதலையின்மீது மனிதஇனத்தின் தீராத காதலை வெளிப்படுத்துகிறது. இருப்பின், சுதந்திரத்தின் உன்னதத்தையும் சிதையாமல் காப்பாற்ற வேண்டிய பொறுப்பை மனித இனத்திற்கு நினைவுறுத்திக்கொண்டிருக்கிறது 'மரண வீட்டின் குறிப்புகள்'.

தனி மனிதன்மீது மட்டுமின்றி ஒட்டுமொத்த சமூகத்தின்மீது அன்பும் அக்கறையும்கொண்ட தாஸ்தாயெவ்ஸ்கி எனும் நிரந்தர படைப்பாளியின் இந்நாவலை தமிழ் வாசகர்கள் முன் சமர்ப்பிப்பதில் புதுமைப்பித்தன் பதிப்பகம் பெருமைகொள்கிறது.

**- சந்தியா நடராஜன்**

சைபீரியாவில் ஒரு ஒதுக்குப்புறமான பகுதி. அங்கு மனிதன் ஏறமுடியாத பாறைகள் நிறைந்த மலைகளும், வழியே இல்லாத அடர்த்தியான காடுகளும் இருந்தன. அவற்றினிடையே சிறிய நகரங்கள் பல காணப்பட்டன. அந்த நகரங்களிலுள்ள வீடுகள் மரத்தால் கட்டப் பட்டவை. ஒவ்வொரு நகரத்திலும் ஆயிரம் அல்லது இரண்டாயிரம் பேராவது வசிப்பார்கள். நகரத்தின் மத்தியிலும், கல்லறை மைதானத்திலுமாக இரண்டு மாதா கோயில் இருக்கும். இந்த நகரங்கள் அனைத்தும் மாஸ்கோ நகரத்தைச் சுற்றியுள்ள கிராமங்களைப் போன்றிருந்தன. அதைத் தவிர உண்மையான நகரமாக இருக்கவில்லை. சட்டப்படி அந்த நகரங்களுக்குப் போலீஸ் அதிகாரிகள், நீதிபதிக்கு ஆலோசனை கூறுபவர், மற்றும் சில்லரை அதிகாரிகள் நியமிக்கப் பட்டிருந்தார்கள்.

சைபீரியா குளிர் மிகுதியான பிரதேசமாக இருக்கலாம். ஆனால் சர்க்கார் ஊழியர்களுக்கோ அது கதகதப்பானதாகவும் வசதிகள் நிறைந்ததாகவும் இருந்தது. குடிமக்களோ மிகவும் எளிமையானவர்கள். சுதந்திரமான கருத்துக்கள் தீண்டப் படாதவர்கள். சர்க்கார் அதிகாரிகளாக உள்ளவர்கள், ஒன்று அந்தப் பகுதியினரில் தேர்ந்து எடுக்கப்பட்டவர்களாக இருப்பார்கள். அல்லது ரஷ்யாவின் தலைநகரத்திலிருந்து அதிக ஊதியம், இரட்டிப்பு பிரயாணப்படி, மற்றும் படிகள் ஆகியவற்றால் கவரப்பட்டு வந்தவர்களாக இருப்பார்கள். வாழ்க்கையின் பிரச்னைகளை எவ்விதம் தீர்ப்பது என்று தெரிந்தவர்கள் சைபீரியாவில் ஒதுக்கித் தள்ளிய சிறந்த பயனைப் பெற்று அனுபவிப்பார்கள். தெரியாதவர்களோ அங்கு வந்த சில நாட்களுக்கெல்லாம் சலிப்படைந்து ஏன் இங்கே வந்தோம் என்று வருந்துவார்கள். மூன்று ஆண்டு காலம் அவர்கள் சைபீரியாவில் பணிபுரிந்து முடிந்ததும் மத்திய சர்க்கார் அவசரமாகத் திரும்பி வரும்படி கட்டிளையிடும். உடனே இவர்கள் சைபீரியாவை நிந்தித்து, அலட்சியம் செய்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டுச் செல்வாாகள்.

அவர்கள் எண்ணம் தவறானது. பல வகைகளிலும் அது சிறந்த பிரதேசமாகும். பருவ நிலை வெகு நேர்த்தியாக இருக்கும். வியாபாரிகள் பணக்காரர்களாகவும், மரியாதை தெரிந்தவர்களாகவும், சூழ்நிலைக்கேற்ப வாழ்பவர்களாகவும் இருந்தார்கள். பெண்கள் ரோஜா மலரைப் போன்றிருப்பார்கள். அவர்களுடைய நடத்தையில் குற்றம் கண்டு பிடிக்கவே முடியாது. காட்டு ரோஜா கடைத் தெருவிலும் கிடைக்கலாம். இதை வேண்டுபவர்களும் தேடித் திரியலாம். சாராயமோ அளவுக்கு மீறி தருவிப்பார்கள். விளைச்சலும் பல மடங்கு அதிகமாகக் கிடைத்து வந்தது. நல்லவிதமாக எல்லாவற்றையும் மாற்றிக் கொள்ளக் கூடியவர்களுக்கு அது தெய்வ அருள் பெற்ற பிரதேசமாகும்.

இத்தகைய ஒரு சிறு நகரத்தில் தான் நான் அலக்ஸாந்தர் பெட்ரோவிச்சை சந்தித்தேன். ஒரு சமயம் அவன் பெரிய நிலச்சுவான்தாரராகவும், பணக்காரனாகவும் இருந்தான். பிறகு மனைவியைக் கொலை செய்த குற்றத்திற்காக பத்து ஆண்டுகள் கடின தண்டனை அளிக்கப்பெற்று சைபீரியாவுக்கு வந்தான். இப்பொழுது அந்த நகரத்தில் ஒரு தடையுமின்றி வசித்துக்கொண்டிருந்தான். அங்கு அவன் பலருக்கு பிரஞ்சு மொழி கற்றுக்கொடுத்து அதன் மூலம் கிடைக்கும் வருமானத்தில் வாழ்ந்து வந்தான்.

ஐவான் என்ற ஒரு சர்க்கார் அதிகாரியின் இல்லத்திலேயே முதன் முதலில் அலக்ஸாந்தர் பெட்ரோவிச்சைச் சந்தித்தேன். ஐவானுக்கு ஐந்து பெண்கள் இருந்தனர். அந்த பெண்களுக்கு அலக்ஸாந்தர் பெட்ரோவிச், கல்வி கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தான். மெலிந்தும் முகம் வெளுத்தும் காணப்பட்ட ஐவானைக் கண்டு நான் திகைத்து விட்டேன். அவன் எப்போதுமே ஐரோப்பியர்களைப் போல சீராக ஆடை அணிந்து கொண்டிருப்பான். அவனிடம் பேச முற்பட்டாலோ மிகவும் உன்னிப்பாகவும், வேறு எதிலும் மனதைச் செலுத்தாமலும் கேட்டுக் கொண்டிருப்பான். அவன் சுருக்கமாகவும் தெளிவாகவும் பதிலளிப்பான்.

ஐவானிடம் நான் அலக்ஸாந்தர் பெட்ரோவிச்சைக் குறித்துக் கேட்டேன். அதற்கு அவன் பெட்ரோவிச் நல்ல குணமுள்ளவன், தூய்மையானவன், சிறந்த அறிவாளி என்றான். அதனாலேயே அவனைத் தன் பெண்களுக்குக் கல்வி கற்றுக்கொடுக்க இணங்கியதாகவும் சொன்னான். அவனுடைய வாழ்க்கையைக் குறித்து அங்கு எல்லோருக்கும் தெரியும். திருமணமான முதல் ஆண்டே அவன் தன் மனைவியின் மீது ஏற்பட்ட சந்தேகத்தினால் அவளைக் கொலை செய்துவிட்டான். அவனே போலீஸிலும் தன்னை

ஒப்படைத்துக் கொண்டு தண்டனையையும் பெற்றான். இத்தகைய சம்பவங்களைப் பெரும்பாலும் கெட்ட காலத்தினால் ஏற்பட்டவைகளாகவே கருதுவது வழக்கம்.

ஆரம்பத்தில் நான் அலக்ஸாந்தர் பெட்ரோவிச்சை ஏறிட்டும் பார்க்காமலிருந்தேன். ஆனால் பிறகோ அவனிடம் பற்று ஏற்பட்டது. அது எதனால் என்று தெரியாது. அவன் புரியாத புதிராகவே இருந்தான். அவனைப் பேச வைப்பது இயலாத காரியம். நான் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்வான். அதற்குமேல் ஒன்றும் கூறமாட்டான். எனக்கும் வீணாக அவனிடம் எதையும் கேட்கத் தோன்றாது. மேலும் அவனுடைய தோற்றத்தில் சோர்வு, துன்பம் ஆகியவை தென்பட்டது.

ஒரு நாள் மாலை நானும் அலக்ஸாந்தர் பெட்ரோவிச்சும் நடந்து வந்து கொண்டிருந்தோம். என் வீட்டிற்கு அவனை புகை பிடிப்பதற்காக அழைக்கலாமா என்று சற்றும் எதிர்பாராத விதமாக எண்ணினேன். இதைக் கூறியதும் அவன் எவ்விதம் பயந்தான் என்பதை என்னால் விவரிக்கவே முடியாது. அவன் என்னை ஒரு முறை உற்றுப் பார்த்துவிட்டு வேறு பக்கமாகத் திருப்பிச் சென்றான். அதன் பிறகு என்னைக் காணும் போதெல்லாம் பயந்தான். அப்போதும் நான் அவனிடம் உள்ள பற்றுதலை விட்டுவிடவில்லை. ஒரு மாதத்திற்குள்ளாகவே ஏதாவது ஒரு காரணத்தைக் காட்டி அவனை என் இல்லத்திற்கு வரச் செய்யத் தீர்மானித்தேன். இந்த விசித்திரமான எண்ணம் எனக்கு எப்படியோ ஏற்பட்டது.

நகரத்தின் ஒரு ஒதுக்குப்புறமான பகுதியில் அவன் வயதான மாதின் வீட்டில் வசித்து வந்தான். அந்த வீட்டுக்காரிக்கு ஒரு நோயாளியான மகள் இருந்தாள். மகளுக்கு தவறான முறையால் பிறந்த பத்து வயது பெண் இருந்தாள். நான் அந்த வீட்டினுள் நுழைந்த சமயம் பத்து வயதுப் பெண்ணுக்கு அலக்ஸாந்தர் பெட்ரோவிச் பாடம் சொல்லிக் கொண்டிருந்தான். என்னைப் பார்த்ததுமே அவன் குழம்பிவிட்டான். என்னையே முறைத்துப் பார்த்தான். நான் உட்கார்ந்ததும் என்னையே கவனித்துக் கொண்டிருந்தான். அவனுடைய பார்வை ''நீ இங்கிருந்து போகமாட்டாயா?'' என்று கேட்பது போலிருந்தது.

நான் பல விஷயங்களைச் சொன்னேன். அன்று பத்திரிகைகளில் வெளியான செய்திகளைக் கூறினேன். இவை அனைத்தும் அவனுக்குத் தேவையில்லாதவை போல மௌனமாக இருந்தான். அவனுக்குச் சில புத்தகங்களையும் சமீபத்தில் வெளியான

பத்திரிகைகளையும் படிக்கக் கொடுப்பதாகச் சொன்னேன். அவன் தனக்குப் படிக்க நேரமில்லை என்றான்.

கடைசியில் நான் என் தோளிலிருந்த சுமையைக் கீழே இறக்கியது போன்ற உணர்ச்சியுடன் என் வீட்டிற்குப் புறப்பட்டேன். உலகத்திலிருந்தே ஒதுங்கியிருக்க விரும்பும் ஒருவனைத் தொந்தரவு செய்ததற்காக வருத்தமடைந்தேன். ஆனால் நடந்தது நடந்ததுதான். அவனிடம் ஓரளவு புத்தகங்கள் இருந்தன. நானும் பார்த்தேன். இதன் மூலம் அவன் படிப்பதில்லை என்று கூறுவதை நம்ப முடியாது. அதே சமயம் இரவு வெகு நேரத்திற்குப் பிறகும் அவனுடைய அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்ததைப் பல முறை பார்த்திருக்கிறேன். வெகு நேரம் வரை விளக்கு எரியக் காரணம் என்ன? ஏதாவது படிக்கிறானா? அல்லது எழுதுகிறானா?

இந்த சம்பவத்திற்குப் பிறகு நான் வெளியூர் சென்றேன். திரும்பி வர மூன்று மாதங்களாகிவிட்டன. அப்போது அலக்ஸாந்தர் பெட்ரோவிச் காலமாகிவிட்டான் என்ற செய்தி கிடைத்தது. இலை உதிர் காலத்தில் அவன் நோயுடன் படுத்தான். கவனிக்கக்கூட ஒருவரும் இருக்கவில்லை. மருத்துவரைச் சந்திக்கவோ, மருத்துவம் செய்து கொள்ளவோ இல்லை. எனக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது. அவன் ஏதாவது எழுதி வைத்திருப்பானோ என்று நினைத்தேன். நேராக அவன் குடியிருந்த வீட்டிற்குச் சென்றேன். வீட்டுக்காரியிடம் இருபது கோபக்குகள் கொடுத்தேன். அவள் உடனே ஒரு கூடை நிறையக் காகிதம் கொண்டு கொடுத்தாள். வீட்டுக்காரியிடம் அலக்ஸாந்தர் பெட்ரோவிச்சைக் குறித்து அதிகமாக எதுவும் தெரிந்து கொள்ள இயலவில்லை. மூன்று ஆண்டுகள் அவன் அந்த வீட்டில் குடியிருந்தான். அந்த மூன்று ஆண்டுகளில் வீட்டுக்காரியுடன் சரியாக ஒரு சொல் கூடப் பேசியது கிடையாதாம். அலக்ஸாந்தர் பெட்ரோவிச் கல்வி கற்றுக் கொடுத்துவந்த வீட்டுக்காரியின் பேத்தியைச் சந்தித்தேன். அவளுக்கு அலக்ஸாந்தர் பெட்ரோவிச்சை நினைவிருக்கிறதா என்று கேட்டேன். உடனே அந்தப் பெண் என்னை ஒரு முறை உற்றுப் பார்த்தாள். பிறகு அழுது கொண்டே அங்கிருந்து ஓடினாள். எப்படியோ உலகத்தில் ஒரு சிறு பெண்ணாவது அவன்மீது அன்பு செலுத்தி வந்தாளே, அதுவே போதுமானது.

கிடைக்கப் பெற்ற காகிதங்களை எடுத்துக் கொண்டு நான் என் வீட்டிற்கு வந்து சேர்ந்தேன். நாள் முழுவதும் அதைப் பரிசோதனை செய்தேன். முதலில் கிடைத்த சிலவற்றில் குழந்தைகளைப் போல ஏதோ எழுதி வைத்திருந்தான். ஆனால் கடைசியில் ஒரு கனமான

காகிதக் கட்டு அகப்பட்டது. அதில் இருந்த கையெழுத்து குண்டு குண்டாகவும், நேர்த்தியாகவும் இருந்தது. ஆனால் எழுதியது பூர்த்தி செய்யப்பட்டிருக்கவில்லை. ஒரு வேளை எழுதியவன் அதைப் பூர்த்தி செய்ய மறந்து விட்டானோ என்னவோ?

அலக்ஸாந்தர் பெட்ரோவிச் பத்து ஆண்டுகள் சிறையில் தண்டனை அனுபவித்த போது அவனுக்கு ஏற்பட்ட அனுபவங்களை அதில் எழுதி வைத்திருந்தான். அதை நான் படிக்கத் தொடங்கியதும் புதுமையான பல விவரங்கள் தெரிய வந்தன. நான் பலமுறை தொடர்ந்து படித்தேன். அவன் எழுதி வைத்திருந்ததற்கு ''மரண வீட்டின் குறிப்புகள்'' என்று தலைப்பு கொடுத்திருந்தான். மிகவும் புதிய உலகம் அந்தக் குறிப்புகளிலிருந்து காணப்படுகிறது. வீழ்ச்சியடைந்த அந்த மக்களின் வாழ்க்கை மனதைக் கவர்வதாக இருக்கின்றது. அவர்களுடைய வாழ்க்கையை அனைவரும் அறிய வேண்டும். வாசகர்களே அவர்களைக் குறித்து ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்பதற்காகவே இதை வெளியிடுகிறேன்.

# 1

எங்கள் சிறைச்சாலை கோட்டை மதிற்சுவருக்குப் பின்னால் இருந்தது. இரும்புக் கிராதிகளுக் கிடையே கடவுளின் உலகத்தைக் காணலாம் என்ற நம்பிக்கையுடன் பார்ப்பேன். ஆனால் வானத்தின் ஒரு பகுதியும் உயரமான மண்மேடும், அதன்மீது அடர்த்தியாக வளர்ந்திருக்கும் புல்லும், காட்டுச் செடிகளுமே தென்படும். இரவும் பகலும் காவல் புரிந்துவரும் காவல்காரர்கள் காணப்படுவார்கள். பல ஆண்டுகள் கடந்த பிறகும் நான் அப்படியே பார்த்துக் கொண்டிருந்தேன். அதே விதமான காட்சியே தென்பட்டது. நான் விரும்பியதோ சுதந்திரமான கடவுளின் உலகத்தையும் கட்டுப்பாடின்றி காணக்கூடிய வானத்தையும் தான். ஆனால் அதை என்னால் பார்க்க முடியவில்லை.

இருநூறு அடி நீளமும் நூற்றைம்பது அடி அகலமும் கொண்டது எங்கள் சிறைச்சாலை. நான்கு பக்கங்களிலும் பலமான பாதுகாப்புள்ள மதிற் சுவர்களும், ஒரு பக்கத்தில் கனத்த இரும்புக் கம்பிகள் பொறுத்தப்பட்ட பெரிய கதவுகளும் இருந்தன. அந்தக் கதவுகள் கைதிகள் வேலை செய்ய வெளியே செல்லும் போதோ அல்லது அவர்கள் மீண்டும் உள்ளே வரும் போதோதான் திறக்கப்படும். மற்ற நேரங்களில் மூடிப் பூட்டப்பட்டே இருந்து வரும். இயற்கையான ஒளியையோ, சுயேச்சையையோ, சுதந்திரமக்களின் வாழ்க்கையையோ அங்கு நினைத்துப் பார்க்க முடியாது. அத்தகைய கனவு நனைவாகும் என்பதே எங்களுக்குச் சந்தேகமாகவே இருந்தது. எங்களுடைய உலகமே வேறுவகையானது. அதற்கு இணையாக எதையும் சொல்ல முடியாது. நடை பிணங்கள் வாழும் இந்த உலகத்திற்கும் மற்றவர்களுடைய வாழ்க்கை, பழக்க வழக்கங்கள், உடை, சட்ட திட்டங்கள் ஆகிய அனைத்துமே முற்றிலும் மாறுபட்டவை.

வாயில் கதவைக் கடந்து உள்ளே காலடி எடுத்து வைத்ததுமே எதிரே மரத்தினால் கட்டப்பட்ட ஒற்றை மாடி வீடுகள் இரண்டைக் காணலாம். இவைதான் கைதிகளை அவர்களுடைய தகுதிக்கேற்ப வைக்கப்படும் விடுதிகளாகும். இவற்றிற்கு அப்பால் ஒரு வீடு இருந்தது. அது இரண்டு அறைகள் கொண்டது. சமையல் செய்யுமிடமாக அது பயன்பட்டு வந்தது. இவற்றிற்கு மத்தியில் பெரிய திறந்த வெளி இருந்தது. இங்கு தான் ஒரு நாளைக்கு மூன்று முறை- காலை- உச்சி வேளை- மாலை- கைதிகளை வரிசையாக நிற்க வைத்து எண்ணிப் பார்த்துக் கொள்வார்கள். காவல் புரியும் காவல்காரனுக்குச் சந்தேகம் ஏற்பட்டு விட்டாலோ பல முறைகூட இம்மாதிரி எல்லாக் கைதிகளையும் அழைத்து நிறுத்தி வைத்து எண்ணிப் பார்ப்பதும் உண்டு. கைதிகள் விடுதிக்கும், மற்ற பகுதிகளுக்குமிடையே திறந்த வெளியும் இருந்தது. இங்கு வேலையில்லாமல் போனால் கைதிகள் உலாவலாம். அல்லது தங்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையைக் குறித்துச் சிந்தித்துக் கொண்டிருக்கலாம்.

மற்ற கைதிகளை நான் சந்திக்கும் போதெல்லாம் துயரம் நிரம்பிய அவர்களுடைய முகத்தை உற்றுக் கவனிப்பேன். அவர்கள் எதைக் குறித்துச் சிந்திக்கிறார்கள் என்பதை ஆராய்ந்து அறிய முற்படுவேன். ஓய்வு நேரத்தில் திறந்த வெளியில் அடிக்கப்பட்டிருக்கும் முளைகளை எண்ணுவதே ஒருவனுடைய சிறந்த பொழுது போக்காக இருந்தது. அங்கு ஆயிரத்து ஐநூறு முளைகள் அடிக்கப்பட்டிருந்தன. அவை ஒவ்வொன்றும் அவனுக்கு மனப்பாடமாகவும் இருந்து. ஒரு நாளைக்கு ஒன்றாக எண்ணுவதால் அவன் இன்னமும் எத்தனை நாட்கள் சிறையில் தண்டனை அனுபவிக்க வேண்டியிருக்கிலாம் என்பதை அறியலாம். ஒரு பக்கத்து முளையை எண்ணி முடித்ததும் மறுபக்கத்தைக் காணும் போது அவனுக்கு மகிழ்ச்சி ஏற்படலாம்.

சிறைச்சாலையினுள் வந்ததுமே ஒவ்வொருவரும் பொறுமையைக் கற்றுக் கொண்டு விடுவார்கள். ஒரு கைதி தன் தண்டனை காலம் முடிந்து மற்ற கைதிகளிடம் விடை பெறுவதைக் கண்டேன். அவன் இருபது ஆண்டுகள் தண்டனையை அனுபவித்திருந்தான். அவன் அங்கு வரும்போது வாலிபனாகவும் மனம்போல் பொழுதைப் போக்கியவனாகவும் இருந்தது பல கைதிகளுக்குத் தெரியும். அவன் செய்த குற்றத்தையோ, அடைந்த தண்டனையையோ பற்றி அவன் கவலைப் பட்டதாகவும் காணப்படவில்லை. ஆனால் தண்டனை காலம் முடிந்து விடுதலை பெறும் சமயம் அவன் தலை நரைத்துத் தள்ளாடும் கிழவனாகி

விட்டான். கைதிகள் வசிக்கும் ஆறு கூடங்களுக்கும் அவன் நடந்து வந்தான். ஒவ்வொரு கூடத்தினுள் வரும்போதும் எதிரே இருக்கும் தெய்வச்சிலை முன் மண்டியிட்டு வணங்கி பிரார்த்தனை செய்தான். அவனுடைய பழைய சகாக்களிடம் அவன் மீது ஒரு குறையும் வைத்துக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொண்டான்.

சைபீரியாவில் சிறந்த குடியானவனாக இருந்த கைதியை எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அவனை ஒரு நாள் மாலை வாயில் பக்கம் அழைத்தார்கள். ஆறு மாதங்களுக்கு முன் அவனுடைய மனைவி வேறு ஒருவனை மணந்து கொண்ட செய்தி அவனுக்குக் கிடைத்திருந்தது. அன்று அவன் மனைவி வந்திருந்தாள். அவனைக் காணவும் ஏதோ எடுத்து வந்ததை கொடுக்கவும் அவள் விரும்பினாள். அவர்கள் இருவரும் வாயில் கதவின் அருகில் சந்தித்தனர். சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தனர். கண்ணீர் பெருக்கினர். மீண்டும் சந்திக்கக் கூடாது என்ற தீர்மானத்தில் இருவரும் பிரிந்தனர். அந்தக் கைதி மனைவியை அனுப்பிவிட்டுத் திரும்பி வரும்போது அவனுடைய முகத்தோற்றத்தைக் கவனித்தேன். ஆமாம், சிறைச்சாலையினுள் வந்ததுமே ஒருவன் பொறுமையைக் கற்றுக் கொண்டு விடுகிறான்.

பொழுது சாய்ந்ததும் கைதிகளை அவர்களுடைய இடத்திற்கு அனுப்பி இரவில் அடைத்து வைப்பார்கள். அங்கு மெழுகுவர்த்தி மங்கலாக எரிந்து கொண்டிருக்கும். அதிலிருந்து எழும் நாற்றம் மூச்சுத்திணறச் செய்யும். எனக்கு அங்கு இருக்கவே பிடிக்காது. ஆனால் பத்து ஆண்டுகளை நான் அங்கு எப்படித்தான் கடத்தினேனோ எனக்கே தெரியவில்லை.

இந்தச் சிறைச்சாலையில் நாங்கள் நூற்றி ஐம்பது பேர் இருந்தோம். இந்த எண்ணிக்கை சாதாரணமாக மாறியதே இல்லை. சிலர் புதிதாக வருவார்கள். சிலர் தண்டனை காலம் முடிந்து விடுதலை பெற்றுச் செல்லுவர் அல்லது இறந்து விடுவர். ரஷ்ய நாட்டைச் சேர்ந்த எல்லா வகையானவர்களும் எங்களில் இருந்தனர். காகஸஸ் மலை பகுதியைச் சேர்ந்தவர்கள்கூட இருந்தார்கள்.

எல்லாவகையான குற்றங்களையும் அங்குள்ளவர்கள் செய்திருந்தனர். அவர்களுக்கான தண்டனையும் அவற்றிற்கேற்பவே கிடைத்திருந்தன. ராணுவத்தைச் சேராத நாடுகடத்தப் பட்டவர்களையும், ஆயுள் தண்டனை பெற்றவர்களையும் கடுமையான தண்டனை பெற்றவர்கள் என்று அழைப்பார்கள். அவர்களுடைய சட்டப் பூர்வமான உரிமைகள் அனைத்தும் பறிக்கப்பட்டு விடுவார்கள். தன் இனத்திலிருந்தே

ஒதுக்கப்பட்டவர்கள் என்று அவர்களுடைய முகத்தில் எழுதி ஒட்டியது போலக் காணப்படும். இவர்களுடைய தண்டனை காலமும் எட்டிலிருந்து பன்னிரண்டு ஆண்டுகளாக இருக்கலாம். அதன் பிறகு அவர்கள் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டு சைபீரியாவிலேயே குடியேறி வாழ்வதற்கு அனுப்பப்படுவர்.

எங்கள் சிறைச்சாலையில் ராணுவத்தைச் சேர்ந்த கைதிகளும் இருந்தார்கள். அவர்கள் சட்டப் பூர்வமான எந்த உரிமையையும் இழப்பதில்லை. ரஷ்ய ராணுவச் சட்டப்படி அவர்களுக்குக் குறுகியகால தண்டனையே கிடைக்கப்பெறும். இந்த தண்டனை காலம் முடிந்ததும் அவர்கள் சைபீரியா எல்லைப் படைக்கு அனுப்பப்படுவார்கள். அவர்களில் பெரும்பாலோர் விரைவிலேயே சிறைக்குத் திரும்பி வருவார்கள். இச்சமயம் அவர்கள் செய்த புதிய குற்றங்களுக்குக் குறுகிய கால தண்டனை கிடைக்காது. குறைந்தது இருபது ஆண்டுகளாவது அளிக்கப்படும். அப்போதும் அவர்கள் சட்டப் பூர்வமான உரிமைகளை இழப்பதில்லை.

கடைசியாக ஒரு பிரத்யேகமான கைதிக் கூட்டம் இருந்தது. இந்தக் கைதிகள் ராணுவத்தைச் சேர்ந்தவர்களாகவே இருப்பர். இந்தப் பிரிவினர்களைத்தான் ரஷ்யாவிலேயே மிகவும் மோசமானவகையில் நடத்துவார்கள். அவர்களுக்கு ஆயுள் தண்டனை என்று அளிக்கப்பட்டிருக்கலாம். ஆனால் எத்தனை ஆண்டுகள் தண்டனை, அது எப்போது முடிவடையும் என்பது யாருக்குமே தெரியாது. மேலும் அவர்களுக்கு மிகக் கடினமான வேலைகளே கொடுக்கப்படும். இந்தக் கடின தண்டனை காலம் முடிந்ததும் அவர்கள் சிறைச்சாலையிலிருந்து வெளியில் அனுப்பப்படுவார்கள். அங்கும் அவர்கள் கடுமையான வேலைகளைச் செய்ய வேண்டியிருந்தது. இதனாலேயே மற்ற கைதிகள் கடின தண்டனையை அனுபவித்து முடிந்ததைக் கண்டதும் இவர்கள், ''உங்களுடைய தண்டனை காலம் முடிந்து விட்டது போலத்தான். எங்களுடையதோ இங்கிருந்து வெளியேறிய பிறகும் இருக்கிறது. நாங்கள் விடுதலை பெற இன்னும் பலகாலம் போராட வேண்டும்'' என்று கூறுவார்கள். ஒரு கைதி சாராயம் பருகியிருந்தான். அச்சமயம் அவன் ஐந்து வயதுக் குழந்தையை எவ்விதம் குத்திக் கொன்றான் என்பதை விவரித்தான். இந்தக் கொலை செய்வதற்கு முன் அவன் ஒரு மரப்பாவையைக் கத்தியால் குத்திப் பழக்கப்படுத்திக் கொண்டானாம்.

இந்த சம்பவம் நடைபெற்று வெகு காலமாகி விட்டது. அனைத்துமே எனக்குக் கனவு போலத் தோன்றுகிறது. நான் அந்தச் சிறைச் சாலையினுள் டிசம்பர் மாதத்தில் ஒரு நாள் மாலை சென்றேன்.

அப்போது சூரியன் மறையத் தொடங்கியிருந்தான். கைதிகள் வேலையிலிருந்து திரும்பி வந்தார்கள். மீசை வைத்துக் கொண்டிருந்த சார்ஜெண்ட் ஒருவன்தான், பல ஆண்டுகள் அங்கு தங்கி அனுபவம் பெறுவதற்கான சிறைச்சாலையின் கதவைத் திறந்தான். அங்கு தங்கிய பத்து ஆண்டுகளில் ஒரு கணம் கூட நான் தனிமையில் இருந்ததே இல்லை. எப்போதும் காவல்காரர்கள் இருந்து வருவார்கள். வேலை முடிந்து திரும்பினாலோ என் சகாக்கள் இருப்பார்கள். நான் தனிமையில் இருந்ததே இல்லை.

அங்கு கொலைகாரர்கள், இதையே தம் தொழிலாகக் கொண்டவர்கள், கொள்ளைக்காரர்கள், வழிப்பறிக்காரர்கள் அவர்களின் தலைவன், சாதாரண திருடர்கள்-பலதரப்பட்ட குற்றம் புரிபவர்களும் இருந்தார்கள். அவர்கள் எதனால் இங்கு வந்தார்கள் என்பதே விசித்திரமான காரணமாகத் தோன்றலாம். ஒவ்வொருவருடைய கதையும் வினோதமாகவே இருக்கலாம். அனைவரும் எப்போதும் வருத்தம் தோய்ந்த முகத்துடனேயே காணப்படுவார்கள். அதிகமாகப் பேசமாட்டார்கள். அப்படியே பேசினாலும் குரல் வெளியே கேட்காது. அது பேசுவதையே மறந்துவிட முயற்சிப்பது போல இருக்கும்.

சில கொலைகாரர்கள் இருந்தார்கள். அவர்கள் மகிழ்ச்சியுடனேயே காணப்படுவார்கள். அவர்களுடைய உள்ளம் செய்த குற்றத்தைக் குத்திக் காட்டவில்லை போலத் தோன்றும்.

அவர்கள் ஒன்றுமே அறியாதவர்கள் என்று கூறுவதற்கில்லை. பாதிப்பேருக்கு மேல் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக இருந்தனர். கல்வி, சாதாரண மக்களின் நெறியைக் கெடுத்துவிடும் என்று கூறப்பட்டு வருகிறது. இது தவறானது. கல்விதான் ஒருவனுடைய தன்னம்பிக்கையை அதிகரிக்கச் செய்கிறது.

கைதிகளை பல வகையில் பிரித்திருந்தார்கள். அதே போல ஒவ்வொரு பிரிவுக்கும் வெவ்வேறு விதமான உடை கொடுக்கப்பட்டிருந்தது. சாம்பல் நிறமும் காவியும் சேர்ந்த உடை, வெறும் சாம்பல் நிறம் மாத்திரம், காவி உடை இன்னும் பலவகையான நிறங்களில் உடை கொடுத்திருந்தார்கள். கைதிகளின் தலைகளும் பலவகையாக மொட்டை அடிக்கப்பட்டிருந்தன. சிலருக்குப் பூரணமாக மொட்டை அடித்திருப்பார்கள். சிலருக்கு உச்சியில் மாத்திரம் சிறிது சிகையை வைத்துவிட்டு மற்ற பாகத்தை நீக்கியிருப்பார்கள். வேறு சிலருக்கோ அரைவட்டமாக சிகையை வைத்திருப்பார்கள்.

விசித்திரமான இந்த இனம் ஒரு பெரிய குடும்பம் போலக் காணப்பட்டது. பிரபலமாகவும், கவர்ச்சிகரமான தோற்றத்தை உடையவர்களும்கூட அந்தப் பொதுப்படையான வகையிலேயே காணப்பட்டார்கள். அவர்களுடைய குரலும் ஒரேவிதமாக இருந்தது. சில கைதிகளைத் தவிர மற்ற அனைவரும் எப்போதும் வாடிய முகத்துடனேயே இருந்தார்கள். ஒன்றுமில்லாததற்கும் அவர்கள் அஞ்சி நடு நடுங்கினர். பொறாமை, தற்பெருமை, எளிதில் உணர்ச்சி வசமாதல் ஆகியவற்றுடன் கற்றறிந்தவன் என்ற கர்வமும் இருந்தது. எந்த ஒன்றையும் கண்டதும் ஆச்சரியமடைந்ததாகக் காட்டிக் கொள்ளாததே அவர்களுடைய முதன்மையான நெறியாக இருந்து வந்தது. ஆனால் பெரும்பாலும் பெருமைக்குத் தீங்கு ஏற்படும் சமயம் கர்வம் தலைதூக்கி நிற்காமல் போவதில்லை. அங்கு வலிமையான உள்ளம் படைத்தவர்கள் சிலரும் இருந்தார்கள். அவர்கள் எந்த வகையிலும் பாதிக்கப்படவே இல்லை. ஆடம்பரமும், தோற்றப் பொலிவுமே முக்கியமானதாக இருந்தது.

அங்கு வதந்திகளுக்கும், பின்னால் பேசப்படுவதற்கும் ஒரு எல்லையே இல்லாமல் போய்விட்டது. எங்கள் வாழ்க்கையோ கொடிய நரக வேதனையாக இருந்தது. அப்படியும் அந்த இடத்தின் சட்ட திட்டங்கள், பழக்க வழக்கங்களை மீற ஒருவருக்கும் துணிவு ஏற்படவில்லை. எல்லோரும் பணிந்தே போனார்கள். முரட்டு குணமுள்ள சிலர் மனமின்றி பணிந்தார்கள்.

இந்தக் கைதிகள் சுதந்திரமாக இருக்கும் சமயம் எல்லா சட்ட திட்டங்களையும், எதிர்ப்புகளையும் தகர்த்தெறிந்தவர்களாக இருந்தார்கள். அவர்கள் செய்த குற்றமோ, மனம் குழப்பமடைந்த நிலையிலும் புலப்படாத காரணத்தாலுமே நிகழ்ந்ததாகத் தோன்றிற்று. இவர்களில் சிலருடைய பெயரே பல கிராமம், நகரங்கள் ஆகியவற்றை நடுநடுங்கச் செய்வதாக இருந்தது.

புதிதாக வந்தவன் அங்கு யாரும் திகைப்படையாததைக் கண்டு, தவறான இடத்திற்கு வந்து விட்டோமோ என்று எண்ணுவான். மெள்ள அவனும் கைதி என்ற பட்டத்திற்குத் தகுந்த வகையில் தன்னை அளித்துக் கொண்டு பணிந்து போய் விடுவான். அதன் பிறகு அவன் முகத்தில் அவமானம், வருத்தம் ஆகியவற்றின் அறிகுறியே தென்படாது. அவர்கள் தங்களை அளித்துக் கொள்ளும் போது ''நாம் ஒழிந்தோம். சுயேச்சையாக இருந்த போது நல்ல முறையில் நடந்து கொள்ளவில்லை. அதனால் தொல்லைகளுக்கு உள்ளாகி அவதிப்பட வேண்டியதுதான். தாயார் தகப்பனாருக்குக் கீழ்ப்படிந்து நடக்கவில்லை. இப்போது முரசு கொட்டுபவனுக்கு அடங்கி நடக்க வேண்டியிருக்கிறது'' என்று கூறலாம்.

அங்குள்ள கைதிகளில் ஒருவனாவது தன் குற்றத்தை ஒப்புக் கொள்வானா என்பது சந்தேகம்தான். இந்தக் கலையில் அவர்கள் கைதேர்ந்தவர்கள். அதுவே ஒரு கலையாக வளர்ந்து விஞ்ஞானத்தைப் போல் மிளிரத் தொடங்கிவிட்டது. கேவலப்படுத்திக் கொள்வது சொல்லால் மட்டும் அல்ல. மிகவும் மனதையே நோகச் செய்வதாகவும் இருந்தது. எல்லோருமே பலவந்தம் காரணமாக வேலை செய்தார்கள். அவர்களுடைய மனதிற்கு விரோதமாகவே அங்கு அழைத்து வந்து மற்றவர்களுடன் தள்ளப்பட்டிருந்தார்கள்.

''பேய்தான் நம்மை ஒன்றாகச் சேர்த்து வைத்திருக்கிறது'' என்று அவர்கள் கூறலாம். வம்பளப்பு, சதியாலோசனை, புறம் பேசுதல், விரோதம், பொறாமை, நோய், ஆகிய அனைத்தும் இந்த மோசமான வாழ்க்கையில் தலை தூக்கி நின்றது. இந்தக் கொலைகாரர்களில் சிலரைவிட மோசமான குணமுள்ளவர்கள் இருக்கவே முடியாது. இவர்களுடைய கர்வம் சிதைந்தாலும் மற்றவர்களை அடக்க மாத்திரம் தவறுவதே இல்லை. ஆனால் அதிகாரிகளிடம் பணிந்தே போனார்கள். இது அவர்கள் தங்கள் கடமை என்று கருதியதால் அல்ல, இருசாராருக்கும் சில நன்மைகள் ஏற்பட வேண்டும் என்று கருதியே இவ்விதம் நடந்து கொண்டார்கள்.

அதிகாரிகளும் தங்கள் வரை எச்சரிக்கையாக இருந்தார்கள். எதற்கும் அஞ்சாத ஒரு கைதி இருந்தான். அவனைக் குறித்து அதிகாரிகளுக்கு நன்றாகத் தெரியும். ஏதோ குற்றத்திற்காக அவனுக்குக் கசையடி கொடுக்க அழைத்தார்கள். அப்போது கோடை காலம். எந்த வேலையும் செய்யவில்லை. சிறைச்சாலையிலுள்ள கைதிகளுக்குப் பொறுப்பாக இருக்கும் சிறை அதிகாரி, காவல்காரர்கள் அறைக்கு அருகில் காணப்பட்டான். தண்டனை நிறைவேற்றுவதைக் கவனிக்கவே வந்திருந்தான். சிறை அதிகாரியைக் கண்டாலே கைதிகளுக்குக் குலை நடுக்கம் ஏற்படும். அவனைப் பேய் என்றே கருதினர். எந்த ஒரு விவகாரத்திலும் சிறை அதிகாரி மிகவும் கண்டிப்பாக இருப்பான். சிறையினுள் கால் வைக்கும் போதே அவனுக்கு மூலைமுடுக்குகளில் நடைபெறுவது எவ்விதமோ தெரிந்துவிடும். அவனுக்கு ''எட்டுக் கண்களுடையவன்'' என்று கைதிகள் பெயரிட்டிருந்தார்கள்.

கைதியின் பெயரைச் சொல்லி அழைத்துமே மற்ற கைதிகளின் முகம் வெளுத்து விட்டது. அவன் கசையடியை மௌனமாக ஏற்று நடந்த சம்பவத்தை தத்துவவாதியைப்போல் கருதிவிட்டான். அதிகாரிகளும் அவர்களைப் பொறுத்தவரை அவனை எச்சரிக்கையுடன் நடத்தினார்கள்.

அவன் எப்படியோ தன் சட்டையினுள் கூர்மையான கத்தி ஒன்றை மறைத்து வைத்துக் கொண்டான். அதனால் அச்சமயம் அவனுக்குக் கிடைத்த தண்டனையையும் நேர்மையானதாகக் கருதினான். கூர்மையான ஆயுதங்களை சிறைச் சாலையினுள் வைத்திருக்கக் கூடாது. இதற்காக அடிக்கடி சிறைச்சாலை முழுவதும் சோதனை நடைபெறும். ஆயுதம் கிடைக்கலாம், கிடைக்காமலும் போகலாம். அப்படியே அதிகாரிகளின் கைகளுக்கு அகப்பட்டு எடுத்துச் சென்றாலும் மறுநாளே மீண்டும் ஒன்றைக் கொண்டுவந்து சேர்த்து விடுவார்கள்.

கைதியை அழைத்ததும் எல்லா கைதிகளும் கூடத்திற்கு விரைந்து சென்றார்கள். இடைவெளி மூலம் வெளியில் பார்க்கத் தொடங்கினர். இச்சமயம் அந்தக் கைதி தண்டனையை ஏற்க மறுப்பான். சிறை அதிகாரிக்கும் முடிவு நெருங்கி விட்டது என்று அனைவரும் நினைத்தார்கள். ஆனால் சரியான தருணத்தில் சிறை அதிகாரி தன் கீழ் அதிகாரியிடம் தண்டனையை நிறைவேற்றும் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு வண்டியில் ஏறிக்கொண்டு சென்றான். இதைக் கண்டு மற்ற கைதிகள் கசையடிக்குக் கட்டளையிடப்பட்ட பெட்ராவைக் கடவுள்தான் காப்பாற்றினார் என்று எண்ணினர். பெட்ராவோ மௌனமாகத் தண்டனையை ஏற்றான். சிறை அதிகாரி சென்றதுமே அவனுடைய கோபமும் மறைந்தது.

கைதிகளாக உள்ளவர் ஓரளவுதான் தங்களை அளித்துக் கொள்வார்கள். அந்த அளவை மீறினால் புரட்சி செய்யத் தொடங்குவர். அச்சமயங்களில் இவர்களால் முடியாதது எதுவுமே இருக்காது. ஒருவன் பல ஆண்டுகள் கடுமையான தண்டனையை அனுபவித்திருக்கலாம். சாதாரண ஒருசிறு விஷயத்திற்காக அவன் ஆத்திரமடைந்தால் அதைத் தவறாகக் கருதக் கூடாது. ஆனால் அவ்விதம் நடந்து கொள்பவனை பைத்தியக்காரன் என்றே அழைப்பது வழக்கம்.

என் தண்டனை காலம் முழுவதும் எல்லா கைதிகளையும் கவனித்து வந்தேன். அவர்கள் செய்த குற்றத்திற்காக வருந்துவதாகவோ, அல்லது அதைக் குறித்துச் சிந்திப்பதாகவோ ஒன்றும் காணப்படவில்லை. அவர்கள் மறைமுகமாக ஏதும் தவறு செய்யவே இல்லை என்று நம்பியிருந்தார்கள். இதற்கு ஆடம்பரம், தவறான உதாரணங்கள், துணிவு, பொய்க் கௌரவம் ஆகியவையே காரணங்களாகும். அதே சமயம் நடைபிணங்களுக்குச் சமமான இந்த ஆத்மாக்களின் உள்ளத்தின் ஆழத்தில் மூழ்கி உண்மையை அறிய

முடியுமா? நான் பல ஆண்டுகள் அவர்களைக் கவனித்தும் ஒன்றும் தெரிந்துகொள்ள இயலவில்லை. சிறை தண்டனையும், கடுமையாக வேலை வாங்குவதும் கைதியைச் சீர்திருத்தாது என்பது உண்மைதான். ஆனால் அவர்களுக்குத் தண்டனை அளிப்பதால் சமூகத்தைப் பாதுகாக்க முடியும். சிறையில் அடைத்து, கடுமையான தண்டனையை அளிப்பதால் வெறுப்பே ஏற்படும். அதே சமயம் பொய்யானதை நம்பும்படியும் செய்துவிடும் என்பதில் சந்தேகமே இல்லை. மேலும் அச்செயல் ஒருவனின் வாழ்க்கையைப் பாழ்படுத்தி, உணர்ச்சிகளை அழித்து கடைசியில் ஒன்றுக்கும் உதவாத நடை பிணத்திற்குச் சமமாகவும், செய்த குற்றத்திற்கு வருந்தி திருந்தியதற்கு எடுத்துக் காட்டாகவும் ஆக்கிவிடும்.

ஒருவன் சமூகத்தின் சட்ட திட்டங்களை மீறும்போது அவனுக்குச் சமூகத்தின்மீது வெறுப்பும், அவன் செய்வதே நேர்மையானது என்றுமே தோன்றலாம். அதற்கான தண்டனையை அவன் அனுபவிக்கலாம். அதுவே அவன் செய்த குற்றத்தை மன்னித்து, சீர்திருத்தியதாகவும் அவனுக்குக் காணப்படலாம். அவனை நிரபராதியாகவும் செய்து விடலாம். ஆனால் சில குறிப்பிட்ட குற்றங்கள், உலகம் தோன்றிய காலம் முதல் சட்டபூர்வமான குற்றங்களாகவே கருதப்பட்டு வந்தன. மனிதன் மனிதனாக இருக்கும் வரை அவை அவ்விதமே கருதப்பட்டு வரும் என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வார்கள்.

சிறைச்சாலையினுள் தான் பயங்கரமானதும், இயற்கைக்கு மாறுபட்டதுமான குற்றங்களை, நேர்மையானவை என்று உள்ளமே இல்லாத கொலைகாரர்கள் குழந்தைகளைப் போல் மகிழ்ச்சியுடன் சொல்வதைக் கேட்டேன். பெற்ற தந்தையைக் கொன்ற ஒரு கொலைகாரனை என்னால் மன்னிக்கமுடியாது. அறுபது வயதானவருக்கு அவன் நேர்மையான மகனாக இருந்தான். அரசாங்கத்திலும் ஊழியம் செய்து வந்தான். மோசமான வாழ்க்கை நடத்தியதால் அவன் பெரும் கடனாளியாகிவிட்டான். அவன் செய்யும் தவறைத் தந்தை எடுத்துக் காட்டித் தடுத்தது பயனற்றுப் போயிற்று. அந்தக் கொலைகாரன் தன் தந்தையின்மீது சந்தேகம் கொண்டான். வீடு, நிலம் ஆகியவற்றுடன் தகப்பனார் ஏராளமாகப் பணம் வைத்திருக்கிறார் என்று எண்ணினான். தகப்பனாரைக் கொன்று விட்டால் அவை அனைத்திற்கும் அவனே உரிமையாளனாகிவிடலாம் என்று நினைத்தான். அந்த எண்ணத்தில் தகப்பனாரைக் கொன்றான். ஒரு மாதம் வரை அவன் செய்த கொலை கண்டு பிடிக்கப்படவில்லை.

தகப்பனாரைக் கொன்றவன் உடனே போலீஸுக்குத் தெரிவித்தான். தகப்பனாரை எங்கோ காணவில்லை. அவரைக் கண்டு பிடித்துக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அவன் மாத்திரம் தன் மனம்போன போக்கில் நடந்து கொண்டிருந்தான்.

கடைசியில் கொலை செய்யப்பட்ட தகப்பனாரின் உடலைக் கண்டு பிடித்தார்கள். தலை வேறு முண்டம் வேறாக இருந்ததை ஒன்றாகப் பொருத்தி அடையாளம் தெரிந்து கொண்டார்கள். கொலைகார மகன் தன் குற்றத்தை விசாரணையின்போது ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால் அவனுக்கு இருபது ஆண்டு கடின தண்டனை அளிக்கப்பட்டது. எல்லா உரிமைகளும் பறிக்கப்பட்டன.

அவனை நான் உன்னிப்பாகக் கவனித்து வந்தேன். முட்டாள்தனமாக ஏதோ செய்துவிட்டான். அவனிடம் நான் எந்த ஒரு கொடிய குணத்தையும் காணவே இல்லை. அவனுடைய தகப்பனாரைக் குறித்தும் என்னிடம் கூறியிருக்கிறான். ''உயிர் போகும் வரைகூட என் தகப்பன் என்னிடம் மோசமாக நடந்துகொண்டதே இல்லை'' என்று கூறுவான். தன் குடும்பத்தைப் பற்றியும் பெருமையாகச் சொல்லிக் கொள்வான். அவன் செய்தது சாதாரண குற்றமில்லை. அது விஞ்ஞானத்திற்குப் புலப்படாத ஒரு தவறால் ஏற்பட்டதாகவே எனக்குத் தோன்றியது. அவன் குற்றம் செய்திருப்பான் என்று எனக்குத் தோன்றவே இல்லை. ஆனால் நகர மக்கள் சொன்ன விவரங்களிலிருந்து என் சந்தேகம் அகன்றுவிட்டது.

ஒருநாள் இரவு தூங்கும்போது அவன் ''பிடித்துக் கொள்ளுங்கள். அவனைவிடாதீர்கள். தலையைத் துண்டித்துவிடுங்கள், அவன் தலை, அவன் தலை'' என்று கத்தியதை எல்லா கைதிகளும் கேட்டிருக்கிறார்கள்.

பல கைதிகள் தூங்கும்போது பிதற்றுவார்கள். இது பற்றி அவர்களிடம் கேட்டால் ''இன்று எங்களை அளவுக்கு மீறி அடித்துத் துன்புறுத்தி விட்டார்கள். அந்த வலி பொறுக்காமலே நாங்கள் பிதற்றுகிறோம்'' என்று கூறுவார்கள்.

சிறைச் சட்டப்படி செய்யும் வேலை ஒரு தொழிலைவிடக் கடுமையாக இருந்தது. குறிப்பிட்ட நேரத்திற்குள் செய்ய வேண்டிய வேலையை முடித்துவிட்டுக் கைதிகள் தங்கள் விடுதிக்குத் திரும்பி விடுவார்கள். வேலையை அவர்கள் வெறுத்தார்கள். தன் மனதை ஈடுபடுத்தக் கூடிய ஒரு தொழிலைச் செய்யாமல் சிறையில் உயிர் வாழவேமுடியாது. ஒரு வேலையும் செய்யாமல் சோம்பியிருப்பதே, அவர்கள் முன்பு அறியாத இத்தகைய பயங்கர குற்றங்களைப் புரியத்

தூண்டுகிறது. மனிதன் வேலை செய்யாமலும் சட்டப்பூர்வமான அவனுடைய உடமையைப் பெற்றிராமலும் உயிர் வாழ இயலாது. இவை இல்லாவிட்டால் அவன் சீர்கெட்டு, மிருகமாக மாறிவிடுவான். அதனால் ஒவ்வொரு கைதியும் இயற்கையான தேவைக்காகவும் மனதை ஒரு நிலையில் வைத்திருக்கவும் ஏதாவது ஒரு தொழிலைச் செய்தே தீரவேண்டும்.

கோடை காலத்தில் பகல் நேரத்தில் கைதிகள் கடுமையாக வேலை செய்ய வேண்டும். இரவில் அவர்களுக்குத் தூங்கவும் நேரம் போதுமானதாக இருக்காது. பனிக் காலத்திலோ மாலை இருட்டியதுமே கைதிகளை உள்ளே அடைத்துப் பூட்டிவிடுவார்கள். அந்த நீண்ட இரவுகளில் அவர்கள் என்ன செய்ய முடியும்?அதனால் சிறைச்சாலை ஒரு தொழிற்சாலையாக மாறிவிடும். வேலை செய்வது சட்ட விரோதமானதல்ல. ஆயுதங்களை உபயோகிப்பதுதான் குற்றமாகும். ஆனால் ஆயுதங்கள் இல்லாமல் என்ன தொழில் செய்ய முடியும்? அதனால் வேலைகளை ரகசியமாகச் செய்ய வேண்டும். சிறை வேலையையும் செய்து முடிப்பது மிகவும் அவசியமாகும். இக்காரணத்தால் சிறை அதிகாரிகளும் கைதிகள் வேலை செய்யும் போது உன்னிப்பாகக் கண்காணிக்காமலிருப்பார்கள். புதிதாகச் சிறைச்சாலைக்கு தண்டனை பெற்று வந்த கைதிகளில் பெரும்பாலானவர்களுக்கு ஒரு தொழிலும் தெரியாது. அவர்கள் தங்கள் சகாக்களிடம் கற்றுக்கொண்டு தண்டனை முடிந்து வெளியே செல்லும்போது சிறந்த தொழிலாளிகளாக விளங்குவார்கள்.

செக்கிலி, தையற்காரன், தச்சன், கருமான், முலாம்பூசுபவன் ஆகிய தொழிலாளர்கள் எங்கள் சிறைச்சாலையில் இருந்தார்கள். பொற்கொல்லன்கூட இருந்தான். ஈசய்யா என்ற யூதன் சிறந்த பொற்கொல்லன். அவன் நகைகள் செய்வதில் கைதேர்ந்தவன். நகரத்திலுள்ளவர்களுக்கு வேலை செய்து கொடுப்பதன் மூலம் அவர்கள் நேர்மையான முறையில் பணம் திரட்டலாம். ஈசய்யா பொற்கொல்லன் மாத்திரமல்ல. வட்டிக்குப் பணம் கொடுத்து வந்தான். பணத்தால் ஆகாதது எதுவுமே இல்லை. பணம் இருந்தால் சிறைச் சாலையில் கிடைக்காத பொருள் என்று ஒன்று இருக்காது. சாராயம், புகையிலை மற்றும் தேவையான பொருள்களையும் வாங்கி வந்து சிறைச்சாலையினுள்ளேயே வியாபாரம் செய்வார்கள்.

சிறைச்சாலையினுள் கைதிகள் வேறு வேலை செய்வதும் பணத்தை வைத்திருப்பதும் குற்றமாகும். இக்காரணத்தால் அடிக்கடி சோதனை செய்வார்கள். கிடைத்த பொருள்களை எடுத்துச் சென்று விடுவார்கள். இதனால் பணத்தை மாத்திரம் யாரும் சேமித்து வைக்க

மாட்டார்கள். சாராயம் வாங்கிப் பருகி விடுவார்கள். அல்லது தேவையானவற்றை வாங்கிக் கொள்வார்கள். சேமித்து வைப்பதால் சோதனையின்போது பொருள்கள் அதிகாரிகளின் கையில் அகப்பட்டு அப்புறப்படுத்துவது மாத்திரமல்ல. கைதிகளுக்குத் தண்டனையும் கிடைக்கும்.

தொழில் செய்யாதவர்கள் சிறைச்சாலையில் பணம் திரட்ட வேறு வகைகளைக் கையாள்வார்கள். கைதிகளுக்குத் தேவையானவற்றை ரகசியமாக வாங்கி வந்து வியாபாரம் செய்வார்கள். ஆனால் வெளியில் ஒரு கோபக்கிற்குக் கிடைக்கும் பொருள்களுக்கு அங்கு பத்து கோபக்குக்கும் அதிகமாகக் கொடுக்க நேரிடும்.

கைதிகள் தங்களுக்குள்ளாகவே திருடிக் கொள்வார்கள். இதற்காக அவர்கள் வெட்கப்படவே மாட்டார்கள். ஒவ்வொரு கைதிக்கும் பூட்டுடன் கூடிய ஒரு பெட்டி கொடுத்திருப்பார்கள். ஆனால் சில சமயங்களில் இந்தப் பாதுகாப்பு சாதனம் பயனற்றுப் போகலாம். எத்தகைய பூட்டையும் திறக்கக்கூடிய திருடர்களும் இருந்தார்கள். ஒரு கைதி என்னுடைய வேத புத்தகத்தைத் திருடிவிட்டான். ஆனால் அன்றே அவன் அதை என்னிடம் திரும்ப ஒப்படைத்துவிட்டான். அவன் தவறாகக் கருதி செய்த குற்றத்திற்கு வருந்தியதால் புத்தகத்தைத் திருப்பிக் கொடுக்கவில்லை. நான் எங்கும் தேடியதைக் கண்டே வருத்தமடைந்து கொடுத்தானாம்.

''சாராய வியாபாரி'' என்று பல கைதிகளுக்குப் பெயர் இருந்தது. அவர்கள் சாராயத்தைக் கள்ளத்தனமாகச் சிறைச்சாலையினுள் கடத்தி வந்து நல்ல லாபத்திற்கு விற்று வந்தார்கள். கள்ளக் கடத்தலுக்காகத் தண்டனை பெற்று இங்கு வந்த பலர், அங்கு இருந்தார்கள். அதனால் உன்னிப்பாகக் கண்காணிக்கப்பட்டும் கள்ளக் கடத்தல் செய்வதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. கள்ளக் கடத்தல் செய்வது பெரிய குற்றம்தான். ஆனால் கள்ளத் கடத்தல் செய்பவர்களோ கவிஞர்கள் கவிதை புனைவதைப்போல தங்கள் ஆர்வத்தினால் செய்வதாகக் கருதுகிறார்கள்.

என்னுடன் ஒரு கள்ளக் கடத்தல் செய்பவனும் சிறையில் இருந்தான். அவன் ரஷ்யாவின் மேற்குப் பகுதியிலுள்ள எல்லைப் பிரதேசத்தைச் சேர்ந்தவன். இங்கும் அவனால் தன் கள்ளக் கடத்தல் ஆர்வத்தை அடக்கி வைத்திருக்க இயலவில்லை. அவன் பலமுறை சிறை தண்டனை பெற்றிருக்கிறான். கசையடியும் பட்டிருக்கிறான். அப்படியும் அவன் தன் கலையைக் கலைக்காகவே செய்து கொண்டிருந்தான். கசையடி கிடைத்த சமயம் அவன் பெண்களைப் போல் அழுவான். இனி செய்யமாட்டேன் என்று வாக்குறுதி

அளிப்பான். ஒரு மாதகாலம் அவன் தன் மன ஆர்வத்தை அடக்கிக் கொண்டிருப்பான். பிறகு தன் பழைய தொழிலைச் செய்யத் தொடங்கிவிடுவான்.

கைதிகளுக்கு மற்றொரு நல்ல வழியில் வருமானம் கிடைத்து வந்தது. நிரந்தரமாகவும் தீமையின்றியும் கிடைக்கக் கூடிய வருமானம் பிச்சை எடுப்பதுதான். சமூகத்தில் உயர்ந்த நிலையிலுள்ளவர்கள், வியாபாரிகள், நகர மக்கள், விவசாயிகள் ஆகியோர் அனுதாபம் காரணமாகக் கைதிகளுக்கு ரொட்டி, பணம் முதலியவற்றைக் கொண்டுவந்து கொடுப்பார்கள். இவ்வித அனுதாபங்கள் இல்லாவிட்டால் விசாரணையை எதிர் நோக்கியிருக்கும் ஒரு கைதி உயிர் வாழவே முடியாது.

எங்களுக்கு இவ்விதம் கிடைக்கும் பொருள்களை நாங்கள் பகிர்ந்து கொள்வோம். முதன் முறையாகப் பணம் கொடுக்கப் பட்டது எனக்கு நினைவிலிருக்கிறது. நான் சிறைச்சாலைக்கு வந்து சில நாட்களாகியிருந்தன. ஒரு நாள் காலை வேலையிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தேன். ஒரு மாது தன்னுடன் பத்து வயது பெண்ணையும் அழைத்துக் கொண்டு வருவதைக் கண்டேன். அந்தச் சிறுமி தேவதைபோல் அழகாக இருந்தாள். அவர்களை நான் முன்பு பார்த்திருக்கிறேன். அவள் விதவை. அவளுடைய கணவன் சிப்பாயாக இருந்தான். நான் உடல் நலமின்றியிருக்கும்போது அந்த சிப்பாயும் இதே சிறைச்சாலையில் உயிர் போகும் நிலையில் கிடந்தான். தாயும் மகளும் அவனைக் கண்டு கடைசியாக விடைபெற்றுச் செல்ல வந்திருந்தார்கள். தாயும் மகளும் அழுது புலம்பினார்கள்.

இச்சமயம் அந்தச் சிறுமி என்னைப் பார்த்தாள். உடனே தன் தாயாரிடம் என்னவோ சொன்னாள். தாயார் என்னைப் பார்த்துவிட்டு ஒரு கோபக்கை எடுத்து மகளிடம் கொடுத்தாள். அந்தச் சிறுமி என்னிடம் ஓடிவந்து, ''கர்த்தருக்காக இதை வாங்கிக் கொள்ளுங்கள்'' என்று கூறி, என் கையில் பணத்தை வைத்துவிட்டுச் சென்றாள். அந்த ஒரு கோபக்கை நான் வெகு காலம் வரை அப்படியே வைத்திருந்தேன்.

2

என்னுடைய சிறை வாழ்க்கையின் ஆரம்ப நாட்களும், முதல் சில ஆண்டுகளும் என் மனத் திரையிலிருந்து அகலவே முடியாது. அதைத் தொடர்ந்த ஆண்டுகள் அவ்வளவும் தெளிவாக நினைவில் இல்லை. சில சம்பவங்கள் மனதில் வேதனையை விட்டுச் சென்றன.

ஆனால் எல்லா சம்பவங்களையுமே நேற்று நடந்தது போல நான் நினைவுபடுத்திக் கொண்டேன். இதுதான் இயற்கையானது என்றும் எண்ணுகிறேன்.

முதலில் இந்த வாழ்க்கை எனக்கு திகைப்பை உண்டு பண்ணுவதாகவோ, அசாதாரணமாகவோ, எதிர்பாராததாகவோ தோன்றவில்லை. சைபீரியாவில் நான் காலடி எடுத்து வைப்பதற்கு முன்னதாகவே இந்த வாழ்க்கையை என் கற்பனைத் தறியில் நெய்து உருவாக்கியதாகக் காணப்பட்டது. என்னுடைய வாழ்க்கை எப்படியிருக்கும் என்று நான் கற்பனை செய்து பார்க்க முயன்றேன். ஆனால் வெகு விரைவிலேயே பூதாகரமானதும், நம்ப முடியாததுமான ஒரு கருத்து என் மீது திணிக்கப்பட்டது. வெகு காலம் நான் சிறையில் இருந்த பிறகே இதை நான் உணர்ந்தேன். அளவுக்கு மீறி நான் ஆச்சரியமடைந்தேன். இந்த நிலை எனக்கு தண்டனை காலம் முடிய நீடித்திருந்தது.

முதலில் எனக்குப் பொதுவான வெறுப்பே ஏற்பட்டது. ஆனால் நான் நினைப்பதற்கு மாறாக அங்கு வாழ்க்கை அவ்வளவு கடினமானதாக இல்லை என்று தோன்றியது. விலங்குகள் பூட்டப்பட்டிருந்தாலும் கைதிகள் ஆனந்தமாக ஆடிப்பாடி உலாவி வந்தார்கள். தங்கள் வேலையைச் செய்தார்கள். புகை பிடித்தார்கள். இரவு நேரத்தில் சாராயமும் பருகினார்கள். சிலர் சீட்டும் ஆடினார்கள். வேலையும் அவ்வளவு கடினமானதாக இருக்கவில்லை. கடினமான வேலைகளைச் செய்யும்படி சொல்லுவதாலேயே

அதற்கு கடின தண்டனை என்று அழைப்பதாக நான் நினைத்திருந்தேன். பலவந்தமாகவும் ஒதுக்கித் தள்ள முடியாததாகவும் வேலை அளிக்கப்பட்டு வந்ததாலேயே அதை கடின தண்டனை என்று அழைத்தார்கள்.

விவசாயி இரவும் பகலும் கூட வேலை செய்கிறான். ஆனால் அவன் தனக்காகவும் அவனுக்குப் பயனுள்ளதாகவும் விருப்பத்துடனும் செய்கிறான். கைதியைப் போல் அவன் வருத்தமடைவதில்லை. கைதியோ பலவந்தம் காரணமாகவும் அவனுக்குப் பயன் இல்லாமலும் வேலை செய்கிறான். ஒருவனை அடியோடு ஒழிக்க விரும்பினால் ஒரு குறிக்கோளும் இல்லாத வேலையைக் கொடுத்தாலே போதுமானது என்று நான் நினைத்தேன்.

கடினமான வேலை கைதிக்குப் பயனில்லாமல் போகலாம். அதுவே தனக்கு ஒரு கருத்தை ஏற்படுத்திக் கொள்கிறது. கைதி செங்கல் தயாரிக்கிறான். பள்ளம் வெட்டுகிறான். சுவருக்குச் சுண்ணாம்பு பூசுகிறார்கள். கட்டிடங்கள் கட்டுகிறார்கள். ஒவ்வொரு வேலைக்கும் ஒரு பொருளும் முடிவும் இருக்கிறது. சில சமயங்களில் கைதிகள் தம் வேலையில் முழு கவனத்தையும் செலுத்துகிறார்கள். விரைவாகவும் குற்றமின்றியும் நேர்த்தியாகவும் செய்து முடிக்கிறார்கள். ஆனால் தண்ணீரைக் கொண்டு கொட்டவும், மணலை அரைக்கவும் இது போன்ற வேலைகளைக் கட்டாயமாகச் செய்யச் சொன்னால் அவர்கள் சில நாட்களுக்குள்ளாகவே பல குற்றங்களைப் புரியத் தொடங்குவார்கள். இத்தகைய தண்டனைகள் ஒருவனை சீர்திருத்துவதற்கு மாறாக அவனை சித்திரவதை செய்வதாகவும் பழி வாங்குவது போன்றும் காணப்படும்.

நான் டிசம்பர் மாதத்தில் சிறைச்சாலைக்கு வந்து சேரவில்லை. அதனால் பனிக் காலத்தை விட பல மடங்கு சோர்வை அளிக்கக் கூடிய வெயில் காலத்தில் செய்ய வேண்டிய வேலைகளைக் குறித்து எனக்கு ஒன்றும் தெரியாது. குளிர் காலத்தில் சிறிது வேலை செய்ய வேண்டியிருந்தது. கைதிகள் படகுத் துறைக்குச் சென்று பல பழைய படகுகளை உடைத்தார்கள். கடைகளில் வேலை செய்தார்கள். பொதுக் கட்டிடங்களின் மீதுள்ள பனிக்கட்டிகளை அகற்றினார்கள். பகல் பொழுது குறுகியதாக இருந்ததால் விரைவிலேயே கைதிகள் சிறைச்சாலைக்குத் திரும்பி விடுவார்கள். அங்கு அவர்களுக்குச் சொந்த வேலையைத் தவிர ஒரு வேலையும் செய்ய இருக்காது. கைதிகளில் மூன்றில் ஒரு பகுதியினருக்குச் சொந்த வேலைகள் இருந்து வரும். மற்றவர்களோ படுத்துக் கொள்வார்கள். அல்லது ஒருவருக்கு ஒருவர் சச்சரவு செய்வார்கள். திட்டமிடுவார்கள்.

சாராயம் பருகுவார்கள். சீட்டாடுவார்கள். எதுவும் செய்யா விட்டால் தனிமையையும், சலிப்பையும் போக்க கிழிந்த ஆடைகளையாவது தைப்பார்கள்.

மேலும் சில காலத்திற்குப் பிறகு கட்டாயமாக வேலை வாங்குவதை விட மற்றொரு சித்திரவதை இருப்பதை அறிந்தேன். அதுதான் எல்லாவற்றையும் விட மோசமானது. மற்ற கைதிகளுடன் சேர்ந்து வாழச் செய்வதுதான் அந்த சித்திரவதை. எல்லா இடத்திலும் சேர்ந்து வாழச் செய்வது ஓரளவு கட்டாயமாகவே இருந்து வருகிறது. ஆனால் சிறைச்சாலையில் மற்ற கைதிகளுடன் சேர்ந்து வாழ்வது அத்தகையது அல்ல. இதனால் ஒவ்வொரு கைதியும் மனவேதனை அடைகிறான். ஆனால் இது வெளிக்குத் தெரியாமல் இருக்கலாம்.

சிறைச்சாலையின் உணவு சுமாரானதுதான். ஆனால் இது ஐரோப்பிய ரஷ்யாவின் சிறைகளில் கொடுப்பதை விட சிறந்தது என்று மற்ற கைதிகள் கூறினார்கள். அங்கு நான் சென்றதில்லை. அந்த உணவு வகைகளைப் பற்றி எனக்குத் தெரியாது. எங்களில் பலர் வெளியிலிருந்து உணவுப் பொருட்களை விலைக்கு வாங்கும் நிலையில் இருந்தார்கள். குளிர் காலத்தில் ஒரு பவுண்ட் இறைச்சி ஒரு கோபக். வெயில் காலத்திலோ அதுவே மூன்று கோபக். இத்தகைய பொருட்களை வாங்குவதானால் பணமும் கட்டுப்பாடின்றி கிடைப்பதாக இருக்க வேண்டும். அவ்விதம் இல்லாததால் பெரும்பாலான கைதிகள் கிடைப்பதைக் கொண்டே திருப்தியடைந்து வந்தனர். ரொட்டி நன்றாக இருக்கும். அதை அளவோடு கொடுக்க மாட்டார்கள். கைதிகளில் யாருக்கு அதிகமாக இருக்கிறதோ, அதை மற்றவர்களுக்கு அளித்து விடுவார்கள். கைதிகள் தங்களுக்குள் செய்து கொள்ளும் உதவியாக இதைக் கருத வேண்டும். குழம்போ வெந்நீர் தண்ணீர் போல இருக்கும். அதைப் பல நாட்களுக்கு வைத்திருப்பதால் பூச்சி புழுக்கள் தோன்றி தட்டில் ஊற்றியபோது அவை ஊர்ந்து செல்லத் தொடங்கும். இதைக் குறித்துக் கைதிகள் கவலைப்பட மாட்டார்கள்.

சிறைச்சாலைக்கு வந்த முதல் மூன்று நாட்களும் நான் வேலைக்குப் போக வேண்டியிருக்கவில்லை. புதிதாக வந்தவர்களுக்கு மூன்று நாட்கள் ஓய்வு கொடுப்பார்கள். இரண்டாவது நாள் என்னை விலங்குகளை மாற்றுவதற்காக வெளியில் அழைத்துச் சென்றார்கள். அப்போது எனக்குப் பூட்டப்பட்டிருந்த விலங்குகள் அவ்வளவு வசதியாக இல்லை. சிறைச்சாலை விலங்கோ வேலை செய்வதற்கும், படுத்து உறங்குவதற்கும் தகுதியான முறையில் அணிவிக்கப்படுகிறது.

சிறைச்சாலையின் வாழ்க்கை ஆரம்பமான முதல் நாள் காலை நேரம் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. சார்ஜென்ட் வந்து கதவுகளைத் திறப்பதற்குப் பத்து நிமிஷங்களுக்கு முன்னதாக அருகிலுள்ள காவலாளிகளின் அறையின் வாயிலில் முரசு அடிக்கப்பட்டது. குளிரால் நடுங்கிக் கொண்டே கைதிகள் தங்கள் படுக்கையிலிருந்து எழுந்தார்கள். பெரும்பாலானவர்கள் மௌனமாகவும், தூக்கம் நன்றாக கலையாத நிலையிலும் இருந்தார்கள். சிலர் உடலை அசைத்துக் கொண்டார்கள். மற்றவர்கள் சச்சரவு செய்யத் தொடங்கினர். முரசு முழங்கிய சப்தம் கேட்டதும் எல்லோரும் முகம் கைகால்களைச் சுத்தம் செய்து கொள்ள குழாய் அடிக்கு ஓடினார்கள்.

சிறைச்சாலையைச் சுத்தம் செய்யவும், முகம் கைகால்கள் கழுவவும், குடிப்பதற்காகவும் தண்ணீர் கொண்டு நிரப்ப இரண்டு கைதிகளை நியமித்திருந்தார்கள். இவர்கள் மற்றவர்களைப் போல் வேறு வேலை செய்ய வேண்டியதில்லை.

மற்றவர்களை மகிழ்விப்பதற்காக கைதிகள் தங்களுக்குள் வாய்ச்சண்டை போட்டுக் கொள்வார்கள். இதில் வேடிக்கை என்னவென்றால் அவர்கள் இருவரும் கை கலந்து விடுவார்களோ என்று நினைப்போம். ஆனால் அந்த நிலையை எட்டியதும் சண்டை போடும் இருவரும் வெவ்வேறு பக்கங்களில் சென்று விடுவார்கள். இது ஒரு நடிகன் நாடகம் பார்க்க வருபவர்களின் கைத்தட்டலையும், பாராட்டுதல்களையும் பெற்றவுடன் மேடையினுள் சென்று விடுவது போலத் தோன்றும். இத்தகைய விளையாட்டுச் சண்டையையே நான் முதல் நாள் காலை கண்டேன். கைதிகள் இரண்டு பேர் இந்த விளையாட்டுச் சண்டையைச் செய்து அனைவரையும் மகிழ்ச்சி அடையச் செய்தார்கள்.

முதல் நாள் மாலையே கைதிகள் என்னிடம் நட்பு முறையில் நடந்து கொள்ளவில்லை என்பதை நான் அறிந்தேன். பலர் என்னை வெறுப்புடன் நோக்கியதைக் கண்டேன். என்னிடம் பணம் இருப்பதாகச் சந்தேகப்பட்டுச் சில கைதிகள் என்னைச் சுற்றி வளைய வந்தனர். அளவுக்கு மீறி எனக்கு உதவி செய்யத் தொடங்கினர். பணம், பொருள் ஆகியவற்றை வைத்துப் பூட்ட அதிகாரிகளிடமிருந்து பெட்டியையும் வாங்கி வந்து கொடுத்தனர். அதை எப்படி வைத்துக் கொள்வது என்பதையும் எனக்கு கற்றுக் கொடுத்தனர். கடைசியில் மூவர் என்னிடம் பணம் கடன் கேட்டு வாங்கிச் சென்றார்கள் என்பதைச் சொல்லாமலே தெரிந்து கொண்டிருக்கலாம்.

பட்டம், பதவி, பொருள், உடமைகள் ஆகியவற்றைப் பறித்து சிறைச்சாலையில் அனைவரும் சமம் என்ற நிலையில்

வைக்கிறார்கள். அப்படியும் மற்ற கைதிகள் எல்லாரையும் சமமாக நினைப்பதில்லை. இது வேண்டுமென்றே செய்வதில்லை. இயற்கையாகப் பிறவியிலே ஏற்பட்ட வேற்றுமை உணர்ச்சியாகும். அனைத்தையும் பறிகொடுத்து விட்டு சிறைச்சாலைக்கு வந்த பிறகும் என் போன்ற பெரிய இடத்தைச் சேர்ந்தவர்களை சீமான்களாகவே கருதுகிறார்கள். அதே நிலையில்தான் எங்களை நடத்தவும் முற்படுகிறார்கள். எங்களுடைய துரதிர்ஷ்டத்தை எள்ளி நகையாடுகிறார்கள். முக்கியமாக வேலை செய்யும்போது தான் மிகவும் மனம் வேதனைப்படுகிறது. நாங்கள் அவர்களைப் போல் உடல் வலிமை பெற்றவர்கள் இல்லை. பாரமான பொருட்களை எங்களால் தூக்கவோ நகர்த்தி வைக்கவோ முடியாது. எங்களிலிருந்து மாறுபட்டுள்ள கைதிகளின் நன்மதிப்பைப் பெறுவதே கடினமாக இருந்தது.

பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக நாங்கள் சிலரே இருந்தோம். எங்களைத் தவிர ஐந்து போலந்துக்காரர்களும் இருந்தார்கள். ரஷ்ய பணக்காரர்களை விட இவர்களை மற்ற கைதிகள் அதிகமாக வெறுத்தார்கள். போலந்து தேசத்து சீமான்களான இவர்கள் அரசியல் கைதிகள். அவர்கள் மற்ற கைதிகளிடம் முரட்டுத்தனமாக நடந்து கொள்வதால் அவர்களும் அதே பாடத்தைத் திருப்ப நினைக்கிறார்கள்.

என் சகக் கைதிகளில் சிலருடைய நன்மதிப்பைப் பெற எனக்கு இரண்டு ஆண்டுகள் பிடித்தன. கடைசியில் பெரும்பாலானவர்கள் என்னை நேசித்தார்கள். நான் மோசமானவனில்லை என்றும் கூறினர்.

என்னையும் சேர்த்து ரஷ்ய நாட்டு சீமான்களாக உள்ள கைதிகள் ஐந்து பேர் இருந்தோம். நான் இங்கு வருவதற்கு முன்பே அவர்களில் ஒருவனைக் குறித்துக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவன் மோசமானவன். எத்தகைய இழிவான காரியத்தையும் செய்யக் கூடியவன். மற்றவர்களைக் குறித்து அதிகாரிகளுக்கு புலன் சொல்லக் கூடியவன். ஆரம்பம் முதலே நான் இவனிடமிருந்து விலகி வந்தேன். இரண்டாவது தகப்பனைக் கொன்றவன். இவனைக் குறித்து முன்னமேயே கூறியிருக்கிறேன். மூன்றாவது அசிம் அசிமோவிச். இவன் உயரமாகவும் ஒல்லியாகவும் இருப்பான். எப்போதும் மற்றவர்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருப்பான். பலவீனமான உள்ளம் படைத்தவன். இவனை மற்ற கைதிகள் கேலி செய்வார்கள். ஆனால் முரடன், உடனே சண்டைக்குத் தயாராகி விடுவான் என்ற காரணத்தால் அவனிடம் பயந்து கொண்டிருந்தார்கள்.

அவன் ஆரம்பத்திலிருந்தே மற்ற கைதிகளுடன் நெருங்கிப் பழகிக் கொண்டிருந்தான். ஏதாவது தவறான காரியம் நடைபெற்றால் அது அவனுக்குத் தேவையற்றதானாலும் மௌனமாகப் பார்த்துக்

கொண்டிருக்க மாட்டான். அவனுடைய நேர்மை எளிமையுடன் சேர்ந்து உறவாடியது. கைதிகள் சக கைதிகளிடம் திருடுவதைக் கண்டுபிடித்து அவர்களைச் சீர்திருத்த முயற்சிப்பான்.

சிறையினுள் கால் வைத்த அன்றே அசிம் அசிமோவிச்சிடம் சிநேகமாக இருக்கத் தொடங்கினேன். அவன் தன் கதையைச் சொன்னான்.

ஒரு சமயம் அவன் காகஸஸ் ராணுவப் படையில் உதவி அதிகாரியாக இருந்தான். பல காலம் தரைப் படையில் பணி புரிந்த பிறகு அவன் ஒரு கோட்டையின் பாதுகாப்புப் பொறுப்பை ஏற்றான். அதன் உயர்தர ராணுவ அதிகாரியாக நியமிக்கப்பட்டான். நேசமாக உள்ள ஒரு இளவரசன் ஒரு நாள் இரவு கோட்டையைத் தாக்கினான். அவன் தாக்குதல் முறியடிக்கப்பட்டது. கோட்டையைத் தாக்கியது யார் என்று தெரியாதது போல அசிம் அசிமோவிச் பாசாங்கு செய்தான்.

ஒரு மாதத்திற்குப் பிறகு கோட்டையைத் தாக்கிய அதே இளவரசனை அசிம் அசிமோவிச் விருந்துக்கு அழைத்தான். இளவரசனும் சந்தேகப்படாமல் விருந்துக்கு வந்தான். பிறகு கோட்டை வாயிலை மூடிவிட்டு இளவரசனுடன் விவாதிக்கத் தொடங்கினான். கோட்டையைத் தாக்கியதையும் அதற்குத் தீ மூட்டியதையும் குறிப்பிட்டு அந்தச் செய்கை தகாதது என்றான். கடைசியில் இளவரசனைச் சுட்டுக் கொன்றான். அதன் பிறகு அவன் மேல் அதிகாரிகளுக்கு எல்லாவற்றையும் விவரமாக எழுதினான். உடனே அவனை மேல் அதிகாரிகள் கைது செய்தார்கள். விசாரணை நடைபெற்றது. பன்னிரெண்டு ஆண்டு கடின தண்டனையைப் பெற்று சைபீரியாவுக்கு வந்து சேர்ந்தான். நட்பு முறையிலுள்ள இளவரசனைச் சுட்டது தவறு என்று அவனுக்குத் தெரியும். அப்படியும் அவன் சுட்டு விட்டான். அவன் செய்தது தவறு என்று நான் கூறினேன்.

அதற்கு அவன் ''இளவரசன் என்னுடைய கோட்டையைத் தாக்கி, தீ வைக்கவில்லையா? அவன் செய்கையை பாராட்ட வேண்டும் என்று மேல் அதிகாரிகள் நினைக்கிறார்கள்!'' என்றான்.

அசிம் அசிமோவிச்சின் பலவீனமான உள்ளத்தை மற்ற கைதிகள் கேலி செய்தார்கள். ஆனாலும் அவன் சீரிய முறையில் எல்லாவற்றையும் செய்து முடிப்பதைப் பாராட்டாமல் இருக்கவில்லை. அவனுக்கு எல்லா தொழில்களுமே தெரியும் என்று கூறலாம். எந்த ஒன்றையும் அவனுக்கு கற்றுக் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. பெட்டி, கூடை, விளக்கு, விளையாட்டு பொம்மைகள் - இன்னும் பலவற்றை செய்து நகரத்திற்குக் கொண்டு

போய் விற்று வந்தான். அந்தப் பணத்தில் மாற்று ஆடை, நல்ல படுக்கை , போர்வை முதலியவற்றை வாங்குவான். அவன் நான் வசித்த சிறையிலேயே தான் இருந்தான். ஆரம்பத்திலிருந்தே எனக்கு உதவி செய்து வந்தான்.

வேலைக்கு அழைத்துப் போவதற்கு முன் கைதிகள் இரண்டு வரிசையாக நிற்பார்கள். இரண்டு பக்கங்களிலும் தோளில் துப்பாக்கி தாங்கிய சிப்பாய்கள் காவல் புரிய கைதிகள் வேலைக்குப் புறப்படுவார்கள். கைத்தொழில் நிபுணர்களும் பல உதவியாளர்களும் எங்கள் பின்னால் வருவார்கள். வர்ணங்கள் தயாரிக்கும் தொழிற்சாலையில் அசிம் அசிமோவிச் வேலை செய்து வந்தான். அவனே வர்ணங்கள் தயாரிப்பான்.

விலங்குகள் மாற்றுவதற்கு முன், நான் அசிம் அசிமோவிச்சிடம் கைதிகளைப் பற்றிய என் கருத்தை வெளியிட்டேன்.

பணக்காரர்களாகவும், சீமான்களாகவும் உள்ளவர்களை அவர்கள் விரும்புவதில்லை. முக்கியமாக அரசியல் கைதிகளாக இருந்தாலோ நெருங்கவே மாட்டார்கள். நீங்கள் அவர்களுடைய இனத்தைச் சேர்ந்தவரில்லை. அவர்கள் விவசாயிகளாகவோ, சிப்பாய்களாகவோ இருந்தவர்கள். ஐரோப்பிய, ரஷ்யாவின் கைதிகளோ மோசமானவர்கள். அந்தப் பகுதியைச் சேர்ந்த சிறைச் சாலை, உணவு வகைகள், அதிகாரிகள் ஆகியோரை வாயாரப் பாராட்டுவார்கள். இங்கு பல தரப்பட்டவர்களும் இருக்கிறார்கள். எல்லோரும் ஒரேயிடத்தில் சாப்பிடுகிறார்கள். ஒன்றாகவே படுத்து உறங்குகிறார்கள். இது சிறைச்சாலைதானே? இங்கு அவர்கள் மனதில் தீய எண்ணங்கள் ஏற்பட்டே தீரும் என்றான் அசிம் அசிமோவிச்.

எனக்கு சிறை அதிகாரியைப் பற்றி ஓரளவு தெரியும். அப்படியும் அவனிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பினேன்.

சிறை அதிகாரியைப் பற்றி அவன் விவரமாகச் சொன்னான். சிறை அதிகாரி மிகவும் மோசமான குணமுள்ளவன். அவன் கையில்தான் இரு நூறு பேர்களுடைய விதி இருந்தது. கைதிகளை அவன் தன்னுடைய விரோதிகளாகவே கருதி வந்தான். அதனால் அவன் கைதிகளிடம் சிறு தவறு கண்டாலும் அல்லது தவறே இல்லாவிட்டாலும் கடுமையாக நடந்து கொண்டான். மேலும் அவனைக் கண்டால் கைதிகள் பயந்து நடுநடுங்க வேண்டும் என்று எண்ணினான். அவனிடம் ஒரு நாய் இருந்தது. அது அவனை விட பொல்லாதது. அந்த நாயைப் பார்த்தால் கைதிகளுக்குக் கொடிய நோயைக் கண்டது போன்று அச்சம் ஏற்படும். அவன் கூறுவது போலவே அந்த நாய் நடந்து கொள்ளும். ஒரு சமயம் அந்த நாய்

நோயுடன் படுத்துக் கொண்டது. அதைக் காப்பாற்ற அவன் முழு மூச்சுடன் பாடுபட்டான். பெரிய மருத்துவர்களிடம் காட்டினான். ஒரு பயனுமில்லை.

எங்கள் சிறைச்சாலையில் ஒரு கைதி இருந்தான். அவனுக்கு பிராணிகளுக்கு வரும் நோய்களைக் குணப்படுத்தத் தெரியும். அவனை அழைத்து சிறை அதிகாரி கெஞ்சும் குரலில் 'நீ இந்த நாயைக் காப்பாற்று. உனக்கு என்ன வேண்டுமானாலும் தருகிறேன்' என்றான்.

கைதியோ வஞ்சகமானவன். உண்மையில் அவன் நல்லவன். ஒன்றுமறியாத விவசாயி. ஆனால் சிறை அதிகாரியின் மீதுள்ள கோபத்தை நாயிடம் காட்டி விட்டான். நாயை ஒரு முறை பார்த்து 'இரண்டு நாட்கள் முன்னதாகச் சொல்லியிருந்தால் இதைக் காப்பாற்றியிருக்கலாம். இப்போது காலம் கடந்து விட்டது. என்னால் ஒன்றும் செய்ய முடியாது' என்று சிறை அதிகாரியிடம் கூறினான்.

நாயும் மறுநாளே இறந்து விட்டது.

ஒரு சமயம் சிறை அதிகாரியைக் கொல்ல முயற்சிக்கப்பட்டதாம். ஒரு நல்ல கைதி இருந்தானாம். அவன் பல ஆண்டுகள் சிறையில் வசித்திருக்கிறான். யாரிடத்திலும் பேச மாட்டான். ஓய்வு நேரங்களிலும் இரவிலும் வேத புத்தகத்தை வைத்துக் கொண்டு படிப்பான். ஒரு நாள் அவனால் வேலைக்குப் போக இயலவில்லை என்று கூறப்பட்டது. உடனே இச்செய்தி சிறை அதிகாரிக்குத் தெரிந்தது. சிறை அதிகாரி ஆத்திரமடைந்து ஓடி வந்தான். அப்போது அவன் மீது ஒரு கல் வீசப்பட்டது. நல்ல வேளையாகக் கல் அவன் மீது விழவில்லை. சிறை அதிகாரியின் கோபம் பன்மடங்காக அதிகரித்தது. அவன் அந்த கைதியைப் பிடித்து விசாரித்து கசை அடி தண்டனையும் அளித்தான். தண்டனையும் நிறைவேற்றப்பட்டது.

இது நடந்த மூன்றாம் நாள் அந்த கைதி இறந்து விட்டான். உயிர் போவதற்கு முன் அவன் அனைவரையும் அழைத்து 'ஒருவரிடமும் தனக்குத் தவறான எண்ணம் இல்லை. துன்பத்தை அனுபவிப்ப தற்காக அவ்விதம் நடந்து கொண்டேன்' என்று கூறினான்.

என்னுடைய விலங்குகள் மாற்றப்பட்டு விட்டன. இதன் நடுவே ரொட்டி விற்பதற்காக பலர் அங்கு வந்தனர். அவர்களில் சிறு பெண்களும், யுவதிகளும் கூட இருந்தனர். அந்த சிறு பெண்கள் இப்போது மாத்திரமல்ல. பெரியவர்களான பிறகும் கூட அங்கு ரொட்டி விற்க வருவார்கள் என்று எண்ணினேன்.

ரொட்டி விற்க வரும் பெண்களிடம் கைதிகள் வேடிக்கையாகவும், உண்மையாகவும் கேலி செய்வார்கள். சில பெண்கள் ரொட்டி விற்பதுடன் தவறான வழியிலும் நடந்து கொள்வார்கள் என்று தோன்றியது. ஆனால் இதற்கு கைதிகளிடம்

பணம் வேண்டும். இரண்டாவதாக இடம், நேரம் ஆகியவற்றை முன்பே நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். இவ்விதம் நடைபெறுவது மிகவும் கடினம். அத்துடன் காவல்கார சிப்பாயின் தயவு இல்லாவிட்டால் எல்லாமே கெட்டு விடும். இதை அசிம் அசிமோவிச்சிடம் கேட்டதற்கு அவ்விதம் நடைபெறலாம் என்றான்.

நான் வேலை செய்யத் தொடங்கினேன். என்னுடன் இருவர் இருந்தனர். அனைவரும் செங்கல் சூளையில் வேலை செய்து கொண்டிருந்தோம். அங்கு மோசமான நடத்தையுள்ள ஒருத்தி வந்தாள். அவள் பெயர் செகுண்டா. அவளுடன் அரை கோபக் என்று அழைக்கப்படுபவளும் வந்திருந்தாள்.

இவர்கள் இருவரிடத்திலும் என்னுடன் இருந்த இருவரும் கேலி செய்து மோசமான வகையிலும் மறைமுகமாகவும் பேசிக் கொண்டார்கள். தங்களிடம் பணம் இருப்பதாகவும், காதலிக்கும்படியும் கைதிகள் அவர்களிடம் கூறினர். கையிலும் காலிலும் விலங்குகள், இரண்டு வர்ணங்களில் சொக்காய், நிஜார். தலையோ மொட்டை, காவல்காரர்கள் வேறு இருக்கிறார்கள். இந்த நிலையில் அவர்களுக்கு காதல் விளையாட்டுகள்.

என் வேலை முடிந்து அசிம் அசிமோவிச்சிடம் விடைபெற்று காவல்காரர்கள் பின் தொடர சிறைக் கூடத்திற்குத் திரும்பினேன். என் சகாக்களும் திரும்பிக் கொண்டிருந்தார்கள். பகல் வேளை சாப்பாட்டிற்கு யார் முன்னதாக வருகிறார்களோ அவர்களே சாப்பிடலாம். மேலும் சாப்பிடும் இடம் எல்லோருக்கும் போதுமானதாக இருக்கவில்லை.

நான் சாப்பிடச் சென்றேன். எனக்கு கொடுக்கப்பட்ட குழம்பு சாப்பிடத் தகுதியற்றதாக இருந்தது. அதனால் தேநீரில் ரொட்டியை நனைத்துச் சாப்பிட எண்ணினேன். அவ்விதமே தேநீரையும் வரவழைத்துக் கொண்டேன். என் அருகில் என்னைப் போன்று வீழ்ச்சியடைந்த சீமான் ஒருவனும் உட்கார்ந்திருந்தான்.

கைதிகள் வந்து சென்றார்கள். எங்களுக்கு எதிரில் ஒரு பக்கமாக இருந்த மேஜையின் அருகில் ஐந்து பேர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் சாப்பிட்டுக் கொண்டே எங்களை அடிக்கடி வெறுப்புடன் பார்த்தார்கள். ஒரு போலந்து தேசத்தைச் சேர்ந்த சீமான் என் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டான். உடனே எங்களுக்கு எதிரிலிருந்த கைதிகள் பேசத் தொடங்கினர். உரத்த குரலில் எங்களை மறைமுகமாகக் குறிப்பிட்டு பேசினார்கள். கடைசியாக கஜான் என்பவனைக் குறித்து பேச முற்பட்டார்கள்.

அந்த ஐவரில் ஒருவன் ''இதோ பாருங்கள். கஜான் நன்றாக கள்ளச் சாராயம் பருகி விட்டு தொல்லையில் மாட்டிக் கொள்ளப்

போகிறான். 'எட்டு கண்கள் சிறை அதிகாரி' எந்த நேரத்திலும் இங்கு வரலாம் என்றான்.

அவர்கள் அவனை மறைத்து விடுவார்கள் என்றான் ஒரு கைதி.

''எப்படி? அவன் குடித்து விட்டு சண்டை போடுவானே''

நான் என் அருகிலிருந்த போலந்துக்காரனிடம் அவர்கள் யாரைக் குறித்துப் பேசுகிறார்கள் என்று கேட்டேன்.

'கஜானைக் குறித்துப் பேசுகிறார்கள். அவன் கைதிகளுக்குச் சாராயம் விற்கிறான். பணத்தைச் சேர்த்து சாராயம் வாங்கி வந்து அதை முழுவதும் பருகி விடுவான். மிகவும் மோசமானவன். சாராயம் பருகி விட்டால் மௌனமாக இருக்க மாட்டான். கையில் கத்தியுடன் எதிரில் வருபவர் மீது பாயத் தொடங்குவான்' என்றான் போலந்துக்காரன்.

''இதை எப்படி தடுப்பது''– என்று கேட்டேன்.

''பத்து பன்னிரண்டு பேர் அவன் மீது பாய்ந்து பிடித்துக் கொள்வார்கள். அவன் உணர்வு தப்பும் வரை அடிப்பார்கள். கடைசியில் போர்வையைப் போர்த்திப் படுக்கையில் கொண்டு கிடத்துவார்கள்.

''இவ்விதம் செய்தால் அவன் உயிர் போய் விடாதா?''

''ஒன்றும் ஆகாது. அவன் திடகாத்திரமானவன். எவ்வளவு அடித்தாலும் மறுநாள் வேலைக்குத் தகுதியானவனாக இருப்பான்.''

''தயவு செய்து ஒன்றைச் சொல்லுங்கள். இங்குள்ளவர்கள் வெளியிலிருந்து ரொட்டி வாங்கிப் புசிக்கிறார்கள். அப்படியிருக்க நான் தேநீர் பருகுவதைக் கண்டு பொறாமைப் படுகிறார்களே ஏன்''

''உங்கள் தேநீருக்கும் அவர்கள் பொறாமைக்கும் சம்பந்தமே இல்லை. நீங்கள் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களிடமிருந்து முற்றிலும் மாறுபட்டவர். உங்களுடன் சச்சரவு ஏற்படுவதை அவர்கள் மகிழ்ச்சியுடன் விரும்புவார்கள். இவ்வித தொல்லைகள் உங்களுக்குப் பல இருக்கின்றன. அவர்கள் பேசுவதை நீங்கள் அலட்சியம் செய்ய வேண்டும். எதைப் பற்றியும் கவலைப்படக் கூடாது'' என்று கூறி விட்டு அவன் எழுந்து சென்றான். அவன் கூறியது சில வினாடிகளுக்குள்ளாகவே உண்மையாகி விட்டது.

# 3

கடைசியாக கைதிகளை எண்ணிப் பார்த்த பிறகு ஒவ்வொரு பகுதியின் கதவையும் மூடி விடுவார்கள். பொழுது விடிந்ததும் தான் கதவைத் திறப்பார்கள்.

கைதிகளை ஒரு சார்ஜென்டும், இரண்டு காவல்காரர்களுமே எண்ணிப் பார்ப்பது வழக்கம். சில சமயங்களில் கைதிகளை முற்றத்திற்கு அழைத்து நிறுத்தி எண்ணுவார்கள். ஆனால் பெரும்பாலும் அவர்கள் விடுதியிலேயே சரியாக இருக்கிறார்களா என்று பரிசோதித்து விட்டுப் போவார்கள். நான் சிறைக்கு வந்த அன்று இவ்விதம்தான் நடைபெற்றது. காவல்காரர்கள் எண்ணும்போது தவறி விட்டால் பல முறை திரும்ப திரும்ப எண்ணுவார்கள். அவர்களுடைய சந்தேகம் அகன்றால்தான் அங்கிருந்து போவார்கள். சில சமயங்களில் பல முறை வந்தும் எண்ணிச் செல்வார்கள்.

என் விடுதியில் முப்பது கைதிகள் இருந்தார்கள். படுக்கச் செல்ல நேரமிருந்தால் பொழுது போக்க ஏதாவது செய்வார்கள்.

ஒவ்வொரு விடுதிக்கும் ஒரு கைதியைப் பொறுப்பாக நியமித்திருப்பார்கள். இது அவனது நன்னடத்தையைப் பொறுத்து சிறை அதிகாரி நியமனம் செய்வதாகும். சில சமயங்களில் இந்தப் பொறுப்பேற்றுள்ளவர்கள் கடுமையான குற்றம் புரிந்து அகப்பட்டுக்கொண்டு கசையடி படுவதும் உண்டு.

எங்கள் விடுதிக்கு அசிம் அசிமோவிச் தலைவனாக இருந்தான். விடுதியின் பொறுப்பை ஏற்பவனைத் தலைவன் என்றே அழைப்பது வழக்கம். கைதிகளில் சிலர் தவறாக நடந்து கொள்வார்கள். அச்சமயங்களில் தலைவனாக உள்ளவன் அவர்களைக் கண்டிப்பான். இவ்விதமே தான் அசிம் அசிமோவிச் நடந்து கொள்வான். அப்போது அவன் உள்ளத்தைத் தூய்மையுடன்

வைத்திருக்க இவ்விதம் செய்வதாகத் தோன்றும். பெரும்பாலும் அவன் எதையும் கவனிக்காதவனைப் போல் தையல் வேலையில் ஈடுபட்டிருப்பான்.

நான் சிறைக்கு வந்த முதல் நாள் கவனித்தது உண்மையாயிற்று. கைதிகளைக் குறித்து அவர்களை விட காவல்காரர்களே மிகைப்படுத்தி கூறுகின்றனர். கைதிகள் திடீரென்று ஒருவர் மற்றவருடன் சண்டை போடக் கையில் கத்தியுடன் புறப்படுவார்கள் என்று காவல்காரர்கள் நினைக்கிறார்கள். கைதிகளோ இவ்வித சம்பவங்கள் ஏதும் நடைபெற்று விடக் கூடாதே என்று அஞ்சுகிறார்கள். அவ்விதம் நடைபெற்றாலோ அதனால் ஏற்படும் தொல்லைகளுக்கு ஒரு அளவே இருக்காது. இந்த பயத்திலேயே அவர்கள் நல்ல விதமாக நடந்து கொள்வார்கள்.

கைதிகளிடம் பயப்படாமல் இருப்பவனே சிறந்த காவல்காரன். நல்லவர்களோ தீயவர்களோ கைதிகளை நம்பித் தீர வேண்டும். அவர்களை நம்புவதே அவர்களுடைய நன் மதிப்பைப் பெறச் செய்யும். காவல்காரர்கள் பின் தொடராமல் சிறை அதிகாரி, கைதிகளின் விடுதிகளுக்கு வந்தால் எந்த ஒரு தவறான சம்பவமும் நடைபெறாது. இதை நான் உன்னிப்பாகக் கவனித்திருக்கிறேன். துணிவுடன் வரும் அதிகாரி கைதிகளால் மதிக்கப்படுவான். அந்த அதிகாரி இருக்கும் வரை பயங்கரமான சம்பவம் நிகழ்வதற்கு இடமே இல்லாமல் போய்விடும்.

எத்தகைய கொடிய குணமுள்ளவனும் ஒருவன் மீது கையில் கத்தியுடன் பாயமாட்டான். எதிர்பாராத சம்பவங்கள் நிகழலாம். அதனால் அதிக ஆபத்து ஏற்படாது. இவ்விதம் நான் முன்பே அவர்களுடைய தலைவிதியை நிர்ணயம் செய்து தண்டனை பெற்ற கைதிகளைக் குறித்தே கூறுகிறேன். புது வாழ்க்கையை எல்லோரும் வரவேற்பார்கள். அமைதியாக வாழவே விரும்புவர். கைதிகள் பயங்கரமான குற்றங்களுக்கு இடம் கொடுக்க மாட்டார்கள். சிறு குற்றத்தையும் செய்ய கைதிகள் அஞ்சுவார்கள். அவை அனைத்தும் தண்டனையை எதிர்நோக்கி விசாரணையிலிருக்கும் கைதிகளுக்குப் பொருந்தாது. அவர்களுடைய நிலைமை வேறு விதமானது. இவர்கள் மறுநாள் கிடைக்கப் போகும் தண்டனையைச் சிறிது காலம் ஒத்திப் போடுவதற்காகப் புதிய குற்றம் ஒன்றைப் புரிவார்கள்.

இத்தகைய சம்பவங்கள் நடைபெற்றதை நான் கேள்விப் பட்டிருக்கிறேன். டவுடாவ் என்ற சிப்பாய் இரண்டு ஆண்டு சிறை தண்டனை பெற்று சிறைச்சாலைக்கு வந்தான். அவன் தற்பெருமைக்காரன்; கோழை. இத்தகைய குணாதிசயங்கள் ரஷ்யச்

சிப்பாய்களிடம் இருப்பது மிகவும் அபூர்வம். டவுடாவ் தன் இரண்டு ஆண்டு சிறை தண்டனையை அனுபவித்து விட்டு விடுதலை பெற்று மீண்டும் ராணுவ சேவைக்குச் சென்றான். கடின சிறை தண்டனை அவனை சீர்திருத்துவதற்குப் பதிலாக அவனைக் கெடுத்து விட்டது. விடுதலை பெற்றுச் சென்றவன் மூன்று வாரங்களுக்குள்ளாகவே திரும்பவும் சிறைச்சாலைக்கு வந்து விட்டான். இச்சமயம் பதினைந்து அல்லது இருபது ஆண்டுகள் தண்டனை பெறக் கூடிய வகையில் குற்றம் புரிந்திருந்தான். கொள்ளையில் ஈடுபட்டதுடன் அவன் பெரிய தொல்லையையும் கொடுத்திருந்தான். அவன் மறுநாளே பல ஆயிரம் கசையடி பட வேண்டியிருந்தது. இந்த தண்டனையிலிருந்து தப்பவோ, அதை நிறைவேற்றுவதைச் சில நாட்கள் ஒத்திப் போடவோ அவன் விரும்பினான். அதனால் அதிகாரி வந்ததும் அவன் மீது கையில் கத்தியுடன் பாய்ந்தான். ஆனால் அவனுக்கு ஒரு தீமையும் செய்யவில்லை.

கசையடி, துப்பாக்கி மட்டை அடி ஆகிய தண்டனைகள் மிகவும் பயங்கரமானவை. இதை நான் உடல் நலமின்றி மருத்துவச் சாலையில் படுத்திருந்தபோது கண்டேன். ரஷ்யாவிலேயே மிகவும் இரக்க குணமுள்ளவர்கள் மருத்துவர்கள்தான் என்பது கைதிகளுக்கு நன்கு தெரியும். மருத்துவர்களுக்குக் கொலைகாரனும் நல்லவனும் ஒன்றுதான். எத்தகைய கொடிய குற்றம் புரிந்திருந்தாலும் அவர்கள் பொருட்படுத்த மாட்டார்கள். அவர்கள் தங்களுடைய கடமையை பெரிதாகக் கருதுவார்கள். இதனால் அவர்களிடம் தஞ்சம் புகவே கைதிகள் விரும்புவார்கள். முக்கியமாக தண்டனை பெற்றவர்களை விட விசாரணைக் கைதிகளே மருத்துவர்களின் உதவியை அதிகமாக நாடுவார்கள்.

அந்தப் பயங்கரமான நாள் நெருங்கியதும் கைதிகள் எந்த வகையிலாவது மருத்துவச் சாலைக்குள் சென்று விட முயற்சிப்பார்கள். கசை அடி, துப்பாக்கி மட்டை அடி போன்றவற்றிலிருந்து சில காலம் தப்ப முயற்சிப்பார்கள். ஆனால் மருத்துவ நிலையத்திலிருந்து அவர்கள் விடுவிக்கப்பட்டால் கட்டாயம் மறுநாளே அந்த பயங்கர சம்பவம் நடைபெறும் என்பதை அறிவார்கள்.

கசை அடி, துப்பாக்கி மட்டை அடி போன்றவற்றைப் பெறப் போகும் சில கைதிகள் மற்றவர்களிடமிருந்து தன் மனோ நிலையை மறைக்க முயற்சிப்பார்கள். அவர்கள் ஒருவரிடமும் ஒன்றும் சொல்லாதிருந்தால் ஏதோ தந்திரம் செய்யப் போகிறார்கள் என்று தீர்மானித்துக் கொள்ளலாம். எனக்கு ஒரு கைதியைத் தெரியும்.

வாலிபனான அவன் சிப்பாயாகப் பணி புரிந்தவன். கொலைக் குற்றத்திற்காக அவனுக்கு சிறைவாசமும் அதிக அளவு கசை அடி தண்டனையும் உத்தரவாகி இருந்தது. மறுநாள் கசை அடி தண்டனை நிறைவேற்றப் போகிறார்கள். இது அவனுக்குத் தெரியும். கசை அடி தண்டனையின் பயங்கரத்தை உணர்ந்த அவன் சிந்தித்தான். அடிபடும்போது வலி தெரியாமலிருக்க தந்திரம் செய்தான். சாராயத்தில் மூக்குத் தூளைக் கலந்து பருகி விட்டான். கசை அடி தண்டனையை அனுபவிக்க வேண்டிய கைதிகள் சாராயம் பருகி தன்னை மறந்திருக்கவே முயற்சிப்பார்கள்.

இதற்காக அவர்கள் பல மாதங்கள் அருமையாக உழைத்துப் பணம் சேர்ப்பார்கள். அதிக விலை கொடுத்துச் சாராயம் வாங்குவார்கள். தண்டனை பெறவேண்டிய நாளைக்கு முதல் இரவும் காலையிலும் சாராயத்தைப் பருகுவார்கள். சாராயம் பருகுவதால் கசை அடி கொடுக்கும்போது வலி தெரியாது என்று கைதிகள் பூரணமாக நம்பியிருந்தார்கள்.

முதலில் சாராயத்தில் மூக்குத்தூளைக் கலந்து பருகிய வாலிபனைக் குறித்துச் சொல்கிறேன். அவன் அதைப் பருகிய மறுகணமே ரத்தவாந்தி எடுக்கத் தொடங்கினான். உணர்வற்ற நிலையில் அவனை மருத்துவசாலைக்கு எடுத்துச் சென்றார்கள். ஆறு மாதங்களுக்குள் அவன் இறந்து விட்டான். மருத்துவம் செய்த மருத்துவர்களால் அவனுக்கு என்ன நோய் என்றே அறிந்து கொள்ள இயலவில்லை.

தண்டனையைக் கண்டு மனிதர் அஞ்சி நடுங்குகிறார்கள், கோழையாகி விடுகிறார்கள் என்று கூறினேன். அதே சமயம் துணிவுடன் எதிர்த்து நின்றவர்களையும் கூற விரும்புகிறேன். சிலர் துணிவுடன் ஏற்கிறார்கள். அவர்களுக்குக் கசை அடி, துப்பாக்கி மட்டை அடி ஆகியவற்றால் வலியே எடுக்கவில்லை போலவும் தோன்றுகிறது. நான் மருத்துவ சாலையில் இருந்த போது அங்கு வந்த ஒரு கடின தண்டனை பெற்ற கைதியைக் கண்டேன்.

அவன் பெயர் ஓர்லாவ். ஒரு சமயம் அவன் ராணுவத்தில் சிப்பாயாகப் பணி புரிந்தான். பிறகு வழிப்பறிக் கொள்ளைக்காரனாக மாறிவிட்டான். அவனைக் குறித்து நான் போதுமான அளவு கேள்விப்பட்டிருக்கிறேன். வயதானவர்களையும் குழந்தைகளையும் இரக்கமின்றி கொல்லக் கூடியவன். எதற்கும் துணிந்தவன். பல குற்றங்களைச் செய்துள்ளதாக அவனே ஒப்புக் கொண்டான். சிறைவாசத்துடன் துப்பாக்கி மட்டை அடி தண்டனையையும் அவனுக்கு அளித்திருந்தார்கள்.

தண்டனை அளிக்கப்பட்டு அவனை அன்று மாலை அழைத்து வந்தார்கள். மருந்துவசாலையில் இருள் கவிழ்ந்தது. விளக்குகளும் ஏற்றப்பட்டுவிட்டன. ஓர்லாவின் முகம் வெளுத்திருந்தது. கிட்டத்தட்ட உணர்வு தப்பிய நிலையிலும் இருந்தான். இரவு முழுவதும் அவனுக்கு மற்ற கைதிகள் பணிவிடை செய்தார்கள். துப்பாக்கி மட்டை அடிபட்ட முதுகு கன்னங்கரேல் என்றிருந்தது. அதன் மீது தைலத்தைத் தடவித் தேய்த்தார்கள். அவர்கள் செய்த பணிவிடையானது, தந்தையோ, நன்மையைக் கோருபவனோ ஒருவனுக்குச் செய்வதாகத் தோன்றியது.

மறுநாள் ஓர்லாவ் எழுந்தது மாத்திரமல்ல மருத்துவ சாலையை ஒன்றிரண்டு முறை சுற்றி நடந்தும் வந்தான். இது எனக்கு ஆச்சரியத்தை விளைவித்தது. அவனை மருத்துவ சாலைக்கு அழைத்து வந்தபோது மீண்டும் உயிர் பெற்று எழுந்திருப்பானா என்று எண்ணினேன். அவனுக்கு அளிக்கப்பட்ட தண்டனையின் பெரும் பகுதியை அன்று ஏற்றிருந்தான். இவ்வளவு அதிகமாக துப்பாக்கி மட்டை அடிபட்டால் உயிருக்கே ஆபத்தாக முடியும் என்று மருத்துவர்கள்கூடக் கருதினர். ஆனால் அவன் குறிப்பிட்ட அளவு துப்பாக்கி மட்டை அடிகளில் பாதிக்குமேல் பெற்றும் நல்ல நிலைமையில் இருந்தான்.

ஓர்லாவ் சாதாரண உயரமாக இருந்தான். உடல் நிலையும் அவ்வளவு திடகாத்திரமானது என்று கூறுவதற்கில்லை. பல காலம் சிறை தண்டனையை அனுபவித்து வந்ததால் மெலிந்து போயிருந்தான். விசாரணைக் கைதிகளாக வந்தவர்கள் அவனைக் கண்டு அஞ்சினர். அடிபட்டு உயிரைவிட்டு விடுவானோ என்றும் நினைத்தனர். அப்படியும் ஓர்லாவ் ஒரு தீங்குமின்றி தன் தண்டனையை ஏற்றான். இதற்கு அவனுடைய உடல் வலிமையைவிட உள்ளத்தின் உறுதியே பெரிதும் காணமாக இருந்தது. அவனிடம் பேசிப் பழக வேண்டும் என்று எனக்கு ஆவல் ஏற்பட்டது. சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் அவனை உன்னிப்பாகக் கவனித்து வந்தேன்.

தாபோலக் என்ற பகுதியில் ஒரு கொள்ளைக்காரர்களின் தலைவன் இருந்தான். அவன் பெயர் கொரினாவ். அவனுடைய பெயரைக் கேட்டாலே மக்கள் நடுங்குவர். அவன் திடகாத்திரமானவன். உடல் வலிமையும் தோற்றமுமே அனைவரையும் அஞ்சிப் பதுங்கும்படி செய்தது. கையில் அகப்பட்டவர்களை அவன் கண் இமைக்கும் நேரத்தில் கொன்று போட்டுவிடுவான். பழி வாங்கும் குணமும், செய்தொழிலில் வெற்றிபெற வேண்டும் என்ற எண்ணமும்

அவனிடம் அளவு மீறி இருந்தது. உறுதியான உள்ளம் அவனுக்குப் பிறவியிலேயே ஏற்பட்டது போலத் தோன்றிற்று. கட்டளையிடப்பட்ட கசை அடி தண்டனையில் பெரும் பகுதியை ஏற்றுவிட்டான். இன்னமும் ஓரளவு மீதம் இருந்தது. இதைக் குறித்து அவனிடம் கேட்ட போது ''என் உடம்பு சற்று குணமாகட்டும். நான் மீதி கசை அடியையும் ஏற்றுக் கொள்வேன். அதன் பிறகு என்னை மற்ற கைதிகளுடன் நெர்சின்கிக்கு அனுப்புவார்கள். அப்போது நான் வழியிலேயே தப்பிச் சென்று விடுவேன். நான் சொல்வதை நம்புங்கள்'' என்றான்.

ஐந்து நாட்கள் பொறுத்திருந்தான் கொரினாவ். அவன் செய்த தீரச்செயல்களைப் பற்றிக் கேட்டேன். அவன் எதற்கும் மறைமுகமாகப் பதில் கூறவில்லை. செய்த குற்றங்களுக்காக வருந்துகிறானா? அவனுக்கு உள்ளம் இருக்கிறதா என்பதை நான் அறிய முற்பட்டேன். இதை அவன் உணர்ந்து கொண்டான். உடனே முட்டாள் குழந்தைகளைப் போல நான் நடந்து கொள்வதாக எண்ணி என்னையே உற்றுப் பார்த்தான். அவனுடைய தோற்றம் எனக்காக அனுதாபப்படுவது போலக் காணப்பட்டது. கணத்திற்குப் பின் அவன் வாய்விட்டுச் சிரிக்கத் தொடங்கினான். இதேபோல அவன் என் நினைவு வரும் போதெல்லாம் சிரிக்கலாம்.

கடைசியில் கொரினாவ் மருத்துவ சாலையிலிருந்து அனுப்பப்பட்டான். அப்போதும் அவன் கசை அடிபட்ட முதுகு பூரணமாகக் குணமாகவில்லை. அவன் அங்கிருந்து போகும் சமயம் என்னுடன் கை குலுக்கினான். என் மீதுள்ள மதிப்பு காரணமாகவே அவ்விதம் செய்தான். ஆனால் உண்மையில் அவன் என்னை வெறுத்தான். மறுநாள் அவன் கசை அடி தண்டனைக்குள்ளாக வேண்டும்.

மாலை மங்கியதும் விடுதிகளின் கதவுகள் மூடிப் பூட்டப்பட்டன. திடீரென்று விடுதியினுள் நிலைமை அடியோடு மாறியது. இரவு நேரத்திலேயே என் சகாக்கள் தம் மனப் போக்குப் படி இருப்பார்கள். பகல் வேளையில் அவர்கள் அமைதியின்றி, எதையோ எதிர்பார்த்திருப்பவர்களைப் போல் காணப்படுவார்கள். ஆனால் மாலை மங்கி, கதவுகள் மூடப்பட்டதும் ஒவ்வொருவரும் ஏதாவதுவேலை செய்யத் தொடங்குவார்கள். எல்லோரும் மெழுகுவர்த்திகளை ஏற்றி வைப்பதால் விடுதி முழுவதும் பிரகாசமாக இருக்கும். சிலர் பூட்ஸுகளை பழுதுபார்க்கத் தொடங்குவர். மற்றும் சிலர் உடைகளைத் தைப்பர். ஒவ்வொரு விடுதியிலும் சீட்டுக் கட்டு, மெழுகுவர்த்தி, பாய் ஆகிய மூன்றும்

கட்டாயம் இருந்தே தீரும். இதை வைத்திருப்பவன் சீட்டாட விரும்புபவர்களுக்குக் கொடுப்பான். ஒரு இரவு அதை உபயோகிக்க அவனுக்கு பதினைந்து கோபக்குகள் வாடகை கொடுக்க வேண்டும். கைதிகள் தங்களிடமுள்ள பணம் முழுவதையும் எடுத்து வைத்து சீட்டு ஆடுவார்கள். ஒன்று எல்லா பணத்தையும் இழக்க வேண்டும். அல்லது எல்லோருடைய பணத்தையும் பறிக்க வேண்டும். அவ்விதம் ஆகாதவரை ஆட்டத்தைவிட்டு எழுந்திருக்கவே மாட்டார்கள்.

சிறைச்சாலையினுள்ளும் பிச்சைக்காரர்கள் இருந்தார்கள். இவர்கள் மற்றவர்கள் பாட்டுக்குத் தகுந்த வண்ணம் நடனம் ஆடக்கூடியவர்கள். இத்தகைய பிச்சைக்காரர்களில் ஒருவன் கைதிகள் சீட்டு ஆடத் தொடங்கியதும் வந்தான். உண்மையில் சீட்டு ஆட்டம் அவன் இல்லாமல் நடக்கவே முடியாது. இவன் சீட்டாடுபவர்களுக்குக் காவல் வேலை செய்வான். யாராவது அதிகாரிகள் வருகிறார்களா என்று கவனித்து அறிவிப்பதே இவன் வேலை. இதற்காக இவனுக்கு ஐந்து கோபக்குகள் கொடுக்கப்படும். ஆனால் அவன் இரவு முழுதும் கண்விழித்துக் காவல் புரிய வேண்டும். சிறு தவறு நேர்ந்தாலும் கைதிகள் நிலைமை மோசமாகிவிடும். அவனையும் கைதிகள் ஒன்றும் செய்யாமல் விடமாட்டார்கள்.

சீட்டு ஆடுபவர்களைத் தவிர மற்றவர்கள் தங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தனர். விடுதியில் கதவருகில்தான் என் இடம் இருந்தது. என் தலைப் பக்கம் அசிம் அசிமோவிச் இருந்தான். அவன் சீன விளக்கு ஒன்று தயாரிப்பதில் முனைந்திருந்தான். அந்த விளக்கை நகரத்திலுள்ள ஒருவன் செய்து தரும்படி கேட்டிருந்தான். அவன் விளக்குகளை வெகு நேர்த்தியாகச் செய்வான். வேலை முடிந்ததும் அவன் படுக்கையை விரித்து இரவு பிரார்த்தனை செய்த பிறகு சிறு குழந்தைகளைப் போல் படுத்து உறங்குவான். குறுகிய மனப்பான்மையுள்ளவர்களைப் போலவே அவனும் தன்னை அறிவாளி என்று நினைத்திருந்தான். இவனைப் போன்றவர்கள் இங்கு இருப்பதைவிட வெளியில் வசிப்பதே நல்லது.

என்னுடன் வசித்த மற்ற கைதிகளைக் குறித்தும் சுருக்கமாகக் கூறுகிறேன். என் தலை விதி இவர்களுடன் பல ஆண்டுகள் வசிக்கும்படி செய்தது. இதையேநான் அவர்களைக் குறித்து ஆராய்ந்து அறிய சந்தர்ப்பம் அளித்ததாகக் கருதினேன்.

எனக்கு இடது பக்கத்தில் மலை ஜாதியைச் சேர்ந்த ஆறு பேர் இருந்தனர். அவர்கள் பெரும்பாலும் கொள்ளைக்காரர்கள். அந்த ஆறு பேர்களில் மூவர் டார்டார் இனத்தைச் சேர்ந்தவர்கள். மூவரில் நூரா

என்ற வாலிபனே என்னைக் கவர்ந்தவன். அவன் நடுத்தரமாக உயரமும், கட்டுக் கோப்பான உடலமைப்பும் படைத்தவன். சிகை நல்ல கருப்பாகவும், கண்கள் நீல நிறத்துடனும் சற்று சாய்ந்த மூக்கும் அவனுடைய கவர்ச்சியை அதிகரிக்கச் செய்தது. பல காலம் குதிரை மீது சவாரி செய்ததால் இரண்டு கால்களும் சற்று வளைந்து இருந்தன. உடல் முழுவதும் துப்பாக்கி குண்டு பாய்ந்த காயங்களின் வடுக்கள் காணப்பட்டன.

அமைதியான மலை ஜாதியைச் சேர்ந்தவனாக இருந்த அவன் புரட்சிக்காரர்களுடன் சேர்ந்து ரஷ்யர்களிடம் கொள்ளை அடித்து வந்தான். எல்லோருமே அவனை நேசித்தனர். ஏமாற்றுவது, மது அருந்துவது ஆகிய கீழ்த்தரமான செயல்களை அவன் வெறுத்தான். ஆனால் அதற்காக அவன் யாரிடமும் சச்சரவு வைத்துக் கொள்வதில்லை. சிறையிலிருந்த காலம் முழுவதும் அவன் பிறருக்கு ஒரு தீமையும் செய்ததில்லை. கடவுளிடத்தில் பற்றுதலும் குத்பா போன்ற பண்டிகைகளை முழு மனதுடன் கொண்டாடியும் வந்தான். நோன்பு நாட்களை விட மாட்டான். பிரார்த்தனை செய்ய தவறுவதில்லை. சில நாட்களில் இரவில் கூட பிரார்த்தனை செய்வான். தண்டனை காலம் முடிந்ததும் அவன் மீண்டும் தன் இருப்பிடத்திற்குத் திரும்பிச் செல்வோம் என்ற நம்பிக்கை அவனிடம் இருந்தது. ''நூரா ஒரு சிங்கம்'' என்று அவனுடைய துணிவைப் பாராட்டிக் கூறுவார்கள். நான் வந்த அன்றே அவன் நண்பனாகி விட்டான்.

தாழிஸ்தான் மலை ஜாதியைக் சேர்ந்த மூவர் இருந்தனர். இருவருக்கு அதிக வயதாகி இருந்தது. மூன்றாமவன் வாலிபன். அவன் பெயர் அலி. அவனுக்கு இருபத்திரண்டு வயதுக்கும் அதிக மிருக்காது. என் இடத்திற்குப் பக்கத்திலேயே அவனுடையதும் இருந்தது. அவன் நல்ல அழகன். எதையும் சட்டென்று உணர்ந்து கொள்ளக் கூடியவன். அவனுடைய முகம் பால் மணமும் மாறாத பச்சைக் குழந்தையுடையதைப் போலிருந்தது. அவனைப் பார்த்ததுமே இத்தகைய சகாவை எனக்கு என் அதிர்ஷ்டம்தான் ஏற்படுத்தியது என்று எண்ணினேன். அவனுக்கு ஐந்து சகோதரர்கள் இருந்தனர். அவர்களில் இருவர் ஏதோ தொழிற்சாலைக்கு அனுப்பப்பட்டுவிட்டனர்.

ஒரு நாள் அவனுடைய பெரிய அண்ணன் ஆயுதத்தை எடுத்துக் கொண்டு குதிரை மீது ஏறும்படி கட்டளையிட்டான். மலை ஜாதியினர் சகோதரர்களிடம் மரியாதையுடனும் பணிவுடனும் நடந்து கொள்வார்கள். எதையும் எதிர்த்துக் கேட்க மாட்டார்கள். சொன்னதை

உடனே செய்து முடிப்பார்கள். மேலும் அண்ணனும் போகும் இடத்தைச் சகோதரனுக்குச் சொல்வது அவசியம் என்று கருதுவதில்லை. அவர்கள் அனைவரும் ஒரு பணக்கார அர்மானிய வியாபாரியை வழிப்பறி செய்யவே சென்றார்கள். வியாபாரியை வழியிலேயே மறித்து அவனையும் அவனுடைய ஆட்களையும் கொன்றனர். உடமைகளை கொள்ளையிட்டனர். கொள்ளை கண்டுபிடிக்கப்பட்டு ஆறு சகோதர்களையும் கைது செய்தார்கள். விசாரணைக்குப் பின் அனைவருக்கும் கடினதண்டனை விதித்துச் சைபீரியாவுக்கு அனுப்பினர். அலி சிறுவனாக இருந்ததால் நீதி மன்றம் அவனிடம் அனுதாபம் காட்டி நான்கு ஆண்டுகள் சிறை தண்டனை அளித்தது.

சகோதரர்கள் அவனிடம் தந்தையின் அன்புடன் நடந்து கொண்டனர். அலியின் புன்முறுவல் தவழும் முகமே அவர்களுக்கு மன ஆறுதலாக இருந்தது. அவனை இன்னமும் சிறு பையனாகவும் எந்த ஒரு முக்கியமான விஷயத்தை அவன் முன் பேசக்கூடாது என்றும் கருதினர். அலியைப் பொறுத்தவரை சகோதரர்களிடம் எதிரே நின்று பேசவும் தயங்கினான்.

சிறை தண்டனை பெற்றும் அலி நேர்மையுடனேயே இருந்தான். அவன் எதற்கும் அஞ்சமாட்டான். எந்த ஒன்றையும் மன உறுதியுடன் செய்து முடிப்பான். நடத்தையிலோ தூய்மையான பெண்ணைப் போன்றவன். பணிந்து போகும் குணம் அவனிடம் இருந்தாலும் அவனை யாருமே எதிர்த்து வெற்றிபெற முடியாது. முதலில் அவன் என்னிடம் கொச்சை ரஷ்ய மொழியில் பேசினான். ஆனால் அவனது சகோதரர்களைவிட அவன் மேல் எனலாம். அவர்களுக்கு அதுகூட தெரியாது. என்னுடன் பேசத் தொடங்கிய சில நாட்களுக்குள்ளாகவே அவன் ரஷ்ய மொழியை நன்கு அறிந்து கொண்டான். அவன் அறிவில் சிறந்தவன். மன உறுதிபடைத்தவன். எந்த விஷயத்தையும் விவாதிக்கும் திறமை படைத்தவன். அவனை நான் நன்கு தனிப்பட்ட மனித இனமாகவே கருதினேன். என் நினைவுத் திரையில் அவன் என்றுமே அகலாமலிருந்தான். அவனுடைய நினைவே என்னை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துகிறது. இப்போது அவன் எங்கு இருக்கிறானோ?

சிறைச்சாலைக்கு வந்து சில நாட்கள் சென்ற பின்பு ஒரு நாள் மனவேதனையுடன் நான் என் படுக்கையில் படுத்திருந்தேன். ஏதாவது செய்து கொண்டிருக்கும் அலியும் அன்று வழக்கத்துக்கு மாறாக முன்நேரத்திலேயே படுக்கையில் படுத்துக் கொண்டான். அவனுடைய மூன்று சகோதரர்களும் புனித நோன்பு இருந்து வந்தனர்.

அதனால் அவர்கள் வேலை செய்யவில்லை. அலியோ எதையோ சிந்தித்துக் கொண்டிருந்தான். திடீரென்று அவன் என்னை நோக்கி ''நீங்க ஏதோ கவலையுடன் இருப்பதாகத் தெரிகிறது'' என்றான்.

நான் அவனை ஆச்சரியத்துடன் பார்த்தேன். பிறகு நான் ஒன்றைக் குறித்துக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன் என்பதைக் கூறினேன்.

அலி பெருமூச்சுவிட்டான். பிறகு புன்முறுவல் செய்தான். முத்துப் போன்ற அவனுடைய பற்களின் வரிசை பெண்களைப் பொறாமைப் படும்படி செய்துவிடும் என்பதில் சந்தேகமே இல்லை.

''உன் ஊரில் எப்படிப் பண்டிகையைக் கொண்டாடுவார்கள்? அது எவ்வளவு நேர்த்தியாக இருக்கும் என்றுதானே சிந்தித்துக் கொண்டிருந்தாய்?'' என்றேன் நான்.

''ஆமாம். உங்களுக்கு அது எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டான்.

''அங்கு எத்தகைய மலர்கள் இருக்குமோ? தேவர் உலகத்தைப் போலிருக்கலாம் அல்லவா?''

''தயவு செய்து அதைப் பற்றியெல்லாம் பேசாதீர்கள்.''

''உனக்கு சகோதரி இருக்கிறாளா?''

''இருக்கிறாள். ஏன் கேட்கிறீர்கள்?''

''அவள் உன்னைப் போல் அழகாக இருக்கலாம்.''

''என்னைப் போலா? எங்கள் ஊரிலேயே அவளுக்கு இணையான அழகி ஒருத்தியும் கிடையாது. என் தாயாரும் நல்ல அழகாக இருப்பார்.''

''உன்னை உன் தாயார் நேசிக்கிறாரா?''

''இது என்ன கேள்வி! துயரத்தால் அவர் இறந்தே போயிருக்கலாம். நான் அவருடைய செல்லப் பிள்ளை. மற்ற அனைவரையும் விட என்னை அவர் அதிகமாக நேசித்து வந்தார். நேற்றிரவு என் கனவில் வந்து எனக்காகக் கண்ணீர் பெருக்கினார்'' என்றான் அலி.

அன்றிரவு அதற்குமேல் நாங்கள் பேசவில்லை. அதன் பிறகு நாங்கள் இருவரும் நெருங்கிப் பழகத் தொடங்கினோம். என்னிடம் அவனுக்கு மதிப்பும் மரியாதையும் இருந்தது. எப்போதும் அவன் காகஸஸ் மலைப்பிரதேசத்தையும் அங்கு நடத்தும் வாழ்க்கையையும் பற்றியே பேசுவான். அவனுடைய சகோதர்கள் என்னிடம் பேசிப் பழகுவதைத் தடுக்க வில்லை. அதற்கு மாறாக ஆதரித்தார்கள்.

கைத் தொழிலில் அவனுக்கு ஆர்வம் இருந்தது. என்னிடம் அவன் தச்சு வேலை, தையல் வேலை, செருப்புத் தைப்பது ஆகியவற்றைக்

கற்றுக்கொண்டான். ஒரு நாள் ''நீ ஏன் ரஷ்ய மொழியை எழுதவும் படிக்கவும் கற்றுக்கொள்ளக்கூடாது?'' என்று கேட்டேன்.

''கற்றுக்கொள்ள விரும்பம்தான். ஆனால் யார் கற்றுக் கொடுப்பார்கள்?'' என்று பதிலுக்குக் கேட்டான் அலி.

''நனே கற்றுக் கொடுக்கிறேன்'' என்றேன். அப்படியே கற்றுக் கொடுக்கவும் தொடங்கினேன். என்னிடம் கிறிஸ்துவ வேத புத்தகம் ஒன்றுதான் இருந்தது. இதை வைத்துக் கொள்ள சிறைச் சட்டம் அனுமதிக்கிறது. அந்தப் புத்தகத்தை வைத்துக் கொண்டே அவனுக்கு ரஷ்ய மொழியை போதிக்கத் தொடங்கினேன்.

சில நாட்களுக்குள்ளாகவே அவன் அதை நன்கு படிக்கக் கற்றுக்கொண்டான். சகோதரர்களும் இதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தார்கள். நான் செய்த உதவிக்கு அவர்கள் நன்றி தெரிவிக்கத் தவறவில்லை. தனிமையில் நான் வேலை செய்து கொண்டிருக்கும்போது அவர்கள் வந்து உதவி புரிவார்கள்.

அலி விடுதலையாகிச் சென்ற தினத்தை என்னால் மறக்கவே முடியாது. அவன் என்னைத் தன் சகோதர்களையும்விட அதிகமாக நேசித்தான். விடுதலை பெற்று அங்கிருந்து போகும் சமயம் என்னைத் தனிமையில் அழைத்தான். மறைவான இடத்திற்கு அழைத்துச் சென்று மார்புடன் கட்டித் தழுவிக் கொண்டான். கண்களில் நீர்மல்க ''எனக்கு நீங்கள் பேருதவி செய்திருக்கிறீர்கள். தாயார், தகப்பனார் கூட உங்களைப் போல் அன்பாக நடந்துகொண்டதில்லை. என்னை நீங்கள் மனிதனாக்கி விட்டீர்கள். உங்களை நான் என்றைக்கும் மறக்கமாட்டேன். கடவுள் உங்களுக்கு ஒரு குறைவும் வைக்காமல் பாதுகாப்பார்'' என்றான்.

அவன் யாரையும் கட்டித் தழுவியதும் இல்லை. யார் முன்பும் அவன் கண்ணீர் பெருக்கியதுமில்லை. அன்பில் சிறந்த அலி இப்போது எங்கு இருக்கிறானோ?

போலந்தைச் சேர்ந்த சிலரும் அங்கு இருந்தார்கள். அவர்கள் மற்ற கைதிகளிடமிருந்து பிரிந்தே வாழ்ந்தார்கள். இவர்களில் சிலர் நன்கு கற்றவர்கள். இவர்களுடைய வாழ்க்கையைக் காணும்போது எனக்கு ஒன்று தோன்றுகிறது. சிறைச் சாலையில் உடலைத் தவிர ஆத்மாவை நசுக்குவதே மோசமானது. சமூகத்தில் சாதாரண நிலையிலிருப்பவன் கடின தண்டனை பெற்றுச் செல்வதால் அதிக தீமை இல்லை. அவன் உற்றார் உறவினரை விட்டுப் பிரிந்திருக்கலாம். ஆனால் வெளியில் போலவே அவன் சிறைச்சாலையிலும் கடினமாக உழைக்கிறான். உடல் உழைப்பு அவனுக்கு மன அமைதியை அளிக்கலாம். கல்வி

கற்றவனுகோ நிலைமை தண்ணீரிலிருந்து எடுத்துத் தரையில் போடப்பட்ட மீனுடையதைப் போலாகிவிடுகிறது. சாதாரண நிலையிலுள்ளவனை விட அவன் மனம் அதிகமாக அழுந்தப்பட்டு சொல்லொணாத் துன்பம் அனுபவிக்கிறான்.

எங்கள் சிறைச்சாலையில் ஒரே ஒரு யூதன் இருந்தான். அவனைப் பார்க்கும் போது கோகலினுடைய தாரஸ்பல்பா நவீனத்தில் வரும் யாங்கலே நினைவிற்கு வருகிறது. யூதன் ஈசய்யா ஒல்லியாக உறித்த கோழிபோல இருப்பான். அவனுக்கு ஐம்பது வயதுக்குமேல் இருக்கலாம். அவன் விடுதலைபெற இன்னமும் பன்னிரண்டு ஆண்டுகள் பொறுத்திருக்க வேண்டும். அப்படியும் அவன் ''நான் விடுதலை பெற்று வெளியில் சென்று வசிக்கத் தொடங்கியதும் திருமணம் செய்து கொள்வேன். இதை நான் செய்யாமல் இருக்கவே மாட்டேன்'' என்று கூறுவான்.

நானும் ஈசய்யாவும் நெருங்கிய நண்பர்கள். அவன் சிறந்த பொற்கொல்லன். நகை வேலை செய்வதில் அவன் இணையற்றவன். நகரத்தில் நகை வேலை செய்பவர்கள் இல்லை. அதனால் அவனுக்கு அதிகமாக நகைகள் செய்து கொடுக்கும் வேலை வந்து கொண்டிருந்தது. அதே சமயம் அவன் வட்டிக்குப் பணம் கொடுப்பவனாகவும் இருந்தான். சிறைச்சாலையிலிருந்த எல்லா கைதிகளுமே அவனுக்குக் கடன்காரர்களாக இருந்தார்கள். ஈசய்யா எனக்கும் முன்னதாகச் சிறைச் சாலைக்கு வந்திருந்தான்.

மற்றும் ஒரு வயதானவனும், இரண்டு மூன்று உக்ரோனியர்களும்இருந்தார்கள். இருபத்திரண்டே வயதான ஒருவன் எட்டு பேரைக் கொன்றுவிட்டு ஆயுள் தண்டனை பெற்று இங்கு வந்திருந்தான். கள்ள நாணயம் தயாரிக்கும் ஒரு கூட்டமும், ஒரு கோமாளி வாலிபனும் கூட இருந்தார்கள். மேலும் இங்கேயே எவ்வளவு காலம் முடியுமோ அவ்வளவு காலம் தங்கியிருக்கத் தீர்மானித்த பலரும் இருந்தார்கள். இவர்களை நான் இங்கு வந்த அன்றே கவனித்தேன். அன்று நான் தலைகணிகூட இல்லாமல் கையைத் தலைக்கு வைத்துக் கொண்டு மௌனமாகப் படுத்திருந்தேன். முதல் நாளின் பயங்கரமான எண்ணங்கள் என் தூக்கத்தைப் பறக்கடித்தன. என்னுடைய புதிய வாழ்க்கை அப்போதுதான் ஆரம்பமாகியிருந்தது. இன்னும் எவ்வளவோ போராட்டங்களை நான் எதிர்த்து நின்றாக வேண்டியிருந்தது. எத்தகைய போராட்டங்கள் என்பது எனக்கு ஒன்றுமே தெரியாது.

# 4

**சி**றைச்சாலையை அடைந்த நான்காம் நாளே என்னை வேலை செய்யும்படி கட்டளையிட்டனர். வேலை செய்யத் தொடங்கிய நான் அவ்வளவு பயங்கரமானதாக இல்லாவிட்டாலும் என்னுடைய நிலையைப் பார்க்கும்போது அதை என்னால் மறக்கவே முடியாது. முதலில் ஏற்படும் எண்ணம்தான் முக்கியமானது. விநோதமான பொருள்களைக் குறித்து அறியவேண்டும் என்ற ஆர்வம் அச்சமயமும் இருந்தது.

சிறைச் சாலைக்கு வந்து தங்க ஆரம்பித்த முதல் மூன்று நாட்களும் எனக்கு நரகவேதனையாக இருந்தது. ''அதுதான் என் பிரயாணத்தின் முடிவு'' என்று பலமுறை சொல்லிக் கொண்டேன். ஒரு சிறைச்சாலையில் நான் கைதியாக இப்பொழுது இருக்கிறேன். பல ஆண்டுகள் நான் இங்கேயே தங்கி இருக்கவேண்டும். ஆனால் பல ஆண்டுகள் தங்கிய பிறகு இந்த இடத்தைவிட்டே போக மனமில்லாமலும் போகலாம். இதை யார் சொல்ல முடியும்?

என்னுடைய சகாக்களோ என்னிடம் கடுமையாக நடந்து கொண்டார்கள். ஒரு சமயம் சீமானாக இருந்தவன் தங்கள் சகாவாக மாறியதைக் கண்டு அவர்கள் மகிழ்ச்சியடையவில்லை. அவர்கள் என்னை வெறுத்துத் தள்ளியது சித்திரவதை செய்யத் தொடங்கிற்று. அதனால் என்னுடைய துரதிர்ஷ்டக் கடலின் அடித் தளத்திற்கே சென்று பார்க்கவும் விரைவிலேயே சிறைவாழ்க்கைக்குத் தகுதியானவனாச் செய்து கொள்ளவும் நான் வேலையில் ஈடுபடத் துடி துடித்தேன். என் கண்களுக்கு எதிரேயுள்ள பல்வற்றை நான் கவனிக்கவே இல்லை. ஆனால் தீயவற்றின் மத்தியில் நல்லவை இருப்பதை மாத்திரம் அறிந்தேன். நொந்த என் மனதிற்குச் சிலருடைய முகம் தேற்றுவதாகக் காணப்பட்டது. வெறுப்புடன் காணப்படும் மக்களிடையயே

அசிம்அசிமோவிச் முகமலர்ச்சியுடன் இருந்தான். ''தீயவர்கள் எங்கும் இருப்பார்கள். ஆனால் தீயவர்கள் எங்கு இருக்கிறார்களோ அங்கு நல்லவர்கள் கட்டாயம் இருந்தே தீருவார்கள். நான் விட்டுவந்தவர்களைவிட இவர்கள் மோசமானவர்கள் இல்லை'' என்று எண்ணித் தலையை அசைத்துக் கொண்டேன்.

சுஷிலாவ் என்ற ஒரு கைதி இருந்தான். பல ஆண்டுகளுக்குப் பிறகே அவனை அறிந்தேன். அதன் பின் என் தண்டனைக் காலம் முடியும்வரை நெருங்கிய நண்பர்களாக இருந்தோம். அவன்தான் என் நினைவில் எல்லாருக்கும் முன்னதாக வருகிறான். எனக்காக அவன் பல சிறிய வேலைகளைச் செய்வான். நான் சிறைச்சாலைக்கு வந்ததுமே எனக்குச் சமையல் செய்து கொடுக்க அசிம் அசிமோவிச் ஒருவனை ஏற்பாடு செய்தான். அவன் பெயர் ஓசிப். சிறைச்சாலை உணவு எனக்குப் பிடிக்காவிட்டால் நான் தனியே தயாரித்து உண்ணலாம் என்று கூறப்பட்டது. அதனால் மாதம் முப்பது கோபக் சம்பளத்திற்கு ஓசிப் என் சமையல்காரனாகப் பணிபுரியத் தொடங்கினான்.

ஓசிப்பைத் தவிர கைதிகளுக்கு உணவு தயாரித்துக் கொடுக்க நான்கு சமையல்காரர்கள் இருந்தார்கள். இவர்கள் சமையல் வேலையைத் தவிர வேறு வேலைகள் செய்ய வேண்டியதில்லை. ஓசிப் பல ஆண்டுகள் சமையல்காரனாக இருந்தான். எந்த ஒரு வேலையையும் மறுக்கவே மாட்டான். எப்போதாவது சாராயம் பருகிவிடுவான். அன்று அவன் ஒரு வேலையும் செய்யாமல் திரிந்து கொண்டிருப்பான். அவன் கள்ளக் கடத்தலுக்காகச் சிறைக்கு அனுப்பப் பட்டாலும் ஒரு தவறும் செய்ய மாட்டான்.

தனியே உணவுபெற மாதத்திற்கு ஒரு ரூயிள்தான் செலவாகும். நான் சிறைச்சாலையின் உணவையும் உண்பது வழக்கம். தினமும் ஒரு பவுண்ட் மாமிசம் வாங்கி விடுவேன். சிறைச்சாலையை நல்ல நிலையில் வைத்திருக்கும் விடுதியின் தலைவனாக உள்ளவனே கடைத் தெருவிற்குச் சென்று சாமான்களை வாங்கி வருவான். சாராயத்தைத் தவிர மற்ற அனைத்தையும் அவர்கள் வாங்கி வருவார்கள்.

ஓசிப் எனக்காகப் பல ஆண்டுகள் இறைச்சியை சமையல் செய்து கொடுத்து வந்தான். இத்தனை ஆண்டுகளில் நான் அவனிடம் இரண்டு அல்லது மூன்று சொற்களுக்கு மேல் பேசியே இருக்கமாட்டேன். அவனைப் பேச வைக்கப் பல முறை முயற்சித்தேன். ஆனால் அவனோ புன்முறுவலைத் தவிர வேறு ஒன்றும் பேசாமல் அங்கிருந்து சென்று விடுவான்.

சுஷிலாவ் எனக்குப் பல வகையில் உதவி புரிந்து வந்தான். அவனிடம் நான் எதையும் சொன்னதே இல்லை. அப்படியும் அவன் என் உடைகளைத் துவைத்துக் கொடுத்து வந்தான். கைதிகள் தங்களுடைய உடைகளைத் தாங்களே துவைத்துக் கொள்வார்கள். சுஷிலாவ் எனக்குச் செய்யும் உதவிக்காக நான் என் பழைய உடைகளைக் கொடுப்பேன். பணமாகவும் கொடுப்பது உண்டு. இவற்றை அவன் ஒன்றும் சொல்லாமல் வாங்கிக் கொள்வான். அவன் என்ன தொழில் செய்தவனாக இருந்த போதிலும் என்னிடம் நேர்மையாக நடந்து கொண்டான். சீட்டாடுபவர்களுக்கு இரவு முழுதும் காவல் புரிந்து ஐந்து கோபக் பெறுபவர்களில் சுஷிலாவும் ஒருவன். இவன் சிறைச்சாலைக்கு அழைத்து வரப்பட்ட சமயம் வேறு ஒருவனுடைய சிவப்பு நிறச் சட்டையை தன்னுடையதற்கு மாற்றிக் கொண்டான். இதற்காக அவனுக்குச் சிறிது பணம் கிடைத்தது. ஆனால் அந்தச் சிவப்புச் சட்டைக்காரனுடைய பெயரையும் தண்டனையையும் இவன் ஏற்க வேண்டியதாயிற்று. இதை மற்ற கைதிகள் கேலி செய்வார்கள். இவ்விதம் வழியில் நடைபெறுவதும் வழக்கம் என்று கூறப்பட்டது. நான் இதை நம்பவில்லை. ஆனால் பிறகு உண்மை என்று அறிந்து கொண்டேன்.

சுஷிலாவை, தன் சிவப்புச் சொக்காயையும் பணத்தையும் கொடுத்தவன் நன்றாக ஏமாற்றி விட்டான். அவன் பிரத்யேகப் பகுதிக் கைதி என்று கூறியிருந்தான். இந்தப் பிரத்யேகப் பகுதி என்பது பலருக்குத் தெரியாது. ஆனால் இவர்கள் மிகவும் பயங்கரமான குற்றவாளிகள் என்று பிறகு அறிந்தேன். சிவப்புச் சொக்காயை மாற்றிக் கொண்டதால் சுஷிலாவ் ஆயிரம் கசை அடிபட வேண்டியதாயிற்று. இவ்விதமே எளிய தண்டனை பெற்றவர்கள் ஏமாற்றப்பட்டு கடின தண்டனையை பெற்றார்கள். சுஷிலாவ் இவ்விதமே பலமுறை செய்து கடின தண்டனையைப் பெற்றிருக்கிறான். அதே சமயம் என்னிடம் நெருங்கியும் பழகி வந்தான். நான் இதை உன்னிப்பாகக் கவனித்து வந்தேன். ஒரு நாள் ஏதோ வாங்கிவரக்கொடுத்த பணத்தை அவன் எடுத்துச் சென்றான். பொருளை வாங்கிவரவில்லை. இதற்காக அவனைக் கண்டித்தேன். உடனே அவன் அங்கிருந்து சென்றான். இரண்டு நாட்கள் வரை என் முன் வரவே இல்லை.

நான் கூறியவை அவன் மனதைப் புண் படுத்தியிருக்கலாம் என்று என்னால் நம்பவே முடியவில்லை. வாசிலியாவ் என்பவனுக்கு சுஷிலாவ் சிறிது கடன் கொடுக்க வேண்டும். அந்தக் கடனை அவன் திரும்பக் கொடுக்கும்படி வற்புறுத்தி வந்தான். இதை என்னிடம்

சொல்லிப் பணம் கேட்க சுஷிலாவ் வெட்கப்பட்டான். அவனுடைய நிலைமையை உணர்ந்த நானே பணத்தை எடுத்து அவன் முன் வைத்தேன். ''இதை எடுத்துக் கொள்'' என்றேன்.

அவன் தன் சம்பளத்தில் முன்னதாகவே என்னிடம் பணம் வாங்கியிருந்தான். அதனால் என்னிடம் கேட்க அவனுக்கு அச்சமாக இருந்தது. ஆனால் நானே அவனுக்குப் பணம் கொடுக்க முன் வந்ததைக் கண்டதும் அவன் மகிழ்ச்சியடையவில்லை. என்னையும் பணத்தையும் ஒரு முறைப் பார்த்துவிட்டு அங்கிருந்து சென்றான்.

நான் அவனைப் பின்தொடர்ந்து சென்றேன். அவன் இரும்புக் கிராதிகளின் அருகில் போய் நின்று கொண்டான்.

''சுஷிலாவ் உனக்கு என்ன ஆகிவிட்டது?'' என்று கேட்டேன்.

அவன் என்னைத் திரும்பிப் பார்த்தான். ஆச்சரியப்படும் வகையில் அவன் கண்களில் நீர் வழிந்து கொண்டிருந்தது. அவன் தழுதழுத்த குரலில் ''நான் உங்களுக்குப் பணத்திற்காகவா வேலை செய்து வந்தேன் என்று நினைக்கிறீர்களா? உண்மையில்....'' என்றான்.

அவன் மீண்டும் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு அழத் தொடங்கினான். இத்தகைய சிறைச் சாலையில் ஒரு கைதி அழுததை அன்றுதான் முதன் முறையாகக் கண்டேன். மற்றவர்கள் அவனைத் துன்புறுத்தினார்கள். அப்படியும் அவன் அமைதியான வகையிலேயே வாழ்ந்து வந்தான்.

என்னால் சிறைச்சாலையில் நடைபெறும் பலவற்றை முதலில் அறிந்து கொள்ள இயலவில்லை. பல ஆண்டுகளுக்குப் பிறகே தெரிந்து கொண்டேன். எனக்கு ஒவ்வொன்றையும் அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் இருந்தது. இதை முன்பே கூறியிருக்கிறேன். இந்த ஆர்வம்தான் ஒருவனைத் தெரிந்துகொள்ள உதவியாக இருந்தது. அவன் பெயரை முழுவதுமாக நான் கூறவிரும்பவில்லை. அதனால் அவனை ஏலி என்று குறிப்பிடுகிறேன். இவன் எனக்குச் சில நாட்களுக்கு முன் சிறைக்கு வந்திருந்தான். இவனாலேயே என் சிறை வாழ்க்கையின் ஆரம்ப நாட்கள் மோசமாகிவிட்டன. இவனை இங்கு சந்திப்போம் என்று எனக்கு முன்பே தெரியும். அவனைக் குறித்துச் சிறிது விவரிப்பது முக்கியமாகும்.

மனித இனத்திலேயே மிகவும் மோசமான குணமுள்ளவர்களுக்கு இவன் உதாரணமானவன். வாலிபனான இவன் ஒரு சமயம் நல்ல நிலையில் இருந்தான். பீட்டர்ஸ்பர்க் நகரத்திற்குப் படிப்பதற்காக இவன் வந்தான். அங்கு அவன் மோசமான வாழ்க்கை நடத்தத் தொடங்கினான். அவனுடைய பெற்றோர் இதை அறிந்து வருந்தினர்.

பணத்திற்காக இவன் போலீஸுக்கு உளவாளியாக மாறினான். சில வெள்ளி நாணயங்களுக்காகப் பல உயிர்களை அவன் விற்றான். சிலரிடம் பெருமை பேசிப் பலரை ஏமாற்றினான். மோசமான தெருக்களில் சுற்றி அலைந்தான். அவனுடைய செய்கை அவன் மனதைக் குத்திக் காட்டவில்லை. கடைசியாக அவன் கைது செய்யப்பட்டு, பத்து ஆண்டு சிறை தண்டனை பெற்று இங்கு வந்து சேர்ந்தான். இங்கும் அவன் தன் வேலையை விடவில்லை. கைதிகள் செய்யும் தவறுகளை சிறை அதிகாரிக்கு உளவு சொல்லும் வேலையைச் செய்து வருகிறான்.

இவனைப்போல பல உளவாளிகள் சிறைச்சாலையினுள் இருந்தார்கள். ஆனால் அவர்கள் ஏலியைவிட நட்புடன் இருந்து வந்தார்கள். மது அருந்துவதே தம் பொழுதுபோக்காகக் கொண்டுள்ள சிறை அதிகாரியின் நட்பு அவனுக்குக் கிடைத்தது ஒரு வகையில் நன்மையாகவும் இருந்தது. ஏலி சிறந்த ஓவியன். இதை அவன் சிறை அதிகாரியிடம் தெரிவித்து அவனுடைய உருவப் படத்தை வரைந்து கொடுப்பதாகவும் கூறினான்.

சிறை அதிகாரிக்கும் தம் உருவப் படத்தை வரைந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வம் இருந்தது. அதனால் ஏலி கூறியதற்கு இணங்கினான். ஒரு ஆண்டு காலம் உருவப் படத்தை வரைய உட்கார்ந்த பிறகு ஏலி தன்னை ஏமாற்றிவிட்டான் என்பதை உணர்ந்தான் சிறை அதிகாரி. உடனே ஏலியை நன்றாக அடித்துக் கடினமான வேலையைச் செய்யக் கட்டளையிட்டான். அதன் பிறகு ஏலி காரணமாக அதுவரை துன்புறுத்தி வந்த ஒரு கைதியைத் தொல்லை கொடுக்காமலிருக்கத் தொடங்கினான். அந்தக் கைதியை நல்ல நிலைமையில் வைக்கவும் முற்பட்டான்.

சிறைச்சாலைக்கு வந்த முதல் மூன்று நாட்களும் நான் ஒன்றும் செய்யவில்லை. சிறைச்சாலை முழுவதும் சுற்றி அலைந்தேன். அல்லது படுத்துக் கொண்டே பொழுதைப் போக்கினேன். சிறை அதிகாரிகள் கொடுத்த துணியில் சொக்காய் தைக்க ஏற்பாடு செய்தேன். அசிம் அசிமோவிச் ஆலோசனையின் பேரில் மடக்கும் கட்டிலையும் தலையணி, மெத்தை ஆகியவற்றையும் வாங்கினேன். எல்லாவற்றையும் வாங்கிவர அவனே உதவி செய்தான். அவன் மூலமே சிறு துண்டுத் துணிகளால் தயாரிக்கப்பட்ட போர்வையும் வாங்கினேன்.

கைதிகள் பழைய சொக்காய், நிஜார் ஆகியவற்றை விற்றுவிடுவார்கள். இது எனக்கு ஆச்சரியத்தை விளைவித்தது. சாதாரண மக்களிடையே கலந்து பழகத் தொடங்கும்போது பல

விஷயங்கள் திகைப்பை உண்டு பண்ணுகிறது. நானும் சாதாரணமானவன்தான், ஒரு கைதிதான் என்பதை உணர்ந்து கொண்டேன். அவர்களுடைய பழக்க வழக்கங்கள், எண்ணம், ஆலோசனை ஆகிய அனைத்தும் என்னுடையதாகக் கருதினேன். இங்கு நடைபெறும் ஒவ்வொன்றையும் முன்பே பலர் சொல்லிக் கேட்டிருக்கிறேன். ஆனால் பிறர் சொல்வதற்கும் நேரில் பார்த்துத் தெரிந்து கொள்வதற்கும் பெரிய வேற்றுமை இருக்கிறது.

சிறைச்சாலையில் பணம் பெரிய சாதனை புரிவதாக முன்பே கூறியிருக்கிறேன். பணம் இருப்பவனை விட இல்லாத கைதி பத்து மடங்கு அதிகமாகத் துன்பப்படுகிறான். ஆனால் சிறைச் சாலையின் சட்டப்படி எந்தக் கைதியும் பணம் வைத்திருப்பது குற்றமாகும். அப்படியும் கைதிகளுக்குப் பணத்தின் மீது பேராசை இருந்து வருகிறது. உடல் உழைப்பாலோ அல்லது பிறர் கொடுப்பதன் மூலமோ ஒரு கைதி பணத்தைச் சேர்த்து வைத்தால் அதை வேறு ஒரு கைதி திருடிக் கொண்டுபோய்விடலாம். இது அவன் சிறு குழந்தை வேண்டுமென்றே செய்யும்குற்றமாக இருக்கலாம். ஆனால் நோய் வாய்ப்பட்ட சமயத்திலும் பைத்தியக்கார எண்ணங்கள் ஏற்படும் போதும் கைதிக்கு பணம் முக்கியமாகத் தேவைப்படுகிறது. பணத்தை அவன் வீசி எறிந்தால் அவன் எதை விலைமதிக்க முடியாததாக கருதுகிறானோ அது தானாக வந்து சேர்ந்து விடும்.



பணத்தைவிட கைதிகளுக்கு மிகவும் முக்கியமானது விடுதலை அல்லது விடுதலையைப் பற்றிய கனவுகள். இருபது ஆண்டுகள் தண்டனை பெற்ற கைதிகூட ''கடவுளின் அருளால் தண்டனை காலம் முடிந்து விட்டது'' என்று கனவு காண்பார்கள். கைகளிலும், கால்களிலும் விலங்குகள் பூட்டப்பட்டு, கடவுளின் உலகத்திலிருந்து அப்புறப்படுத்தி ஒரு இடத்தில் அடைத்து வைத்திருக்கும்போது அவன் பணத்தைச் செலவு செய்தால் மனதின் சுதந்திரத்தையே பெரிதாக நினைக்கிறான் என்று தீர்மானிக்க வேண்டும்.

ஒரு கைதி பல ஆண்டுகள் அமைதியாக இருந்து வருகிறான். அவனுடைய நல்ல நடத்தைக்காக அவனை ஒரு விடுதியின் தலைவனாகவும் செய்கிறார்கள். அப்படியும் அவன் எந்த ஒரு காரணமுமின்றி தொல்லை கொடுக்கத் தொடங்குகிறான். சக கைதிகளை அடிக்க முற்படுகிறான். யாரையாவது கொன்று விடுகிறான்– இதற்கு என்ன காரணம் என்று அதிகாரிகளாலும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒருவனை உயிருடனேயே சவப்பெட்டியினுள்ளே வைத்து ஆணி அடித்துவிடுகிறார்கள். அவன் அதனுள்ளிருந்து வெளியேற முயற்சிக்கிறான். அந்த முயற்சி

பயனற்றது என்பதும் அவனுக்குத் தெரியும். அப்படியும் அவன் தன் முயற்சியை விடுவதில்லை. இதற்கெல்லாம் முக்கியமான காரணம் இதுதான். சிறைச்சாலையில் எந்த ஒன்றும் குற்றமாகக் கருதப்படுகிறது. ஒருவன் ஒருமுறை குற்றம் செய்யத் தொடங்கிவிட்டால் அவனைத்திருத்தவே முடியாது. ஆனால் அவனை அவ்விதம் செய்யவிடாமல் முதலிலேயே பார்த்துக் கொள்வது நல்லது. அவ்விதம் நடந்து கொண்டால் எல்லோருமே நலமாக இருக்கலாம்.

ஆனால் அதை எவ்விதம் செய்வது?

# 5

நான் சிறைச்சாலைக்கு வரும் சமயம் என்னிடம் சிறிது பணம் இருந்தது. ஆனால் அதை சர்க்கார் பறித்து விடுமோ என்று அஞ்சினேன். அதனால் என்னுடைய வேத நூலின் அட்டையினுள் வைத்து ஒட்டிவிட்டேன். வேத நூல் ஒன்றுதான் சிறைச்சாலையில் வைத்திருக்கலாம். இந்த பணத்துடன் கூடிய புத்தகத்தை பல ஆண்டுகளுக்கு முன் தவலங்கில் நாடு கடத்தப்பட்டவர்கள் எனக்குப் பரிசாக அளித்தார்கள். அவர்கள் என்னைப்போன்ற ஒவ்வொரு துரதிர்ஷ்டம் பிடித்தவனையும் ஒரு சகோதரனாகக் கருதி வந்தனர்.

சைபீரியாவில் பிறருக்கு உதவி செய்வதையே தம் வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்ட மக்கள் எப்போதும் இருந்தார்கள். என்போன்ற துரதிர்ஷ்டம் பிடித்தவர்களைத் தங்களுடைய மக்களைப்போல் கருதினார்கள்.

எங்களுடைய சிறைச்சாலையிருக்கும் நகரத்தில் நான் நாட்ஸயா என்ற பெண்மணியைச் சந்தித்தேன், அவரை என்னால் மறக்கவே முடியாது. எல்லா கைதிகளுக்கும் அவரை நன்றாகத் தெரியும். நாடு கடத்தப்பட்டவர்கள், எங்களைப் போல் சிறை தண்டனை அடைந்தவர்கள் ஆகியோருக்கு உதவி செய்வதை அவர் தம் லட்சியமாகக் கருதிவந்தார். அவருடைய குடும்பத்தில் யாராவது ஒருவருக்கு எங்களைப் போன்ற துரதிர்ஷ்டம் ஏற்பட்டிருக்கலாம். அது எப்படியானாலும் எங்களைப் போன்றவர்களுக்கு அவர் உதவி செய்வதில் பெருமகிழ்ச்சியடைந்து வந்தார். எங்களுக்கு அடிக்கடி செய்திகள் சொல்லி அனுப்புவார். சிறைச்சாலையில் அதுதான் கிடைக்க முடியாத பொருள். நான் நகரத்திற்குச் செல்லும் போதெல்லாம் அவரைச் சந்திக்காமல் இருக்க மாட்டேன்.

ஒருநாள் பக்கத்து நகரத்துக்குப் போக நான் புறப்பட்டேன். முதலில் நாட்ஸயாவின் இல்லத்திற்குச் சென்றேன். என்னுடன் மற்றொரு கைதியும் இருந்தான். இருவரையும் அவர் அன்புடன் வரவேற்றார்.

அவர் ஏழை, அவரால் எங்களுக்கு அதிகமாகக் கொடுக்கமுடியாது. ஆனால் ஆயிரக்கணக்கான ரூபிள்கள் இருந்தாலும் எங்களுக்குக் கொடுத்து விடுவார் என்பதில் சந்தேகமே இல்லை. கட்டையில் செய்த இரண்டு சிகரெட்டுகள் வைக்கும் வட்டியை எடுத்து வந்து எங்களிடம் கொடுத்தார். ''நீங்கள் புகைபிடிக்கக் கூடியவர்கள். உங்களுக்கு இது பயன்படும்'' என்றார்.

அண்டை வீட்டுக்காரரை நேசிப்பது மற்றொருவகையான சுயநலம் என்று நான் படித்தும் கேட்டும் இருக்கிறேன். ஆனால் நாட்ஸயாவின் செயலில் என்ன சுயநலம் இருக்கமுடியும்?

என்னிடம் சிறிது பணம் இருந்தது. அதை வெளியில் எடுக்க அஞ்சினேன். என் சாகாக்களான கைதிகள் மூன்று நான்கு முறை கூட என்னை ஏமாற்றி பணம் கடனாக வாங்கிச் சென்றார்கள். அவர்களுக்கு ஒருவனிடம் பணம் இருக்கிறது என்று தெரிந்தால் போதும். குழந்தைகளைப்போல் வந்து கெஞ்சிக் கூத்தாடி எப்படியாவது சிறிது கடன் பெற்றே செல்வார்கள். அதே சமயம் மூன்று நான்குமுறை ஏமாற்றிய பிறகும் நான் தயங்காமல் கடன் கொடுப்பதைக் கண்டு அவர்கள் என்னை முட்டாளாகக் கருதிவிட்டனர். நான் கொடுக்க மறுத்திருந்தால் கட்டாயம் என்மீது அவர்களுக்கு நல்ல எண்ணம் ஏற்பட்டிருக்கலாம்.

சிறைச்சாலை வாழ்க்கை எனக்குப் புதிது. நான் இருட்டில் அலைந்து கொண்டிருக்கிறேன்: என்னால் இவ்விதம் பல ஆண்டுகள் உயிர்வாழ முடியாது. இது எனக்குத் தெரியும். அதனால் என் மனம், உணர்ச்சிகள் அகியவற்றின் விருப்பப்படியே நடந்து கொண்டேன். எந்த ஒன்றிற்கும் அசிம் அசிமோவிச்சின் ஆலோசனையை நாடினேன்.

''நடை பிணங்கள் வாழும் இல்லம்'' என்று அழைக்கும் சிறைச்சாலையில் என்னுடைய விடுதியின் படிகளில் நின்று கொண்டிருப்பேன். வேலையிலிருந்து திரும்பி வரும் கைதிகளைக் கவனிப்பேன். சிலர் வருத்தத்துடன் இருப்பார்கள். சிலரோ முகமலர்ச்சியுடன் காணப்படுவார்கள். ஒருவருக்கொருவர் வாய்ச் சண்டை போடுவார்கள். வேடிக்கையாகப் பேசுவார்கள்விடுதியை சுற்றி உலாவுவார்கள் அல்லது சமையலறைக்கும் விடுதிக்குமாகப் போய் வருவார்கள். சிலர் தோளில் தோல் அங்கியை அலட்சியமாகப் போட்டுக்கொண்டு அங்கேயும் மற்றவர்களைத் தாழ்ந்தவர்களாகக் கருதி உலாவுவார்கள். விருப்பம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இந்த உலகத்தில்தான் நான் வாழ வேண்டும்.

அசிம் அசிமோவிச்சிடம் மற்ற கைதிகளைக் குறித்துக் கேட்டேன். அவன் என்னுடன் தேநீர் பருகுவதை நான் விரும்பினேன். அவனும் மகிழ்ச்சியுடன் வருவான். தன்னுடைய தேநீர் தயாரிக்கும் பாத்திரத்தையும் எனக்குக் கொடுத்திருந்தான். என் கேள்விகளைக் கண்டு அவன் என்னை ஒரு விசித்திரமானவனாகக் கருதிவிட்டான். இது எனக்கு வேதனையை அளிக்கவில்லை. அதற்கு மாறாக நானே எல்லாவற்றையும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தை உண்டு பண்ணிற்று.

சிறைச் சாலைக்கு வந்த நான்காவது நாள் காலை கைதிகள் அனைவரும் முற்றத்தில் இரண்டு வரிசையாக நின்றனர். சிப்பாய்கள் குண்டு கிட்டித்த துப்பாக்கியைத் தோளில் தாங்கி முன்னாலும் பின்னாலும் நின்று கொண்டிருந்தார்கள். கைதிகளில் யாராவது வழியில் தப்பிச் செல்ல முயற்சிக்கலாம் அல்லது கலகம் செய்யலாம் என்று அவர்கள் கருதினர்.

கைத்தொழில் நிபுணர் வந்ததும் கைதிகளை எண்ணிப் பார்த்தார். பிறகு தையல் வேலை செய்பவர்களை முதலில் அனுப்பினர். இரண்டாவது தொழிற்சாலையில் வேலை செய்பவர்கள் சென்றனர். மூன்றாவது பிரிவினர் கடின வேலை செய்ய வேண்டியவர்கள். அரசாங்கத்திற்குச் சொந்தமான இரண்டு பாய்மரக் கப்பல்கள் சிறைச் சாலைக்குப் பின்னாலுள்ள பனி உறைந்த நதியில் இருந்தன. அவற்றை உடைத்து மரத்தைப் பிரித்து எடுக்க வேண்டும். மரமோ எரிப்பதைத் தவிர வேறு ஒன்றிற்கும் பயன்படாது. மேலும் இந்தப்பகுதி காட்டில் மரங்கள் அதிகம் கிடையாது.

கப்பலை உடைக்கும் வேலை எங்களுக்காக ஏற்பட்டது. சிலர் தேவையான கருவிகளை எடுத்து வரச் சென்றார்கள். நான் மற்றவர்களுடன் கப்பல் இருக்கும் நதிக் கரைக்குச் சென்றேன். என்ன வேலை செய்ய வேண்டும், எப்படி என் வாழ்க்கையில் முதன் முறையாக அதைச் செய்யப்போகிறேன் என்று கவலைப்பட்டேன்.

அந்த முதல் நாள் வேலை எனக்குத் தெளிவாக நினைவில் இருக்கிறது. அன்று நடந்த சிறு சம்பவம் கூட என் மனதைவிட்டு அகலவில்லை. நாங்கள் நதிக் கரைக்குப் போகும் சமயம் நகரத்தைச் சேர்ந்த ஒருவன் எங்களைப் பார்த்து நின்றான். அப்போது எங்களில் ஒருவன் தலையிலிருந்து தொப்பியைக் கழட்டி எடுத்துக் கொண்டு அவன் முன்னால் போய் நின்றான். நகரத்தவன் ஐந்து கோபக்குகளை அவன் தொப்பியில் போட்டுவிட்டு தன்மீது சிலுவைச் சின்னத்தைச் செய்து கொண்டு சென்றான். கைதியும் நாணயத்தை எடுத்துக் கொண்டு திரும்பி வந்தான்.

சில கைதிகள் மௌனமாக இருந்தார்கள். சிலருடைய முகம் வாடியிருந்தது. மற்றும் சிலரோ தொண தொணவென்று பேசிக்

கொண்டிருந்தனர். ஆனால் ஒருவன் மாத்திரம் மகிழ்ச்சியுடன் இருந்தான். அது ஏன் என்று தெரியாது. அவன் மகிழ்ச்சியுடன் பாடவும் தொடங்கினான். இவனையே தான் முதல் நாள் காலை முகம் கழுவும்போது ஒருவன் சிறைப் பறவை என்று அழைத்தான். இவன் பெயர் கொரோடாவ். கடைசியில் அவன் பாட்டுடன் நடனமாடவும் முற்பட்டான்.

இவன் ஆனந்தமாகப் பாடி நடனமாடுவதைச் சில கைதிகள் தங்களுக்கு இழைக்கப்படும் அவமானமாகக் கருதினர். அதனால் ஒருவன் ''ஏண்டா கத்துகிறாய்?'' என்றான்.

''ஓநாயிடம் ஒரு பார்டு இருந்தது. அதை டோலாவைச் சேர்ந்தவன் திருடிச் சென்றான்'' என்றான் உக்ரேனியாவைச் சேர்ந்தவன்.

''நான் டோலாவைச் சேர்ந்தவன் தான். ஆனால் உங்களைப் போல் நாங்கள் மோசமானவற்றைக் கவர்ந்துகொள்ள மாட்டோம்'' என்றான் கொரோடாவ்.

''உன் வயிறு பருத்து வருகிறது'' என்றான் ஒரு கைதி.

''என் உடம்பே அப்படித்தான். குழந்தையாக இருக்கும்போது எனக்குச் சாக்லெட், கேக், பிஸ்கோத் ஆகியவற்றை அளவுக்கு மீறிக் கொடுத்துப் புசிக்கச் சொல்வார்கள். இப்போதும் என் சகோதரர்கள் மாஸ்கோ நகரத்தில் பெரிய வியாபாரிகளாக இருக்கிறார்கள்.''

நீயும் ஏதாவது வியாபாரம் செய்து கொண்டிருந்தாயா?''

''பல தொழில்கள் செய்திருக்கிறேன். இங்கும் நான் இருநூறு சம்பாதித்தேன்.''

''இரு நூறா!'' என்றான் ஒருவன் ஆச்சரியமாக.

''ஆமாம். இரு நூறுதான்! ஆனால் ரூபிள் இல்லை. கசை அடி''

''அதிருக்கட்டும். உன்னை ஏன் இங்கு அனுப்பினார்கள்?''

''ராணுவ கட்டுதிட்டங்களை மீறி பிலியர்டு ஆட்டம் ஆடச் சென்றேன். அதிகமாகச் சாராயம் பருகினேன். அதுவே எனக்கு இந்த அதிர்ஷ்டத்தை அளித்தது. நான் பணக்காரனாக விரும்பவில்லை. ஆனால் நடந்தது வேறுவிதமாகிவிட்டது.''

எல்லோரும் சிரித்தார்கள். கொரோடாவ் மற்றவர்களை மகிழ்விக்கும் கோமாளிகளில் ஒருவன். இதற்காக அவனுக்குக் கிடைப்பதோ ஏளனமும் இழுக்கும்தான்.

மீண்டும் கொரோடாவ் பாடத் தொடங்கினான். இச்சமயம் அவன் பாட்டிற்குத் தகுந்தாற்போல் சிலர் தாளம் போடவும் தொடங்கினர்.

''முட்டாள்'' என்று கொரோடாவைச் சொன்னான் உக்ரேனியாவைச் சேர்ந்தவன்.

''ஒன்றுக்கும் உபயோகமில்லாதவன்'' என்றான் வேறு ஒருவன்.

கொரோடாவிடம் எல்லா கைதிகளும் கோபப்பட என்ன காரணம் என்று எனக்குத் தெரியாது. நான் உக்ரேனியனை வெறுத்தேன். ஆனால் அது தவறானது. கொரோடாவ் எங்கள் சிறைச்சாலையின் புகழுக்கே இழுக்கு ஏற்படுத்துபவனாக இருந்தான். அதனாலேயே அவனை ஒன்றுக்கும் உதவாதவன் என்று அழைத்தார்கள்.

உக்ரேனியனைப் போல் மற்ற கைதிகளை வெறுக்கக் கூடியவர்களும் இருந்தார்கள். ஒவ்வொருவருக்கும் மற்றவர் மீது ஆதிக்கம் செலுத்த ஆவல் இருந்தது. அதே போல ஒவ்வொருவருக்கும் பல விரோதிகள் இருந்தார்கள். ஒருவன் மற்றவனை வெறுத்தான். ஆனால் அதிகாரிகளுக்கு நல்லபிள்ளையாக இருக்க ஒவ்வொருவரும் பாடுபட்டார்கள். எல்லோருமே என்னிடம் நல்லதனமாக நடந்து கொண்டார்கள். ஆனால் எந்தக் காலத்திலும் நெருங்கிய நண்பர்களாக இருந்ததில்லை.

கடைசியாக நாங்கள் நதிக் கரையை அடைந்தோம். பழைய பாய்மரக் கப்பல் ஒன்று உறை பனியின் மத்தியில் நின்று கொண்டிருந்தது. எல்லோரும் உடனே வேலை செய்யத் தொடங்குவார்கள் என்று எண்ணினேன். அவ்விதம் நடைபெற வில்லை. கரையில் இருந்த மரக்கட்டைகளின் மீது சிலர் உட்கார்ந்து கொண்டனர். மற்றவர்கள் பாய்மரக் கப்பலின் மீது ஏறி உட்கார்ந்தனர். எல்லோரும் புகையிலையை எடுத்தார்கள். அவர்களே தயாரித்த சுங்கானில் புகையிலையை நிரப்பி புகை பிடிக்கத் தொடங்கினர். சிப்பாய்களே எங்களைச் சுற்றி நின்றுகொண்டார்கள்.

வெகு நேரத்திற்குப் பிறகு ஒரு சிப்பாய் ''யார் அந்தக் கப்பலை உடைக்கத் தீர்மானித்தார்கள்? இந்தப் பக்கத்தில் நமக்குப் போதுமான விறகு கிடைப்பதில்லையா?'' என்று சிப்பாய்களைப் பார்த்துக் கேட்டான்.

''அதை யார் தீர்மானித்தார்களோ அவர்களிடமே கேட்க வேண்டும்'' என்றான் ஒரு கைதி.

இவ்விதமே ஒவ்வொருவரும் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். வேலையைச் செய்ய யாரும் செல்லவில்லை. இச் சமயம் ரொட்டி விற்பவள் அந்தப் பக்கமாக வந்தாள். ஐந்து கோபக்குகளை பிச்சை வாங்கியவன் அதை ரொட்டிக் காரியிடம் கொடுத்தான். அவளிடம் ரொட்டியை வாங்கி அனைவருக்கும் பங்கு போட்டுக் கொடுத்தான்.

சார்ஜென்ட் வந்து சேர்ந்தான். எல்லோரும் வேலை செய்யாமல் உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவன் ஆத்திரமடைந்தான். ''ஏன் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்? வேலை செய்யுங்கள்'' என்றான்.

உடனே கைதிகள் மெள்ள எழுந்தனர். நதியை அடைந்தனர். உறைபனி மூடிய நதித்தண்ணீரில் இறங்கி கப்பல் மீது ஏறிக் கொண்டனர். வேலை செய்யவும் தொடங்கினர். ஆனால்

நடுவிலிருந்த கம்பங்களை எப்படி அகற்றுவது என்ற பிரச்னை எழுந்தது.

''இதை யார் அகற்றுவது? தாத்தாவால் கூட முடியாது.'' என்றான் ஒரு கைதி.

''எப்படியாவது அகற்றியே தீர வேண்டும். எப்படிச் செய்வது?'' என்று வேலையில் ஆர்வமுள்ளவன் கேட்டான்.

''மூன்று கோழிகளைக்கூட இவனுக்கு எண்ணத் தெரியாது. இவன் வேலை செய்ய முந்திக் கொண்டு வருகிறான்'' என்றான் வேறு ஒரு கைதி.

''எனக்கு இவை தெரியாது. எப்படியாவது வேலையைச் செய்து முடியுங்கள்'' என்று உரத்த குரலில் சொன்னான் சார்ஜென்ட்.

எல்லோரும் வேலையில் முனைந்தனர். எவ்வளவு முயற்சித்தும் மத்தியிலுள்ள கம்பங்களை அகற்ற முடியவில்லை. மேலும் இரண்டு கோடரிகள் இருந்தால் வேலையைச் செய்து முடிக்கலாம் என்று கூறப்பட்டது. உடனே இரு காவல்காரர்கள் பின்தொடர கோடரி எடுத்துவரச் சென்றனர். மற்றவர்கள் மீண்டும் சுங்கானில் புகைபிடிக்க உட்கார்ந்து கொண்டனர்.

''இந்தச் சிறிய வேலைக்கு இவ்வளவு ஆட்கள்'' என்று முணு முணுத்துக் கொண்டே கைப்பிரம்பை ஆட்டிய வண்ணம் சென்றான் சார்ஜென்ட்.

ஒரு மணி நேரத்தில் மேற்பார்வையாளன் வந்தான். கம்பங்களை எப்படி அகற்றுவது என்பதைக் கைதிகளிடம் சொன்னான். மறு வினாடி கைதிகள் வேலை செய்யத் தொடங்கினர். அதற்குள் கோடரிகளும் வந்து சேர்ந்தன. சில வினாடிகளுக்குள்ளாகவே கம்பங்கள் நான்கும் சேதமின்றி அகற்றப்பட்டன. எல்லா வேலைகளுமே பகல் சாப்பாட்டிற்கு முரசு முழங்குவதற்கு ஒருமணி நேரம் முன்பாக முடிந்துவிட்டன.

கைதிகளில் பலர் திறமையான வேலைக்காரர்கள். அநேகமாக எல்லோருமே மனம் வைத்தால் எந்த வேலையையும் செய்து முடிப்பார்கள். இல்லையேல் வீண் பொழுது போக்கிக் கொண்டு ஆடிப்பாடித் திரிவார்கள்.

என்னிடம் அவர்கள் நடந்து கொள்ளும் முறையை விவரிக்க வேண்டும். நான் வேலை செய்யச் சென்றால் அவர்கள் கூப்பாடு போடுவார்கள். அவர்களுடைய வேலையில் நான் குறுக்கிடுவதாகக் கூறுவார்கள். ''வேண்டாத போது ஏன் வருகிறாய். போ.'' என்று கூறுவர்.

''நீ அபூர்வமானவன். கையில் கப்பறையை எடுத்துக் கொண்டு போய் பிச்சை வாங்கி ஒரு புதிய மாதாகோயிலைக் கட்டு'' என்று கூறுவான் வேறு ஒருவன்.

நான் உடனே ஒதுங்கி நின்று விடுவேன். அப்போதும் மௌனமாக இருக்க மாட்டார்கள். ''எப்படிப்பட்டவனை நமக்கு உதவி செய்ய அனுப்பியிருக்கிறார்கள் பார்! இவனால் என்ன உதவி செய்ய முடியும்'' என்று கூறுவர்.

இவை அனைத்தும் முன்பு சீமானாக இருந்தவனைக் கேலி செய்வதற்காகக் கூறப்படுபவை. எல்லோரும் இந்த கேலியை அனுபவித்தார்கள்.

கைதிகளின் போக்கு என்னை திகைக்கச் செய்தது. எவ்விதம் இவர்களுடன் கலந்து வாழ்வது என்ற பிரச்னை ஏற்பட்டது. உண்மையில் அவர்கள் நான் வேலை செய்வதை விரும்புகிறார்களா இல்லையா என்று ஆராய்ந்தேன். என் கைகளில் அழுக்குப் படக் கூடாது. சுத்தமாகவே இருக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். இதைத் தவிர என்னை அவமரியாதை செய்யவோ என் மனதை நோகவைக்கவோ விரும்பவில்லை. என்னை அவர்கள் கேலி செய்தாலும் மறைமுகமாக எனக்கு மரியாதை காட்டி வந்தனர். ஆனால் நான் அவர்களுடன் கலந்து பழகவும், வேலைகளைச் செய்யவும் தயங்கவே இல்லை. என் முயற்சியையும் விடவில்லை. போலந்துக்காரர்களைப் போல் நான் என்றைக்குமே மற்றவர்களிடமிருந்து ஒதுங்கி இருந்ததே இல்லை. மற்றவர்கள் மனதை மாற்றி என்னையும் அவர்களுடன் சேர்த்துக் கொள்வதற்காக நானும் வேலையில் ஈடுபட்டு வந்தேன்.

அன்று மாலை சோர்வடைந்த உள்ளத்துடன் நான் சிறைச் சாலைக்குத் திரும்பினேன். இவ்விதமே நான் எவ்வளவு காலத்தை இங்கு கழிக்க வேண்டுமோ என்று எண்ணிக் கொண்டே முற்றத்தில் வந்து நின்றேன். அப்போது சிறைச் சாலையைச் சேர்ந்த வுரக் என்ற நாய் என்னை நோக்கி ஓடி வந்தது. இந்த நாய் யாருக்கும் சொந்தமானதல்ல. முன்பு எவனோ ஒருவன் இதை வளர்த்து வந்தான். அவன் போனபிறகு இது சிறைச்சாலையிலுள்ள ஒவ்வொருவருடைய நாயாகிவிட்டது. நான் அங்கு வந்த முதல் நாளே அதன் நண்பனாகிவிட்டேன். பல ஆண்டுகளுக்குப் பிறகு அதை நேசிக்கும் ஒருவனாக நான் அதற்குத் தோன்றினேன்.

வுரக் என் அருகில் வந்தது. என்மீது முன்னங்கால்களைத் தூக்கி வைத்து வாலை ஆட்டிற்று. என் கைகளை நக்கிற்று. அச்சமயம் அந்த ஒரு நாய்தான் உலகத்தில் என்னை மதித்தது. என்னுடைய ஒரே நண்பனும் அந்த நாய்தான்!

# 6

காலம் செல்லச் செல்ல எனக்குப் புதிய வாழ்க்கையும் மெள்ளப் பழக்கமாயிற்று. என்னைக் குறை கூறுவதும், கேலி செய்வதும் குறையத் தொடங்கிற்று. நடைபெறும் சம்பவங்கள், சுற்றுப்புறம், சிறைச்சாலையிலுள்ளவர்கள் ஆகிய எல்லாமே எனக்குப் புதிதாகத் தோன்றவில்லை. இந்த வாழ்க்கை ஒருவனுக்குத் திருப்தி ஏற்படுத்துவது இயலாதகாரியம். ஆனால் இத் தருணம் அதை ஏற்றுக் கொள்ள வேண்டியது தான். ஆரம்பத்தில் எனக்கு எல்லாவிதமான ஏக்கமும் இருந்தது. இப்போதோ ஒதுக்கித்தள்ள ஒருவனைப் போல் நான் சுற்றித் திரிய வேண்டியதில்லை. சக கைதிகள் என்னை கண்களை அகல விரித்து ஆவலுடன் பார்ப்பதும் இல்லை. முன்போல என் மனதை நோகச் செய்வதுமில்லை.

சிறைச்சாலையே எனது இல்லமாகவும் அங்கு இருப்பவர்கள் என் உடமைகள் என்ற எண்ணமும் ஏற்பட்டது. அவ்விதமே பழகியும் போய் விட்டது. இவை அனைத்தும் எனக்குப் பிடித்தமாகி விடும் என்று நான் கனவு கூடக் கண்டதில்லை. ஒவ்வொரு வாரமும் என் தலையில் பாதியை மொட்டை அடித்துக் கொண்டேன். சனிக்கிழமை தோறும் ராணுவத்தைச் சேர்ந்தவன் வருவான். அவன் குளிர்ந்த தண்ணீரை தலையில் தடவுவான். பிறகு ரம்பம் போன்ற கத்தியால் தலையை மொட்டை அடிப்பான். இதை ஒரு சித்திரவதை என்றே அழைக்கலாம். ஆனால் இந்த சித்திரவதை யிலிருந்து தப்ப அசிம் அசிமோவிச் ஒரு ஆலோசனை கூறினான். ராணுவப் பகுதியில் ஒருவன் இருக்கிறான். அவனிடம் நல்ல கத்தி இருக்கிறது. ஒரு கோபக் கொடுத்தால் நன்றாக மொட்டை அடித்து விடுவான் என்று சொன்னான். அவன் தன் கலையில் தேர்ந்தவன். பணத்திற்காக அவன் வேலை செய்வதில்லை. கலைக்காகவே அதைச் செய்கிறான். அதனால் பரியாரித் தொழில்

செய்யும் அவனை சிறை அதிகாரி என்று அனைவரும் அழைப்பார்கள். உண்மையில் இவனுக்கும் சிறை அதிகாரிக்கும் எந்த விதத்திலும் ஒற்றுமை இல்லை.

ஒருநாள் ஏலி அவனை சிறை அதிகாரி என்று அழைத்தான். அப்போது சிறை அதிகாரியே வந்து விட்டான். இதைக் கேட்டதும் அவனுக்குக் கோபம் தாங்க முடியாத வண்ணம் வந்துவிட்டது. உடனே அவன் ஏலியின் முகத்தில் ஒரு அறைவிட்டு ''யார் சிறை அதிகாரி என்று தெரிந்து கொள்! ஒரு கைதியை என் முன்னாலேயே அதிகாரி என்று கூப்பிடுவதை நான் அனுமதிக்க மாட்டேன்'' என்றான்.

சிறைச் சாலைக்கு வந்த முதல் நாளே விடுதலையைக் குறித்துக் கனவு காணத் தொடங்கினேன். பல வழிகளில் நாட்களைக் கணக்கு எடுத்தேன். குறிப்பிட்ட காலத்தை நிர்ணயம் செய்யப் பட்டவர்களுக்கு இந்த சிந்தனை ஒரு அளவு சென்று நின்றுவிடும். எல்லா கைதிகளும் என்னைப் போல் விடுதலை அடையும் நாளை எண்ணிக் கொண்டிருந்தார்களோ என்னவோ? ஆனால் பலருக்கு விடுதலையிலுள்ள நம்பிக்கை என்னைத் திகைக்க வைத்தது. சுதந்திரமாக இருப்பவர்களைவிட சிறை தண்டனை அனுபவிப் பவர்களுடைய கனவுகள் மாறுபட்டிருக்கிறது. சுதந்திரமாக இருப்பவன் தன் சொத்து முதலியவற்றை அதிகரிக்கச் செய்வதிலும், சமூகத்தில் புகழ் பெறவும் கனவு காண்பான். அவனுக்கு அதற்கான சந்தர்ப்ப சூழ்நிலையும் உதவி புரியலாம்.

கைதியின் நிலைமையோ முற்றிலும் மாறுபட்டது. அவனும் ஒருவிதமான வாழ்க்கையை வாழ்கிறான். அவன் யார், எவ்வளவு காலம் அவனது தண்டனை இருக்கிறது என்ற கவலை தேவையற்றது. அவன் அந்த வாழ்க்கையை ஏற்பதே இல்லை. சுதந்திரமாக இருக்கவே விரும்புகிறான். ஒவ்வொரு கைதியும், தன் வீட்டில் இல்லை, இந்த இடத்தில் விருந்தாளி போல் வந்திருக்கிறோம் என்றே நினைக்கிறான். இருபது ஆண்டுகள் சிறை தண்டனை என்பது இரண்டு நாட்களாக அவனுக்குத் தோன்றுகிறது. ஐம்பத்தைந்து வயதிலும் அவன் முப்பத்தைந்து வயது நிரம்பியவனாகவே இருப்பதாகக் கருதுவான். அவ்வளவு காலம் உயிர்வாழ மாட்டேனா என்று எண்ணுவான்.

பிரத்யேகமான பகுதி கைதியாக இருப்பவனும் பீட்டர்ஸ் பர்க் நகரத்தைக் கனவு கண்டு கொண்டிருப்பான். ஆயுள் தண்டனை பெற்ற அவன் எதிர்பாராத வகையில் வெர்சிங் சிறைக்கு மாற்றப்படலாம். அங்கு அவனது தண்டனைக் காலத்தை ஒரு குறிப்பிட்ட அளவாக நியமிக்கலாம் என்று எண்ணுவான். இந்த எண்ணமே அவனை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தும் என்பதில் சந்தேகமே இல்லை.

இவ்விதம் வாலிபர்கள் மாத்திரமல்ல, தலைநகரத் தலைவர்களும் கனவு காண்கிறார்கள்.

கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்த ஐவரை சைபீரியா சிறைக்கு அனுப்பியிருந்தார்கள். அவர்களுக்கு ஐந்து முதல் பத்து ஆண்டுகள் சிறை தண்டனை விதிக்கப்பட்டிருக்கலாம். அந்த ஐவரில் ஒருவன் முன்பு சீமானாக இருந்தான். அவன் அரசாங்கத்திலும் ஏதோ பதவியில் இருந்தானாம். இவர்கள் ஐவரையுமே கைகளிலும் கால்களிலும் விலங்கிட்டு ஒரு இடத்தில் கட்டிப் போட்டிருந்தார்கள். முன்பு சீமானாக இருந்த கைதி இவ்விதம் கட்டிப் போடும் தண்டனைகாலம் முடிந்ததும் அவன் எப்படியாவது அங்கிருந்து தப்பிச் சென்று விடுவேன் என்று நம்பியிருந்தான். ஒரு வேளை அந்த தண்டனை காலத்திற்குள் அவன் இறந்து விடலாம். அப்படியும் அவன் நம்பிக்கையுடன் இருந்தான்.

ஏதாவது வேலை செய்து கொண்டிருந்தால் தான் என் மனவேதனை குறையும், உடலும் ஆரோக்கியமாக இருக்கும் என்பதை எளிதில் உணர்ந்தேன். திறந்த வெளியில் அதிக நேரம் தங்கியிருக்கவும், களைப்பு ஏற்படும் வரை வேலை செய்யவும் தீர்மானித்தேன். ஒன்றுக்கும் உதவாதவனாக இல்லாமல் வயதானாலும் நல்ல நிலைமையில் சிறைச்சாலையிலிருந்து வெளியேற எண்ணினேன். நான் நினைத்ததில் தவறே இல்லை. வேலையும், மன அமைதியும் எனக்கு நன்மையே செய்வதாக இருந்தது.

ஒரு சீமானான கைதி தன்நேரத்தை எல்லாம் வீணாக்கி வருகிறான் என்பதைக் கண்டேன். என்னுடன் அவனும் சிறைச் சாலைக்கு வந்தான். அப்போது அவன் வாலிபனாகவும் திடகாத்திரமாகவும் கருத்த சிகையுடனும் இருந்தான். சிறைச் சாலையிலிருந்து வெளியேறும் சமயமோ தலை நரைத்து உடல் மெலிந்து ஒன்றுக்கும் பயன்படாதவனாகி விட்டான். அவனால் சிறிது தூரம் நடக்கவும் முடியுமா என்ற சந்தேகம் ஏற்பட்டது. ''நான் இவ்விதம் ஆகிவிடக்கூடாது. எப்படியாவது வாழ்க்கையை நல்லவிதமாக நடத்தும் வண்ணம் இருக்க வேண்டும்'' என்று எண்ணினேன்.

வேலை செய்யவேண்டும் என்ற என்னுடைய ஆர்வம் வெறுப்பையும் ஏளனத்தையும் வெகுமதியாகக் கொண்டு கொடுத்தது. இதை நான் பொருட்படுத்தவில்லை. எந்த வேலைக்கு அனுப்பினாலும் சென்றேன். முதலில் நான் ஒருவித கல்லை எரித்துப் பொடி செய்யக் கற்றுக் கொண்டேன். இது எளிமையான வேலை என்று கருதப்பட்டது. எங்களுடைய கைத்தொழில் நிபுணர் பணக்காரர்களாகவும், சமூகத்தில் நல்ல நிலையிலுமிருந்தவர்களுக்கு

இவ்வித வேலையைக் கொடுப்பது வழக்கம். இதை அவர் அனுதாபத்தினால் செய்யவில்லை. அத்தகையவர்கள் கடுமையான வேலைகள் செய்ய இயலாது என்ற எண்ணத்தினால் எளியவேலையைக் கொடுத்தார். இவ்விதம் அவர் செய்வது தவறுதான். மேலும் கடின தண்டனை பெற்றவர்களை இவ்விதம் பாகுபாடு செய்வதால் அவர்கள் மனம் எல்லையற்ற வேதனை அடைகிறது. சாதாரண கைதிகளைவிட அவர்கள் மனம் புண்படுகிறது. அவர்கள் வேற்றுமை பாராட்டுவதை எண்ணி வருத்தமடைவார்கள்.

வயதானவர், மெலிந்தவர் என்ற வகையில் என்னுடன் இருவரைச் சேர்த்து மூவரையும் கல்லை எரித்துப் பொடி செய்யும் வேலைக்கு அனுப்பினர். எங்களுடன் இந்த வேலையை நன்கு தெரிந்த ஒருவனையும் அனுப்பினார்கள். இவன் பெயர் அல்மஜாவ். பல ஆண்டுகள் இந்த வேலையில் அனுபவப்பட்டவன். ஆனால் எப்போதும் முணு முணுத்துக்கொண்டே இருப்பான். கல்லை எரித்துப் பொடி செய்யும் இடம் நதிக்கரையில் இருந்தது.

அல்மஜாவ் மௌனமாகவே வேலை செய்வான். அவனுக்கு எங்களால் தகுந்த முறையில்உதவி செய்ய இயலாமல் இருப்பதற்காக வருத்தமடைவோம். அவனும் எங்கள் உதவியை நாடமாட்டான். நாங்கள் செய்ய முயற்சித்தாலும் அது பயனற்றுப் போய்விடும். நாங்கள் கொண்டு வந்து கொடுக்கும் கற்களை அவன் எரிப்பான். மறுநாள் அதை எடுத்துப் பொடி செய்யக் கொடுப்பான். நாங்கள் ஒவ்வொருவரும் ஒரு பெட்டி நிறைய கற்களைப் பொடி செய்து நிரப்புவோம். இந்த வேலை மனதிற்கு மகிழ்ச்சியை ஏற்படுத்திற்று. கற்களைப் பொடி செய்வதும் எளிதாக இருந்தது. நாங்கள் வேலை செய்யும் போது சுறுசுறுப்பாக இருப்போம். அல்மஜாவ் எங்களை உற்றுப் பார்த்துவிட்டு சுங்கானைப் பற்றவைத்துக் கொண்டு புகை குடிப்பான். அப்போது அவனுடைய தோற்றம் ஒன்றுமறியாத குழந்தையினுடையதைப் போலிருக்கும். அவன் அனைவரையும் நல்ல முறையிலும் அன்புடனும் நடத்துவான்.

இரண்டாவது எளிய வேலை மரக் கடசல் பட்டறையின் சக்கரத்தைச் சுற்றுவது. இந்தச் சக்கரம் மிகப் பெரியது. இரண்டுபேர் சேர்ந்து சுற்றவேண்டும். என்னுடன் ஒரு பணக்காரனாகவும் சீமானாகவும் இருந்தவனைச் சேர்த்து சக்கரத்தைச் சுற்ற அனுப்பினார்கள். நாங்கள் இருவரும் இந்த வேலையைப் பல ஆண்டுகள் செய்து கொண்டிருந்தோம். அவன் எனக்கு ஒரு ஆண்டு முன்னதாகச் சிறைச்சாலைக்கு வந்தான். வேறு ஒரு சீமானும் என்னுடன் இந்த வேலைக்கு வருவான். அவன் சில காலத்திற்குள்

சிறையிலே மரணமடைந்து விட்டான். மரக் கடசல்பட்டறையின் சக்கரத்தை நாங்கள் இருவரும் சுற்றுவோம். இந்த வேலை எங்கள் மனதிற்கு மகிழ்ச்சியை அளித்தது. உடல் ஆரோக்கியத்திற்குத் தகுந்த உடற்பயிற்சியாகவும் இருந்தது.

உறைபனியை அகற்றும் வேலையும் எனக்கு விருப்பமாக இருந்தது. பனிகாலத்தில் பொது இடங்களிலுள்ள கட்டிடங்கள் தெருக்கள் ஆகியவற்றில் படிந்திருக்கும் உறைபனியை அகற்ற எங்களை அனுப்புவார்கள். கையில் மண்வாரியுடன் நாங்கள் செல்லுவோம். இந்த வேலையைச் செய்யும்போது எல்லோருமே மகிழ்ச்சியுடன் காணப்படுவோம். சிற்சில சமயம் பனிக்கட்டியை எடுத்து வீசி விளையாடுவோம். வேடிக்கையாகச் சண்டை போடுவோம். ஆனால் முடிவில் எல்லோரும் சிரித்துக்கொண்டே திரும்புவோம்.

என்னுடைய சுற்றுப்புறம் விரிந்து கொண்டே போயிற்று. நண்பர்களுக்காக நான் தவறான வழியில் செல்லவே இல்லை. அப்போதும் நான் நம்பத்தகாதவனாகவே இருந்தேன். எனது நண்பர்களில் முக்கியமாக ஒருவனைக் குறித்து முதலில் கூறுகிறேன். அவன் பெட்ராவ். அவன் என் விடுதிக்கு வெகுதூரத்திலுள்ள விடுதியில் இருந்தான். மேலும் அவன் பிரத்யேக பகுதியைச் சேர்ந்தவன். எனக்கும் அவனுக்கும் பொதுவாக ஒன்றுமே இருக்கவில்லை. பெட்ராவ் தன் கடமையாகக் கருதியே என்னைக் காண வருவான். சிறைச்சாலைக்கு வந்த முதல் மாதம் ஒரு நாள் வேலையிலிருந்து திரும்பிவந்து உலாவிக் கொண்டிருந்தேன். அப்போது பெட்ராவ் வந்தான். அவன் அதிகமாகப் பேசக் கூடியவனோ, எல்லோருடனும் கலந்து பழகக் கூடியவனோ இல்லை. உயரமாகவும் திடகாத்திரத்துடனும் இருந்தான். முகம் வெளுத்து, எலும்புகள் தெரிந்தாலும் பார்க்க மனதிற்கு அமைதியை ஏற்படுத்துவதாகக் காணப்பட்டான். எப்போதும் புகையிலையைப் போட்டு மென்று கொண்டிருப்பான். கைதிகளில் பலருக்கு புகையிலை போட்டுக் கொள்ளும் பழக்கமிருந்தது. பெட்ராவின் தோற்றம் அவனுடைய உண்மையான வயதைவிட குறைவாக நினைக்கும்படி இருந்தது. அவன் படபடவென்றே பேசினான். ஆனால் பணிவுடனும் மரியாதை குறையாமலும் நடந்து கொண்டான். நான் தனியாக இருக்க விரும்பியதை உணர்ந்தால் இரண்டு வினாடிகளுக்குள்ளாகவே அங்கிருந்து போய்விடுவான். விநோதமான இந்த நட்பு பலகாலம் நீடித்தது. என்னிடம் அவன் உண்மையாயும் நேர்மையுடனும் நடந்து கொண்டாலும் பல ஆண்டுகளாகியும் அவன் நெருங்கிய நண்பனாகவில்லை. அவனுக்கு என்ன வேண்டும் என்பதை என்னால் புரிந்து கொள்ள இயலவில்லை. அவன் பணம் கடன் கேட்பதே இல்லை. ஏதாவது

திருடிக் கொண்டு போனாலும் அது அவனது பழக்கத்தின் கோளாறாகவே இருக்கலாம். அதனால் என்னிடம் அவனுக்கு ஏதோ ஒரு குறிக்கோள் இருப்பதாகக் கூற இயலாது.

எக்காரணத்தாலோ அவனும் நான் இருக்கும் சிறையில் வசிக்கவில்லை என்ற எண்ணம் ஏற்பட்டது. வேறு ஊரிலோ எங்கோ இருப்பவன் அந்தப் பக்கமாக வந்திருக்கிறான், என்னைக் காண எண்ணினான் என்றே கருதினேன். எப்போதுமே அவன் வெளியில் யாரையோ நிற்க வைத்திருப்பதாகவோ அல்லது வேறு வேலையாகப் போகவேண்டியோ உள்ளதுபோல அவசரமாக வந்து போவான். அவனுடைய பார்வை வெகுதூரம் வரை சென்று அனைத்தையும் அறிவது போலிருக்கும்.

என்னை விட்டுச் சென்றவன் அவசரமாக எங்கே போகிறான் என்பதை அறிய பலமுறை முயற்சித்தேன். ஆனால் பக்கத்து விடுதிக்கோ அதன் அடுத்ததற்கோதான் செல்வான். அல்லது சமையலறைக்குப் போவான். அங்குள்ளவர் பேசுவதை உன்னிப்பாகக் கேட்டுக்கொண்டு மௌனத்தைக் கலைப்பது போல அவர்கள் பேச்சிலும் கலந்து கொள்வான். அவன் பேசினாலும் பேசாவிட்டாலும் அதிக வேலையாக உள்ளவனைப் போல எங்கும் தங்காமல் ஓடிக்கொண்டே இருப்பான். இது விசித்திரமாக இருந்தாலும் கட்டாயமாக இல்லாவிட்டால் ஒரு வேலையும் செய்யாமல் சோம்பி உட்கார்ந்திருப்பான். அவனுக்கு ஒரு தொழிலும் தெரியாது. அவனிடம் ஒரு போதும் பணம் இருந்தது கிடையாது. இவை அவனுக்கு ஒரு தொந்தரவும் கொடுத்ததாகத் தெரியவில்லை. அவன் என்ன பேசுவான்?

உலாவிக் கொண்டிருக்கும் என்னைக் கண்டதும் ''வந்தனம்'' என்பான்.

''வந்தனம்'' என்று நானும் பதிலுக்குக் கூறுவேன்.

''உங்கள் வேலையில் குறுக்கிடுகிறேனா?''

''இல்லை. இல்லை''

''நெப்போலியனைக் குறித்து ஒன்று கேட்க விரும்புகிறேன். ஆயிரத்து எண்ணூற்றிப் பன்னிரண்டாம் ஆண்டு நம் ஊருக்கு வந்தானே. அவனுக்கும் இவனுக்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா?''

சிப்பாய்களின் பிள்ளைகள் பள்ளிக்கூடத்தில் பெட்ராவ் படித்தவன். அவனுக்கு எழுதவும் படிக்கவும் தெரியும்.

''இருக்கிறது'' என்று கூறுவேன் நான்.

அத்துடன் அவன் அங்கிருந்து சென்று விடுவான். எப்போதுமே இப்படித்தான் ஏதாவது கேட்டுவிட்டு ஏதோ அவசர வேலையைக் கவனிக்கச் செல்பவனைப் போல் அங்கிருந்து வேகமாகப் புறப்பட்டுப் போவான்.

பெட்ராவைப் பற்றி நண்பன் ஒருவனிடம் கேட்டேன். பெட்ராவ் இந்த சிறைக்கு வந்த காலத்தில் எல்லா கைதிகளுமே அவனைக் கண்டு நடுநடுங்கினார்களாம். இதைக் கூறிவிட்டு நண்பன், ''எந்த பயங்காரமான காரியத்திற்கும் பெட்ராவ் துணிந்தவன். ஒருவனுடைய தலையை அவன் கண்ணெதிரிலேயே கொய்து விடுவான். அவனுக்கு மூளைக் கோளாறு இருக்கலாமோ என்றும் கருதுகிறேன்'' என்றான்.

அவன் சொன்னது என் ஆவலை அதிகரிக்கச் செய்தது. பெட்ராவைக் குறித்த விவரங்களை மெள்ள அறிந்தேன். பெட்ராவ் பணிபுரிந்து வந்த பட்டாளத்தின் தளபதியையே கொன்று விட்டான். இந்தக் குற்றத்திலிருந்து அவன் விதிவசத்தால் தப்பி விட்டான். தளபதி அவனுக்குக் கசையடி கொடுக்கக் கட்டளையிட்டுவிட்டுச் சென்றான். அவன் அங்கிருந்து போவதற்கு முன் கொல்லப்பட்டான். ஒரு சமயம் மைதானத்தில் ராணுவப் பயிற்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அப்போது உதவி தளபதி பெட்ராவைக் கேவலமாக பேசிவிட்டான். உடனே படையினர் முன்னிலையில் உதவி தளபதியைக் கொன்றான். பல ஆண்டுகள் பழகியும் பெட்ராவ் தன் வாழ்க்கையின் ரகசியங்களை வெளியிட்டதில்லை. அவன் நீறு பூத்த நெருப்பாகவே இருந்து வந்தான். அவனுக்கு எல்லாமே விருப்பமானதாகவும், பற்றில்லாததாகவும் இருந்தன. அவன் கைதேர்ந்த வேலைக்காரனைப் போலவும் வேலையில்லாததால் ஓய்வு நேரத்தில் குழந்தைகளுடன் விளையாடுபவனாகவும் காணப்பட்டான்.

அவன் ஏன் சிறையில் தங்கியிருக்கிறான்? ஏன் தப்பிச் செல்ல வில்லை என்ற கேள்வி என்னை வாட்டிவதைத்தது. அவன் ஒன்றை விரும்பினால் அதைச் செய்தே தீருவான். அப்படியிருக்க ஏன் தப்பிச் செல்லவில்லை? இதற்கு அவன் இன்னமும் தப்பிச் செல்ல ஆவல் கொள்ளவில்லை என்றே கூறவேண்டும். இத்தகையவர்கள் ஒன்றைச் செய்ய நினைத்தால் அவர்களை யாரும் தடுக்கவே முடியாது.

தளபதியைக் கொன்றவன் சிறைச் சாலையில் தான் கசை அடிபட ஒப்படைத்துக் கொள்வது எப்படி என்று எனக்கு விளங்கவே இல்லை. பெட்ராவுக்கு முக்கியமான தொழில் சிறைச் சாலையினுள் சாராயத்தைக் கள்ளத்தனமாக எடுத்து வருவதுதான். இதற்காக அவன் அடிக்கடி அகப்பட்டுக்கொண்டு கசை அடிபட நேரிடும். அச் சமயங்களில் தன் தவறை உணர்ந்த ஒரு உத்தமனைப் போல் தண்டனையை மௌனமாக ஏற்றுக் கொள்வான். இதை விட ஆச்சரியமானது என்னிடம் அடிக்கடி பொருள்களைக் களவாடிச் செல்வதுதான். ஒரு நாள் அவனிடம் என் வேதப்புத்தகத்தை

மற்றொரு விடுதியிலிருக்கும் கைதியிடம் கொடுக்கச் சொன்னேன். போகும் வழியிலேயே அதை விலை கொடுத்து வாங்க ஒருவனைக் கண்டு பிடித்து விட்டான் பெட்ராவ். கிடைத்த பணத்தைச் சாராயம் குடித்துத் தீர்த்தான் என்றால் அவனுக்குச் சாராயம் பருகப்பணம் தேவையாக இருக்கலாம். அதனால் என் வேத புத்தகத்தை விற்று விட்டான் என்று எண்ணினேன். இத்தகையவர்கள் இருபத்தைந்து கோபக்குகளுக்காக ஒருவனைக் கொல்லவும் தயங்கமாட்டார்கள் என்றும் தீர்மானித்துக் கொண்டேன்.

இந்த சம்பவத்திற்குப் பிறகு நான் பல முறை பெட்ராவைச் சந்தித்திருக்கிறேன். சில சமயங்களில் அவன் செய்த குற்றத்தைச் சுட்டிக் காட்டியும் இருக்கிறேன். நான் சொல்வதைமௌனமாகக் கேட்டுக்கொண்டிருப்பான். வேத புத்தகம் அவசியமானது தான் என்று ஒப்புக் கொள்வான். ஆனால் அவன் தன் குற்றத்தை ஒப்புக்கொள்ளவே மாட்டான். தன் செய்கைக்காகவும் வருந்த மாட்டான்.

ஒரு நாள் அவனிடம் வேத புத்தகத்தை எடுத்துச் சென்று விற்றதைக் குறித்துச் சொன்னேன். அதற்கு அவன் ''உங்கள் உடமைகளைக் காப்பாற்றி வைக்கத் தெரியவில்லை'' என்றான். பிறகு ''நீங்கள் யாரையும் நம்புகிறீர்கள். இதற்காக வருந்துகிறேன். நான் இதை என் மனப்பூர்வமாகச் சொல்கிறேன்'' என்று கூறி பெருமூச்சு விட்டான்.

பெட்ராவைப் போன்றவர்கள் இயற்கைக் குணத்தைப் பெற்ற சமயம் வானளாவ உயர்ந்து கம்பீரமாக நிற்கிறார்கள். அவர்கள் பிரசங்கிகள் இல்லை. யாருக்கும் எதையும் போதிக்கக் கூடியவர்களுமில்லை. யாரையும் எந்த ஒருவரையும் எங்கும் இழுத்துச் செல்பவர்களும் இல்லை. ஆனால் தங்கள் விருப்பப்படி எந்த ஒன்றையும் ஆரம்பம் முதலே செய்து கொண்டிருப்பார்கள். இத்கையவர்களின் முடிவு மோசமானதாக இருக்கலாம். அந்த நேரம் வந்தால் அவன் அழிந்தே போய் விடுவான். இன்னமும் அவன் அழியாமல் இருப்பதற்கு அந்த கடைசிநேரம் இன்னமும் வரவில்லை என்றே கூறவேண்டும். அது வராதவரை அவன் தொண்டு கிழமாகி அலைந்து கொண்டிருக்கலாம்.

பெட்ராவைக் குறித்து என் நண்பர் சொன்னது உண்மைதான். இத்தகையவர்கள் எந்த ஒன்றிற்கும் துணிந்தவர்கள் என்பதில் சந்தேகமே இல்லை.

# 7

மன உறுதி படைத்தவர்களைக் குறித்து தீர்மானமாகச் சொல்வதே கடினமாகும். மற்ற இடங்களைப் போலவே சிறையிலும் அவர்கள் விசித்திரமானவர்களாகவே இருந்தார்கள். ஒருவன் தோற்றத்தில் பயங்கரமாகக் காணப்படலாம். முக்கியமாக அவனைப் பற்றி ஒருவர் சொன்னதை நினைத்துக்கொண்டு பார்க்கும் போது உருவம் நம்மை மெய்சிலிர்க்கச் செய்துவிடும். முதலில் சில சம்பவங்கள் எனக்கு அத்தகையவர்கள் மீது சந்தேகத்தை ஏற்படுத்தியது. ஆனால் நிலைமை மாறியது. அந்தப் பயங்கர கொலைகாரர்களாக உள்ளவர் மீது என் எண்ணமும் மாறுபட்டது. ஒரு உயிரையும் கொல்லாதவர்கள் தோற்றத்தில் ஆறு கொலைகளைச் செய்தவர்களையும் விட பயங்கரமாகக் காணப்பட்டார்கள். ஒரு தீர்மானத்திற்கும் வர முடியாத பல விசித்திரமான வழக்குகளும் இருந்தன.

சாதாரண மக்களைக் கொன்ற சிலர் அந்த செய்கையை ஏதோ ஒரு அசாதாரணமான சம்பவத்திலேயே செய்திருக்கிறார்கள். பொதுவாக இவ்விதம் நடப்பதை பார்க்கலாம். ஒருவன் தனக்குள்ளதை வைத்துக்கொண்டு அமைதியாக வாழ்க்கை நடத்தி வருகிறான். அவன் விவசாயியாகவோ, பண்ணை வேலைக்காரனாகவோ, நகரத்தானாகவோ, அல்லது சிப்பாயாகவோ இருக்கலாம். ஆனால் திடீரென்று அவன் உள்ளம் ஏதோ தாறுமாறாகிவிடுகிறது. உடனே அவன் கத்தியை எடுத்து தன் எதிரியையோ, எதிர்க்கக் கூடியவனையோ குத்திக்கொன்று விடுகிறான். இவ்விதமே விநோதமான சம்பவம் ஆரம்பமாகிறது. மனிதன் திடீரென்று மோசமான நிலையை அடைகிறான். அவனுடைய கோபத்திற்கு முதலில் உள்ளானவர் எதிரியாகவோ, எதிர்க்கக் கூடியவராகவோ இருக்கலாம். குற்றமானது அதற்கு ஒரு காரணத்தை உள்ளடக்கிக் கொண்டிருக்கலாம். ஆனால் அவன் பாகுபாடின்றி

கொன்று விட்டான். அதனால் ஏற்பட்ட மகிழ்ச்சியினால் நிந்தனைக்குரிய சொற்களை உபயோகிக்கலாம். அல்லது விரும்பத்தகாத வகையில் பார்க்கலாம். பலியானவர்கள் எண்ணிக்கையைச் சமப்படுத்தவோ அல்லது வெறியினாலோ ''விலகிப் போங்கள். யார் வருகிறது தெரியவில்லையா?'' என்று கேட்பது போல அவர்களுடைய தோற்றமும், பார்ப்பதும் இருக்கும்.

உணர்ச்சி வசத்தினாலோ பயத்தினாலோ இவன் இவ்விதம் காணப்படுகிறான். ஏதோ உட்கருத்து அவனை எல்லா சட்ட திட்டங்களையும் மீறும்படி செய்கிறது. அதிகாரிகள் அவனைப் பிடிக்க முடியாத வகையில் பயங்கரவாதியாக மாறி விடுகிறான். கட்டுக்கடங்காத சுதந்திரம் மற்றவர்களை நடுநடுங்கும் படி செய்து விடுகிறது. அதே சமயம் கொடிய துன்பம் அவனை எதிர்நோக்கியிருப்பதையும் அவன் அடிக்கடி உணர்கிறான். உயரமான கோபுரத்தின்மீது ஏறி நின்றுகொண்டு தலை குப்புறக் கீழ்நோக்கி விழ முற்படுபவன் நிலையை அடைந்துவிடுகிறான். அற்ப குணமுள்ளவர்களுக்கே இவ்விதம் ஏற்படும். இத்தகையவர்களில் சிலர் உணர்ச்சிவசமானபோது கேவலமாகவும் நடந்து கொள்வார்கள். இது அவர்கள் அடைந்த வெற்றியினாலும் எதிர்நோக்கியுள்ள ஆபத்தை எண்ணி பயத்தினாலுமே ஏற்படுகிறது. தண்டனை கிடைக்கும் வரை இவர்கள் இவ்விதம் பயங்கரமானவற்றைச் செய்து கொண்டே இருப்பார்கள். ஆனால் இவர்களுடைய உணர்ச்சி வேகம் ஒரு கணம்தான் நீடித்திருக்கும். இதை கண்களுக்குப் புலப்படாத இயற்கையின் சட்டம் வரையறுத்திருக்கிறது. திடீரென்று உணர்ச்சி வசமானவன் மறுகணம் மண்டியிட்டு தன் தவறுக்காக வருந்துவான். தண்டனை பெற்று சிறைச் சாலையை அடைந்த பிறகோ, இவனா ஆறுபேரைக் கொன்றவன் என்ற சந்தேகம் ஏற்படும் வண்ணம் நடந்து கொள்வான்.

சிறைச்சாலையில் தம்மை ஒப்படைத்துக் கொள்ளும்போது கூடச் சிலர் பழைய முரட்டுத்தனத்தை விடாமலும் இருப்பார்கள். அவர்கள், ''நீங்கள் நினைப்பது போன்ற நல்லவன் இல்லை. ஆறு உயிர்களைப் போக்கியதற்காகவே நான் இங்கே இருக்கிறேன்'' என்று சொல்லுவது போலக் காணப்படுவார்கள்.

சில காலம் பொறுத்தோ அல்லது உடனோ அவர்கள் தம்மை ஒப்படைத்துக் கொண்டே தீருவார்கள். எப்போதாவது ஒரு சமயத்தில் தங்களுடைய வாழ்க்கையில் அறிந்த பழைய தீரச் செயல்களையும், முரட்டுத்தனத்தையும் வெளிக்காட்டுவார்கள். தம் வாழ்க்கையின் சம்பவங்களை விவரிக்க எளிய உள்ளம் படைத்த ஒருவனைத் தேடிப்பிடிப்பார்கள். அதை ஆவலோடும் உற்சாகத்தோடும் விவரிப்பார்கள். அவர்களுடைய சொற்களில் என்ன சோகம்

தாண்டவம் ஆடும்? சிறைச்சாலைக்கு வந்த ஆரம்ப நாட்களில் ஒருவேலையுமின்றி படுத்திருக்கும் மாலை வேளைகளில் இத்தகைய கதைகளைக் கேட்டிருக்கிறேன். அனுபவம் இல்லாத காரணத்தால் கதை சொல்பவனை எஃகு மனம் படைத்தவனாகவும் கருதினேன். அதே சமயம் பெட்ராவ் எனக்கு ஒரு கோமாளியாகக் காட்சியளித்தான். சிறைச்சாலை அதிகாரியை லேச்கா தனது மனமகிழ்ச்சிக்காகவே கொலை செய்தானாம். இவன் வாலிபன். அவனுடைய மூக்கு கூர்மையாக இருக்கும். தெற்குப் பகுதியைச் சேர்ந்த அவன் உக்ரேனியப் பகுதியைச் சேர்ந்த பண்ணை வேலைக்காரன் இல்லை. வேறு ஏதோ தொழில் செய்பவன். அவன் தன்னைக் குறித்து ''நான் சிறு பறவை போலிருந்தாலும் என்னுடைய அலகும், நகங்களும் மிகவும் கூர்மையானவை'' என்று அடிக்கடி கூறுவான்.

ஒருநாள் மாலை கொபிலின் துணி தைத்துக் கொண்டிருந்தான். அப்போது லேச்கா அவன் அருகில் உட்கார்ந்திருந்தான். இருவரும் பேசிக் கொண்டிருந்தனர். லேச்கா தான் சிறை அதிகாரியைக் கொலை செய்தது பற்றிக் கூறத் தொடங்கினான்.

''அந்தச் சிறைச்சாலையில் பன்னிரண்டு உக்ரேனியப் பகுதியைச் சேர்ந்தவர்கள் இருந்தோம். அவர்கள் அனைவருமே காட்டு எருமை போன்று உடல்கட்டும் வளமையும் உள்ளவர்கள். ஆனால் சோம்பேறிகள். சிறைச்சாலையின் உணவு மோசமாக இருந்தது. சிறையின் அதிகாரி தன் மனப்போக்கின்படியே எல்லாவற்றையும் செய்து வந்தான். நாட்கள் கடந்து கொண்டிருந்தன. எனது சகாக்கள் பதினோரு பேரும் ஒன்றுமே செய்யவில்லை. அஞ்சி நடுங்கும் அவர்கள் மௌனமாக இருந்தனர். ''அவன் விருப்பப்படியே நடக்க நாம்விட்டு வைக்கலாமா?'' என்று அவர்களிடம் கேட்டேன். எனது முடிவையும் அவர்களிடம் சொன்னேன். அவர்கள் நகைத்தனர். ''உனக்குத் துணிவிருந்தால் போய்க் கொல்'' என்றனர்.

நான் மிகவும் பாடுபட்டு அவர்களுக்குச் சிறிது துணிவு வரும்படி செய்தேன். சிறை அதிகாரியையும் நாங்கள் இருக்கும் பகுதிக்கு வரவழைத்தேன். ஆனால் கடவுளே! அந்தப் பதினோரு பேரும் அதிகாரியைக் கண்டதும் நடுநடுங்கிப் போனார்கள். ''என்ன? ஏது? நான்தான் உங்கள் ஜார் சக்கரவர்த்தி, கடவுள்'' என்றான்.

இவ்விதம் அவன் கூறியதும் நான் என் சட்டையின் கைப்பகுதியில் கூரிய கத்தியுடன் அதிகாரியின் முன்னால் சென்றேன். ''நண்பரே, நீங்கள் எங்களுடைய சக்கரவர்த்தியாகவோ, கடவுளாகவோ இருக்க முடியாது. நீங்கள் எந்த வகையில் சக்கரவர்த்தி, கடவுள் என்று சொல்லுங்கள்'' என்றேன்.

''ஹூம் அப்படியானால் நீயார்?''

''இல்லை. நம்முடைய கடவுள் தேவலோகத்தில் இருக்கிறார். இது உங்களுக்கே தெரியும். நமக்கு ஒரு சக்கரவர்த்திதான் இருக்கிறார். நீங்களோ வெறும் சிறை அதிகாரிதான். அதுவும் சக்கரவர்த்தியின் தயவினாலும் உங்கள் தகுதியினாலுமே இருக்கிறீர்கள்.''

''என்ன? என்ன?''என்று என் முன்னால் இரண்டு அடி எடுத்து வைத்தான் சிறை அதிகாரி.

'இதுதான்' என்று கத்தியை எடுத்து அவன் வயிற்றில் குத்தினேன். மறுகணம் அவன் தரையில் சாய்ந்தான். அவன் கையையும் காலையும் அடித்துக் கொண்டான்.''

திடீரென்று பதவிக்கு உயர்த்தப்பட்ட பல அதிகாரிகள் இவ்விதமே சொல்லிக் கொள்வார்கள். அவர்களே ஜார் சக்கரவர்த்தியாகவும், கடவுளாகவும் நினைப்பார்கள். இவ்வித எண்ணமே ஒரு கைதிக்கு ஆத்திரமூட்டப் போதுமானது. ஒரு அதிகாரி இவ்விதம் கூறுவது குற்றமாகும். தண்டனை அளிக்கவேண்டியதுமாகும்.

சுயமரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள ஒவ்வொரு வரும் பாடுபடுகிறார்கள். அதற்குச் சிறிது தீங்கு ஏற்படும் போது புரட்சி செய்யத் தொடங்குகிறார்கள். அதே போல தனது அதிகாரிகளும் மரியாதையுடனும், பதவிக்கேற்ற தன்மையுடனும் நடந்து கொள்ள வேண்டும் என்று எண்ணுகிறார்கள். மேலும் அதிகாரிகள் தங்களுக்குண்டான சின்னங்களை அணிந்து, கௌரவமாகவே நடந்துகொள்ள வேண்டும் என்றும் விரும்புகிறார்கள். அதிகாரிகள் அளவுக்கு மீறி கலந்து பழகுவதையும், நயந்து பேசுவதையும் அவர்கள் வெறுக்கிறார்கள்.

லேச்கா செய்த குற்றத்திற்காக உடன் ஆயிரத்து ஐநூறு கசையடி கொடுக்கக் கட்டளையிடப்பட்டதாம். அந்தக் கசையடியிலேயே அவன் இறந்து போயிருக்கலாம். இதை அவன் விவரித்து ''தண்ணீர் கொடுத்துக் கொடுத்து எனக்கு உணர்வு ஏற்படுத்தி அடித்தார்கள். இதைவிட என் உயிரே போயிருந்தாலும் நலமாக இருக்கும்'' என்றான்.

''ஆனால் நீ இறக்கவில்லையே!'' என்றான் கொபிலின். உடனே அங்கிருந்த அனைவரும் 'கொல்' என்று சிரித்து விட்டார்கள்.

லேச்கா அவனை ஒருமுறை உற்றுப் பார்த்தான். அவன் ஆறு பேரைக் கொலை செய்திருக்கலாம்; ஆனால் கொபிலினிடம் மாத்திரம் அவனுக்கு அச்சம் இருந்தது.

# 8

கிறிஸ்துமஸ் பண்டிகை நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. இந்த நாளைக் கைதிகள் அனைவருமே மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். நானும் வழக்கத்திற்கு மாறாக பண்டிகை தினத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தேன்.

பண்டிகை விடுமுறைக்கு நான்கு நாட்களுக்கு முன் எங்களைக் குளிக்க அழைத்துச் சென்றார்கள். இது சிறைச்சாலைக்கு நான் வந்த புதிதில் நடைபெற்ற சம்பவம் ஆகும். எல்லாருமே அன்று மகிழ்ச்சியுடன் காணப்பட்டார்கள். பகல் சாப்பாட்டிற்குப் பிறகு நாங்கள் புறப்பட்டோம். அன்று ஒரு வேலையும் செய்யவில்லை.

எங்கள் அனைவரிலும் அன்று அதிக மகிழ்ச்சியுடன் இருந்தவன் ஈசய்யா என்ற யூதன்தான். குளிப்பதில் அவனுக்கு அதிக விருப்பம் இருந்தது. குளிப்பதைக் குறித்து நான் என் பழைய சம்பவங்களை நினைக்கும் போதெல்லாம் முதலில் நினைவுக்கு வருபவனும் அவனேதான். சிறைச்சாலையின் சகாவும் நெருங்கிய நண்பனுமாக இருந்தவனும் அவன்தான்.

ஐம்பது வயதிற்கு மேலான ஈசய்யா விசித்திரமான குணமுடையவன். ஒல்லியாக இருக்கும் அவன் சுய திருப்தியுடையவன். கடின தண்டனை பெற்றிருந்தாலும் அவன் மகிழ்ச்சியுடனேயே காணப்பட்டான். தண்டனை அடைந்ததற்காக அவன் வருத்தப்பட்டதாகவும் தோன்றவில்லை.

நகரத்தில் நகை செய்யும் தொழிலாளியே கிடையாது. ஈசய்யா நல்ல தேர்ச்சி பெற்ற நகை செய்யும் தொழிலாளி. அதனால் அவனிடமே நகரத்தவரும், சிறை அதிகாரியும் கூட தங்களுக்குத் தேவையான நகைகளைச் செய்து கொண்டார்கள். இதற்காக அவனுக்கு அதிக கூலி கிடைக்கா விட்டாலும் கொடுப்பதைக் கொண்டே அவன்

வட்டி வியாபாரம் செய்துவந்தான். மேலும் சிறைச் சாலையின் நிலைக்கு முற்றிலும் மாறுபட்டதாக அவன் எல்லா வசதிகளுடனும் வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தான். அவனுக்குச் சொந்தமான தேநீர் தயாரிக்கும் பாத்திரம் இருந்தது. நல்ல பசுக்களை வாங்கி வைத்திருந்தான். தேநீர் கோப்பைகளும், உணவு உண்ண சிறந்த தட்டுகளும்கூட இருந்தன. நகரத்தில் வசித்து வரும் யூதர்களைப் போலவே ஒரு குறைவுமின்றி இருந்தான். சனிக்கிழமை தோறும் குளிக்கச் செல்ல சட்டம் அனுமதித்திருந்தது. அதனால் அவன் இரண்டு காவல்காரர்களுடன் குளிப்பதற்காக நகரத்திற்குச் செல்லுவான். பன்னிரண்டு ஆண்டு சிறை தண்டனை முடிவடைந்து விடுதலைப் பெற்றதும் திருமணம் செய்து கொள்ள அவன் தீர்மானித்திருக்கிறான். சிறுபிள்ளைகளைப் போன்ற ஆசையும், வஞ்சகமான எண்ணமும், எதற்கும் அஞ்சாத நெஞ்சமும் படைத்தவன்.

இவன் எனக்கு முன்னதாகவே சிறைச்சாலைக்கு வந்திருந்தான். அவன் வந்த அன்று நடந்த சம்பவத்தைக் கேள்வியுற்றேன். அந்த சிறைச் சாலையில் அதற்கு முன் ஒரு யூதன் கூட இருக்கவில்லை. அதனால் அவன் வரப்போகிறான் என்று அறிந்ததும் மற்ற கைதிகள் வழக்கம் போல வருபவனைக் கேலி செய்ய ஆயத்தமாக இருந்தனர்.

ஈசய்யா சிறைச் சாலையினுள் வந்ததும் அவனுக்காகக் குறிப்பிடப்பட்ட இடத்தில் போய் உட்கார்ந்து கொண்டான். அவனால் தலை நிமிர்ந்தும் பார்க்க இயலவில்லை. தனது துணி மணிகளையும் சாமான்களையும்கூட அவன் பக்கத்திலேயே வைத்துக் கொண்டிருந்தான். அச்சமயம் ஒரு கைதி கையில் கந்தை ஆடை ஒன்றுடன் ஈசய்யாவின் அருகில் வந்து உட்கார்ந்தான். அவன் ஈசய்யாவின் முதுகில் தட்டிக்கொடுத்து ''உனக்காகத்தான் ஆறு ஆண்டுகளாகக் காத்துக் கொண்டிருந்தோம். இதற்கு உன்னால் என்ன கொடுக்க முடியும் பார்'' என்று கந்தல் துணியை முன்னால் போட்டுக் கேட்டான்.

சிறைச்சாலைக்கு வந்த வருத்தத்தால் ஈசய்யா அழுத்தப்பட்டிருந்தான். அத்துடன் வாலிபன் வேறு செய்த கேலியும் சேர்ந்து கொண்டது. ஆனால் ஈசய்யா வருத்தப்பட்டுக் கொண்டோ, கேலி செய்வதைக் கண்டு ஆத்திரமடையவே இல்லை. அவன் வாலிபனை தலை நிமிர்ந்து பார்த்தான். பிறகு அடகு வைக்கக் கொடுத்த ஆடையை பரிசோதிக்கத் தொடங்கினான். அவன் என்ன சொல்லப் போகிறான் என்று எல்லா கைதிகளும் ஆவலோடு எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''ஒரு ரூபிள் கொடுக்கலாம். அவ்வளவு பெறும்'' என்றான் கந்தை ஆடையின் சொந்தக்காரனான வாலிபன்.

''அவ்வளவு கொடுக்க இயலாது. ஏழு கோபக் தருகிறேன்'' என்றான் மௌனத்தைக் கலைத்த ஈசய்யா.

'நல்லது. இது உன் அதிர்ஷ்டம்தான்.''

''மூன்று கோபக் வட்டி.''

''ஒரு ஆண்டிற்கா?''

''இல்லை. ஒரு மாதத்திற்கு மூன்று கோபக்.''

''அடாத வட்டியாக இருக்கிறதே? உன் பெயர் என்ன?''

''ஈசய்யா!''

கந்தை ஆடையை பரிசோதித்துவிட்டு ஏழு கோபக்குகள் வாலிபனுக்குக் கொடுத்தான் ஈசய்யா. இவ்விதமாக அவன் சிறைச் சாலையினுள் தன் வட்டி வியாபாரத்தை அன்றே தொடங்கி விட்டான். இப்போது கிட்டத்தட்ட எல்லா கைதிகளுமே அவனிடம் வட்டிக்குப் பணம் வாங்கியிருந்தார்கள்.

லேச்காவுக்கு யூதர்களைப் பற்றி நன்கு தெரியும். அவனுக்குப் பல யூதர்கள் நண்பர்களாகவும் இருந்தார்கள். அவன் ஈசய்யாவிடம் ஒரு நாள் வேடிக்கையாகப் பேசத்தொடங்கினான். ''பார், நீ கசை அடியின் அனுபவத்தைப் பெறப்போகிறாய். உன்னை சைபீரியாவுக்கு அனுப்பப் போகிறார்கள்'' என்றான்.

''இப்போது இருப்பது சைபீரியாதானே?'' என்றான் ஈசய்யா.

''இன்னும் அதிக தூரத்திற்கு அனுப்புவார்கள்.''

''அங்கு கடவுள் இருப்பார் அல்லவா?''

''இருப்பார். அதனால் என்ன?''

''அது போதுமானது. பணத்தின் பலம், கடவுள் அருள் இரண்டின் உதவியின் மூலம் நான் மகிழ்ச்சிகரமாக வாழ்க்கை நடத்துவேன்'' என்றான் ஈசய்யா.

சிறைச் சாலையினுள் அவன் ஒருவன்தான் யூதன். அதனால் அவனை ஒன்றும் கேலி செய்ய வேண்டாம் என்று மொத்த கைதிகளும் கூறுவார்கள். அவ்விதமே அனைவரும் நடந்து கொண்டார்கள்.

நோன்பு நாளான வெள்ளிக்கிழமை தோறும் மற்ற சிறை விடுதிகளிலிருந்தும் ஈசய்யாவைக் கவனிக்கப் பல கைதிகள் வருவார்கள். அன்று அவன் சிறு மேஜையை ஒரு ஓரமாக

எடுத்துவைப்பான். அதன் மீது இரண்டு மெழுகு வர்த்திகளை ஏற்றி வைப்பான். பிறகு பிரார்த்தனைப் புத்தகத்தை எடுத்துத் திறந்து மர்மமான மொழியில் உரத்த குரலில் பாடல்களைப் பாடத் தொடங்குவான். அச்சமயங்களில் அவன் கையையும், தலையையும் ஆட்டிச் செய்யும் அபிநயம் வேடிக்கையாக இருக்கும். சில சமயங்களில் அவன் கண்ணீர் பெருக்கி அழுவான். மறு கணமே மகிழ்ச்சிக் குரலில் பாடுவான். வாய்விட்டும் சிரிப்பான்.

இவ்விதம் அவன் அழுது, மறுகணம் சிரிப்பதற்கான காரணத்தைக்கேட்டேன். ஜெருசலம் பறிபோனதற்காக அழுவதாகவும் அது மீண்டும் கிடைக்கும் என்று ஒரு மகான் சொன்னது உண்மையாகும் என்ற எண்ணத்தில் மகிழ்ச்சியடைவதாகவும் கூறினான்.

ஒரு நாள் ஈசய்யா பிரார்த்தனை செய்து கொண்டிருக்கும்போது சிறை அதிகாரி வந்தான். அவனுடன் காவலர்கள் பலரும் வந்திருந்தனர். அவர்களைக் கண்டதும் மற்ற கைதிகள் நடுநடுங்கி எழுந்து மௌனமாக நின்றனர். பிரார்த்தனை செய்து கெண்டிருந்த ஈசய்யாவோ தன் வேலையிலேயே மூழ்கியிருந்தான். சிறை அதிகாரி அவன் முன்னால் போய் நின்றபோது ஏதோ கையையும் தலையையும் ஆட்டிச் சொன்னான். அது என்ன என்றே புரியவில்லை. சிறை அதிகாரியும் நகைத்துக் கொண்டே சென்றான். அதன் பிறகு ஈசய்யாவிடம் கேட்டபோது அவன் தனக்கு எதுவுமே தெரியாது என்றான். சிறை அதிகாரியை அவன் பார்க்கவே இல்லை என்றும் சொன்னான்.

அவன் சொல்லை நான் பூரணமாக நம்பினேன். பிரார்த்தனையில் மூழ்கியிருந்த அவனுக்கு உலகத்தைப்பற்றிய நினைவே இருக்கவில்லை. தன்னை மறந்து அவன் துதிப்பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தான்.

ஈசய்யாவைக் குறித்து இவ்வளவு போதுமானது. இனி குளிக்கச் சென்றதை விவரிக்கிறேன்.

பொதுமக்கள் குளிப்பதற்காக நகரத்தில் இரண்டு இடங்களே இருந்தன. ஒன்று ஒரு யூதனால் நடத்தப்பட்டு வந்தது. அதில் குளிக்க ஐம்பது கோபக்குகள் கொடுக்க வேண்டும். இது பணக்காரர்களுக் கானது. மற்றது பாமர மக்களுக்காக ஏற்பட்டது. மிக மோசமான அந்த இடத்திற்கே எங்களை அழைத்துச் சென்றார்கள்.

அன்று ஞாயிற்றுக் கிழமை. சிறைச்சாலையை விட்டு வெளியே செல்வது கைதிகளுக்கு ஆனந்தத்தையே விளைவித்தது. நகரத்தின்

பக்கமாகப் போக அவர்கள் மிகவும் விரும்பினர். குளிப்பதற்கு எங்களை இரு பிரிவுகளாகப் பிரித்தனர் அப்படியும் அந்த இடத்தில் எல்லோரும் ஒருமிக்கக் குளிப்பது என்பது இயலாத காரியம்.

கைகளிலும் கால்களிலும் விலங்கு பூட்டப்பட்ட எனக்கு இதே நிலையிலுள்ள பெட்ராவ் என்பவன் உதவிசெய்ய முன் வந்தான். பக்லுஷின் என்பவனும் உதவி செய்யத் தயாராக இருந்தான். ஆனால் எனக்கு முதலில் குளிப்பதற்கும், பிறகு விலங்கு பூட்டப்பட்ட கைகால்களிடையே ஆடையை அணிந்து கொள்ள கற்றுக் கொடுத்தவன் கெர்னாவ் என்பவனே. அவன் ஐந்து ஆண்டு காலம் சுவரிலேயே சங்கிலியில் பொறுத்தப்பட்டுக் கிடந்தான். பெட்ராவிடம் ஐந்து கோபக்குகள் கொடுத்து சோப்பு, நார் ஆகிய இரண்டையும் வாங்கிவரச் சொன்னேன்.

இருபது அடியே அகல நீளமுள்ள குளிக்கும் அறையில் நூறுபேருக்குமேல் இருந்தார்கள். சுடுதண்ணீர் குழாய் மூலம் விடப்பட்டிருந்தது. அதற்குச் சிலர் நான் நீ என்று போட்டி போட்டுக்கொண்டு முந்தினர். சிலரோ சுடுதண்ணீரே தேவை இல்லை என்று குளிர்ந்த நீரில் குளித்தார்கள். என்னை பெட்ராவ் குழந்தை போலத் தூக்கிச் சென்று குளிக்க உதவி செய்தான். அவனே உடலைத் தேய்த்தான். நான் அவனிடம் என் கால்களை நானே தேய்த்துக் கொள்வதாகச் சொன்னேன். அவனோ விடவில்லை. அவனுடைய செய்கை என்னை ஒன்றும் அறியாத குழந்தையைப் போல் கருதுவதாகத் தோன்றிற்று.

குளித்துவிட்டு சிறைச் சாலைக்குத் திரும்பி வந்ததும் நான் என்னுடன் பெட்ரோவைத் தேநீர் அருந்த அழைத்தேன். இதை அவன் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டான். பிறகு ஒரு கோப்பை சாராயமும் வாங்கிக் கொடுத்தேன். அவன் திருப்தியுடன் அதைப் பருகினான்.

பக்லுஷின் போன்று நல்லவன் ஒருவனை நான் கண்டதே இல்லை. முன் கோபக்காரனாகவும் எளிதில் சச்சரவு செய்யத் தொடங்குபவனாகவும் இருந்த போதிலும் அவனை எல்லா கைதிகளும் நேசித்தார்கள். முப்பது வயதே நிரம்பிய அவன் வாட்ட சாட்டமாக இருப்பான். எப்பொழுதும் அவன் சிரித்தே பேசுவான். அவனை யாரும் கேலி செய்ய இடம் கொடுக்கமாட்டான். ஒன்றுக்கும் உதவாதவன் என்று அவனை ஒருவனும் துணிந்து கூற முடியாது.

ஆரம்ப நாட்களிலேயே நானும் அவனும் நண்பர்களானோம். அவன் அப்பொழுதே தன் கதையையும் சொன்னான். ராணுவப் பள்ளியில் படித்த அவன் பிறகு ராணுவத்தில் சேர்ந்தான். மேல் அதிகாரிகளிடம் அவன் நல்லவிதமாக நடந்து நல்ல பெயர் எடுத்தான்.

நாடகத்தில் நடிக்க அவனுக்கு விருப்பம் இருந்தது. சென்ற ஆண்டு அவன் ஒரு நாடகத்திற்கு ஏற்பாடு செய்திருந்தான். ஆனால் சிறை அதிகாரி அப்போது சீட்டு ஆட்டத்தில் ஏராளமான பணத்தைத் தோற்றிருந்தான். மேல் அதிகாரிகளின் கோபத்திற்கும் அவன் ஆளாகியிருந்தான். அதனால் அவன் நாடகம் நடத்த அனுமதியளிக்க வில்லை. இந்த ஆண்டு அப்படியில்லை. அவனே அனுமதியளித் திருந்தான். அதனால் பக்லுஷின் மகிழ்ச்சியுடன் இருந்தான்.

இவனை ஏன் இந்த சிறைக்கு அனுப்பினார்கள் என்று கேட்டேன். ராணுவத்தில் செய்த சாதாரண தவறுகளுக்காக இங்கு அனுப்ப மாட்டார்களே என்றேன்.

அதற்கு அவன் ''நீங்கள் சொல்வது உண்மைதான். நான் ஒரு ஜெர்மானியனைக் கொன்றேன்'' என்றான்.

''ஏன் கொன்றாய்?''

''காதலே இதற்குக் காரணம்!''

''நல்லது சொல்லு பார்க்கலாம்.''

''மிகவும் வேடிக்கையான சம்பவம். என்னை அனுப்பிய நகரத்தில் ஏராளமாக ஜெர்மன் தேசத்தவர் வசித்து வந்தனர். நான் வாலிபனாக இருந்தேன். எனது மேல் அதிகாரிகள் என்னிடம் அன்பாக நடந்து கொண்டிருந்தார்கள். ராணுவ முகாமை விட்டு வெளியே சென்றால் நான் ஜெர்மன் தேசத்து யுவதிகளைக் கண்டு கண் சிமிட்டாமல் போகமாட்டேன். லூஸா என்ற ஜெர்மன் தேசத்துப் பெண் ஒருத்தியிருந்தாள். அவளும் அவளுடைய அத்தையும் வெள்ளை வெளுக்கும் தொழில் செய்து வாழ்க்கை நடத்தி வந்தனர். லூஸா நல்ல அழகி. அவள்மீது எனக்கு நாட்டம் ஏற்பட்டது. அவள் மூலமாகவே திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணமும் உண்டாயிற்று.

அடிக்கடி சந்தித்து வந்த அவள், திடீரென்று என்னைக் காண வருவதை நிறுத்திக் கொண்டாள். அவளுக்குப் பல கடிதங்கள் எழுதினேன். பதில் இல்லை. கடைசியாக நான் அவளுக்கு 'நீ வருகிறயா? அல்லது நானே வந்து உன் அத்தையிடம் எல்லாவற்றையும் கூறி விடட்டுமா?' என்று எழுதினேன். மறு நாளே அவள் வந்தாள். நாற்பது வயதிற்கு மேலான ஒரு ஜெர்மன் தேசத்து கடிகாரம் தயாரிப்பவன் அவளை மணக்க விரும்புகிறானாம். அவன் பணக்காரனாம். அவளோ ஏழை. தன்னை நல்ல நிலையில் அவன் வைத்திருப்பான் என்ற எண்ணத்தில் அவனை மணக்கத் தீர்மானித்தாளாம்.

இதை அவள் சொன்னதும் நான் அந்த கடிகாரம் தயாரிப்பவன் இருப்பிடத்தையும் அவனுடைய அடையாளத்தையும் கேட்டு அறிந்தேன்.

''என் அதிர்ஷ்டம் அவ்வளவுதான்'' என்று கூறி அவளை அனுப்பினேன்.

மறுநாள் அந்த ஜெர்மானியனைக் காணச் சென்றேன். மிடுக்காக ஆடை அணிந்து கொண்டு அவன் உட்கார்ந்திருந்தான். அவன் கடையின் கண்ணாடிகளை உடைத்து விடலாமா என்றும் எண்ணினேன். ஆனால் ஒன்றும் செய்யாமல் முகாமிற்குத் திரும்பி வந்தேன்.

சில நாட்கள் சென்றன. லூஸாவை நான் சந்திப்பதே இல்லை. எனக்குத் தெரிந்த ஒரு வயதான மாது இருந்தாள். அவளும் வெள்ளை வெளுக்கும் தொழிலே செய்து வந்தாள். அவள் மூலமாக அடுத்த ஞாயிற்றுக் கிழமை லூஸாவை மணக்க விருக்கும் ஜெர்மானியன் ஒரு சிறு விருந்து நடத்தப்போவதாக அறிந்தேன். விருந்துக்கு லூஸா, அவள் அத்தை, மற்றொருவன் ஆகியோரே அழைக்கப்பட்டிருந்தனர்.

லூஸாவை மணப்பவனுக்கு என்னைப் பற்றிய விபரம் தெரிந்தது. அதனால் அவன் விரைவில் தன் திருமணத்தை முடித்துக் கொள்ள விரும்பினான். அதே நோக்கத்துடனேயே தான் அந்த விருந்துக்கும் ஏற்பாடு செய்திருந்தான்.

ஞாயிற்றுக் கிழமை வரை அந்த ஜெர்மானியன் என் சிந்தனையை விட்டு அகலவே இல்லை. அன்று காலை நான் மாதா கோயிலுக்குச் சென்றேன். பிரார்த்தனை முடித்து முகாமிற்குத் திரும்பினேன். எக் காரணத்தாலோ கைத்துப்பாக்கியை எடுத்து அதில் குண்டு கிட்டித்தேன். சட்டைப்பையில் அதைப் போட்டுக் கொண்டு ஜெர்மானியன் வீட்டை நோக்கி நடந்தேன்.

நான் சென்றபோது அவன் கடை மூடியிருந்தது. அவனிடம் ஒரு வேலைக்காரப் பெண் மாத்திரமே இருந்தாள். அவளையும் காணவில்லை. கடையில் பின்னாலேயே அவனுடைய வீடு இருந்தது. அதனால் நான் வீட்டிற்குச் சென்றேன். அங்கு முன் கூடத்தில் ஒரு மேஜை போடப்பட்டிருந்தது. அதன் அருகில் லூஸா, அவள் அத்தை மற்றும் ஒருவனுடன் அந்த ஜெர்மானியனும் உட்கார்ந்திருந்தான். மேஜை மீது பிஸ்கோத்து, தேநீர், சாராயம் ஆகியவை வைக்கப்பட்டிருந்தன. நான் உள்ளே சென்றதும் என்னைக் கண்டு லூஸா திகைத்தாள். அவளுடைய அத்தையோ ஆச்சரியமடைந்தாள். மற்ற இருவரும் ஒன்றும் புரியாமல் விழித்தனர்.

ஜெர்மானியன் ஆத்திரத்துடன் எழுந்து ''என்ன வேண்டும்?'' என்று கேட்டான்.

இது எனக்கு ஆத்திரத்தை ஏற்படுத்தியது. நான் கோபமாக ''என்ன வேண்டும் என்றா கேட்கிறீர்கள்? நான் உங்களுடைய விருந்தினன் தெரியவில்லையா?'' என்றேன்.

''நல்லது, உட்காருங்கள்''

நான் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டே ''தேநீரும், சாராயமும் கொடுங்கள்'' என்றேன்.

அவன் என்னையே எடுத்துக் கொள்ளச் சொன்னான். நானோ அவனே எனக்கு ஊற்றிக் கொடுக்க வேண்டும் என்றேன். ''நண்பன் என்ற முறையில் வந்திருக்கிறேன். அந்த முறையில் என்னை நடத்த வேண்டாம்'' என்றேன்.

''நண்பனா? ஹூம், நீங்கள் ஒரு சிப்பாய், அது இயலாது'' என்றான் அவன்.

கடைசியாக எனக்குக் கிடைத்த பிடிமானம் அதுதான். உடனே நான் கைத்துப்பாக்கியை எடுத்து அவன் முன்னால் நீட்டி ''மோசமானவனே, இப்போது நான் நினைத்தால் உன்னை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். வீணாக உன்னைச் சுட்டுக் கொல்லவேண்டும் என்று நினைக்கிறாயா?'' என்றேன்.

இரண்டு பெண்களும் உயிரே இல்லாதவர்களைப்போலாகி விட்டார்கள். மற்றொருவனோ பயந்து நடு நடுங்கினான். ஜெர்மானியன் மாத்திரம் துணிவுடன் ஏளனமாகச் சிரித்துக் கொண்டே ''உங்களுக்கு என்னைச் சுட துணிவு கிடையாது. அவ்விதம் செய்யவும் மாட்டீர்கள். என்னைச் சுட்டால் உங்களுக்கு தண்டனை கிடைக்கும். இது உங்களுக்கே தெரியும்'' என்றான்.

நான் பலவிதமாகச் சொன்னேன். அவனோ துணிவுடன் பேசினான். கடைசியில் ஆத்திரம் அதிகரிக்கவே நான் அவனைச் சுட்டேன். அவன் தரையில் சாய்ந்தான். பிறகு நான் என் முகாமிற்குத் திரும்பினேன். வழியிலேயே கைத்துப்பாக்கியை ஒரு குட்டையில் வீசி எறிந்தேன்.

எந்தக் காலத்திலும் நான் கைது செய்யப்படலாம் என்று எண்ணினேன். இதே எண்ணத்துடன் கட்டிலில் படுத்திருந்தேன். அன்று மாலை வரை அப்படியே இருந்தேன். ஒன்றும் நடைபெறவில்லை. பிறகு எழுந்து ஜெர்மானியன் வீட்டை நோக்கி நடந்தேன்.

அவன் வீட்டின் முன் மக்கள் கூட்டமாக நின்றுகொண்டிருந்தனர். போலீஸ்காரர்களும் அங்கு இருந்தார்கள். ஒரு வயதானவளிடம் லூஸாவைக் குறித்துக் கேட்டேன். அவள் மூலமாக அவள் வெளியே வந்தாள். என் கழுத்தைக் கட்டிக் கொண்டு கண்ணீர் பெருக்கினாள். ''இது என் தவறால் நடந்தது. அத்தை சொன்னதை நான் கேட்டிருக்கக் கூடாது'' என்றாள்.

அத்தை ஒரேயடியாகப் பயந்து விட்டாளாம். வீட்டிற்குச் சென்றவள் படுத்த படுக்கையாகி விட்டாளாம். மற்றொருவனோ ஊமையாகி விட்டானாம். அதனால் கொலை செய்தவன் யார் என்றே யாருக்கும் தெரியாதாம்.

இரண்டு வாரம் வரை ஒரு தொல்லையும் ஏற்படவில்லை. நானும் லூஸாவும் தினமும் சந்தித்து ஆடிப்பாடி மகிழ்ந்து வந்தோம். என் வாழ்க்கையிலேயே அந்த இரண்டு வாரங்கள் தான் மகிழ்ச்சிகரமான நாட்கள். லூஸாவும் ''தாங்கள் எங்கு சென்றாலும் நான் வரத்தயார்: அவர்கள் உங்களை கைது செய்து எங்கு அனுப்பினாலும் நானும் வருவேன். உங்களுக்காக நான் எதையும் இழக்கத் தயார்'' என்றாள்.

''கடைசியில் என்னைக் கைது செய்தார்கள். மற்றொருவனும் லூஸாவின் அத்தையுமே என்னைக் காட்டிக் கொடுக்க இணங்கினார்கள்'' என்றான் பக்லூஷின்.

''இந்தக் குற்றத்திற்காக உனக்கு சாதாரண தண்டனையாக பத்து பன்னிரண்டு ஆண்டுகள் கிடைத்திருக்கலாம். ஆனால் உன்னை ஏன் பிரத்யேகப் பகுதிக்கு அனுப்பினார்கள்?'' என்று கேட்டேன்.

''அது வேறு விவகாரம். விசாரணையின் போது என்னை என் மேல் அதிகாரி மோசமாகப் பேசத் தொடங்கினான். என்னைக் கேவலமாகச் சொன்னான். நான் ஆத்திரமடைந்து 'இது நீதிமன்றம் என்பது நினைவிருக்கட்டும். வீணாக ஏதும் சொல்ல வேண்டாம்' என்றேன். இதற்காக என்னை பிரத்யேகப் பகுதிக்கு அனுப்பினார்கள். நாலாயிரம் துப்பாக்கி மட்டை அடியும் கொடுக்கும்படி கட்டளை யிட்டார்கள். நான் தண்டனை அடைந்த சமயம் என் அதிகாரியாக இருந்தவனும் வேறு ஊருக்கு மாற்றப்பட்டான். பதவியிலிருந்தும் அவனை குறைத்தார்கள்,'' என்றான் பக்லூஷின்.

# 9

கடைசியில் அந்த விடுமுறை நாளும் வந்தது. கிறிஸ்துமஸ் பண்டிகை நாள், ஒருவரும் வேலை செய்யவில்லை. சிலர் தையற் கடைக்குச் சென்றனர். சிலர் தொழிற்சாலைக்குப் போனார்கள். மற்றவர்கள் பல இடங்களுக்கு வேலைக்குச் செல்பவர்களைப் போல் வரிசையாக நின்று கொண்டிருந்தனர். அவர்களும் பெயர்களைச் சிப்பாய்களிடம் கூறிவிட்டு தனித்தனியாகவும் சேர்ந்தும் விடுதிக்கு வந்தனர். சாப்பாட்டிற்குப் பிறகு ஒருவர் கூட விடுதியை விட்டு வெளியே செல்லவில்லை. காலையில்கூட சொந்த வேலையைத் தவிர வேறு எதற்காகவும் விடுதியிலிருந்து அகலவில்லை. சிலர் கள்ளக் கடத்தல், அல்லது சாராயம் தேவை என்று முன்னதாகவே சொல்லி வைக்கவுமே போனார்கள்.

பக்லூஷினும் அவனைச் சேர்ந்த நாடகக்காரர்களும் தங்களுக்குத் தேவையான ஆடைகள் மற்ற பொருள்கள் ஆகியவற்றைச் சேகரிக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தனர். பொதுவாக அனைவருக்கும் வழியில்லா விட்டாலும் வேறு ஏதோ ஒருவகையில் பணம் கிடைக்கலாம் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். எல்லோரும் நாளைக்கு ஒரு அற்புதமான மாறுதல் ஏற்படும் என்று நம்பினர்.

மாலையில் விடுதியின் தலைவன் கடைக்குச் சென்று கைதிகள் சம்பாதித்த பணத்தைக் கொண்டு, ரொட்டி, இறைச்சி, முட்டை, வெண்ணெய், மற்றும் பண்டிகைக்குத் தேவையான பொருள்களை வாங்கி வந்தான். கஞ்சத்தனமாக ஆண்டு முழுதும் சேமித்து வைத்த பொருளை தாராளமாகச் செலவு செய்ய முற்பட்டனர். இதை அவர்கள் பண்டிகை தினத்தன்று செய்யும் கடமையாகக் கருதினர். மறுநாள் சட்டப்பூர்வமாக விடப்பட்ட விடுமுறை தினம். ஒரு ஆண்டில் இவ்விதம் மூன்று நாட்களே கைதிகளை எந்த வேலைக்கும் அனுப்புவதில்லை.

இந்த ஒதுக்கிவைக்கப்பட்ட மக்களுடைய உள்ளத்தில் விசித்திரமான எண்ணங்கள் இருக்கின்றன. சிறு பிராயத்திலிருந்தே சாதாரண மக்களின் உள்ளத்தில் புனித நாள் விருந்து என்பது ஆழப் பதிந்து விட்டது. கடுமையான வேலைகளிலிருந்து ஓய்வு பெறும் நாள் அது. அத்துடன் பழைய நண்பர்களும் உறவினர்களும் அன்றுதான் ஒன்று கூடுவார்கள். இந்த நினைவுகள் சிறைச் சாலையிலுள்ள கைதிகள் மனதில் தோன்றி அவர்களை வதைத்தன.

புனித விருந்து எல்லா கைதிகளுக்கும் ஒரு முக்கியமானதாக இருந்தது. சிலர் சாராயம் பருகினார்கள் என்பது உண்மைதான். ஆனால் பெரும்பாலானவர்கள் பயபக்தியுடனும் எதையோ செய்ய துடிப்பது போலவும் காணப்பட்டார்கள். யாராவது ஆத்திரத்துடன் நடந்து கொள்ள முனைந்தால் உடனே புனித நாளை நினைவுபடுத்தி அவர்களை அடக்கிவிடுவார்கள். இத்தகைய மனநிலைமை கைதிகளிடம் இருப்பது போற்றத்தக்கதாகும்.

அசிம் அசிமோவிச்சும் தன் போக்கிலேயே விடுமுறை நாளைக் கழிக்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தான். அவனுக்குக் குடும்பத்தின் நினைவே இருக்கவில்லை. வேறு ஒருவர் வீட்டில் அனாதை போல வளர்ந்து பதினைந்தாவது வயதிலிருந்தே ராணுவ சேவையில் ஈடுபட்ட அவனுக்கு பெற்றோரைப் பற்றிய நினைவு இருக்க நியாயமும் இல்லை. அவனுக்கு எத்தகைய மகிழ்ச்சியும் தெரியாது. சட்டதிட்டங்களிலிருந்து இம்மியும் பிறளாது சலிப்பைக் கொடுக்கும் ஒரே விதமான வாழ்க்கை நடத்திவரக் கூடியவன். மதப்பற்றும் அவனுக்கு அதிகம் கிடையாது. எந்த உண்மையையும் கண்டறிய அவன் துடி துடித்ததும் இல்லை. அதற்காகத் துன்பம் அனுபவித்ததும் இல்லை. இன்று ஒன்றைச் சொன்னது போல் செய்வான். நாளையே அதற்கு முற்றிலும் மாறாகச் செய் என்றாலோ அவ்விதமே உண்மையாக நடந்து கொள்வான். ஒரே ஒரு சமயம்தான் அவன் தன் மனதின் போக்குப்படி நடந்துகொண்டான். அதுவே அவனை ஆயுள் கைதியாகக் கொண்டு சிறைச் சாலையில் தள்ளிவிட்டது. என்ன குற்றம் செய்தோம் என்பதை அவன் இன்னமும் புரிந்து கொள்ளவில்லை. அப்படியும் சிறையின் சட்ட திட்டங்களுக்கு அடங்கி நடந்து வருகிறான்.

அசிம் அசிமோவிச் பண்டிகைக்காகப் புது ஆடைகள் தயாரிக்கவில்லை. ஆறு மாதங்களுக்கு முன் அதிகாரிகள் அளித்த ஆடைகளை அப்படியே வைத்திருந்தான். அவற்றையே அன்று எடுத்து அணிந்து கொண்டான். அவன் தலை மொட்டை அடிக்கப்பட்டிருந்தது.

எல்லா வேலைகளும் முடிந்ததும் விடுதியின் தலைவன் வைக்கோல் எடுத்துவரச் சொன்னான். அது வந்ததும் சிறைச்சாலை விடுதியினுள் பரப்பிப் போட்டார்கள். கிறிஸ்துமஸ் பண்டிகை தினம் சிறைச்சாலையின் விடுதிகளில் இவ்விதம் செய்வது வழக்கம்.

அசிம்அசிமோவிச் பிரார்த்தனை செய்தான். அதன் பிறகு படுத்து குழந்தை போல் தூங்கத் தொடங்கினான். இவ்விதமே எல்லா கைதிகளும் செய்தார்கள். பொழுது விடியும் வரை தூங்க வேண்டும் என்று எண்ணியது போல அது தோன்றியது. ஆனால் அனைவரும் பொழுது விடிவதையே எதிர் பார்த்துக்கொண்டிருந்தனர்.

பொழுது புலர இன்னும் சிறிது நேரம் இருந்தது. அச்சமயம் முரசு முழங்கிற்று. சிறைச் சாலையின் கதவுகள் திறக்கப் பட்டன. சார்ஜென்ட் உள்ளே வந்தான். கைதிகளுக்கு கிறிஸ்துமஸ் வாழ்த்து கூறினான். கணக்கு எடுத்து முடிந்ததும் சென்றான். கைதிகளும் பதிலுக்கு வாழ்த்துக் கூறினர். அதில் அன்பும் மரியாதையும் இருந்தது.

பிரார்த்தனையை முடித்துக் கொண்டு அசிம் அசிமோவிச், மற்றும் பலர் சமையலறைக்குச் சென்றனர். அங்கு பண்டிகை தினத்திற்கான பிரத்யேக இறைச்சிக் கறியைத் தயாரிக்க முற்பட்டனர். ஆனால் வழக்கத்திற்கு மாறாக அன்று அனைவருமே மரியாதையுடனும், கட்டுப்பாடாகவும் நடந்து கொண்டனர். எல்லோருக்குமே அன்று புனிதமான நாள் என்று தெரிந்திருந்தது.

ஒரு விடுதியிலிருந்து மற்றொரு விடுதிக்குப் பலர் சென்று வந்தனர். தங்கள் நண்பர்களுக்கு வாழ்த்துக் கூறியதுடன் நட்பைப் பலப்படுத்தவும் முயன்றனர். நட்புணர்ச்சி எங்கும் காணப்பட்டது. கைதிகளுக்குள் நட்பு என்பது வழக்கத்திற்கு மாறானது. பொதுவான நட்பு பற்றி நான் கூறவில்லை. தனிப்பட்ட முறையில் நட்பு ஏற்படுவதையே கூறுகிறேன். ஒரு கைதி மற்றொரு கைதியுடன் நெருங்கிய நட்புக் கொள்வது மிகவும் கடினமானது. சுதந்திர மக்களுடைய நட்பைப் போன்று இருக்காது. கைதிகளுக்குள் ஏற்படும் நட்பு ஏதோ ஒரு காரணத்தினால் உண்டானதாகவும் அவ்வகையிலேயே நடந்து கொள்வதாகவும் இருக்கும்.

நானும் என் இருப்பிடத்தை விட்டு திறந்த வெளிக்குச் சென்றேன். பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. அச்சமயமும் வானத்தில் தாரகைகள் காணப்பட்டன. பனி பெய்து கொண்டிருந்தது. சமையலறைப் புகைக் கூண்டிலிருந்து புகை வெளிப்பட்டது. வழியில் சந்தித்த கைதிகள் என்னை வாழ்த்தினார்கள். அவர்களில் பலர் என்னுடன் முன்பு பேசியது கூடக் கிடையாது.

ராணுவப் பகுதிக் கைதி ஒருவன் வேகமாக சமையலறைக்குச் சென்றான். அவன் என்னைக் கண்டதும் நின்று புன் முறுவல் செய்தான்.

''என்ன?'' என்று கேட்டேன்.

''கிறிஸ்துமஸ் பண்டிகை'' என்றான் அவன். பிறகு ஒன்றும் சொல்லாமல் சமையலறையை நோக்கி நடந்தான்.

காலை ஆகாரம் தயாராயிற்று. எல்லோருக்குமே பசி அதிகரித்திருப்பது போல் தோன்றியது. அனைவரும் பாதிரியார் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். இன்னமும் பொழுது நன்றாக விடிந்து விடவில்லை. அச்சமயம் அடிக்கடி சிறையின் காவல்காரன் உரத்த குரலில் சமையல் செய்பவர்களை அழைத்தான். நகரத்திலிருந்த வியாபாரிகளும், மத்திய தர வகுப்பினரும், ஏழைகளும், தர்ம சிந்தையுள்ளவர்களும் எங்களுக்காக ரொட்டி, வெண்ணெய், தேன், கேக் முதலியவற்றைக் கொண்டு கொடுத்தார்கள். இந்தப் பொருள்களை வாங்கிக் கொள்ள வந்த கைதிகள், தரை வரை குனிந்து வணக்கம் செய்தார்கள்.

பரிசாகக் கொடுக்கப்பட்ட பொருள்கள் விடுதிகளின் தலைவர்களிடம் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டன. அவர்களும் கைதிகளுக்குச் சமமாகப் பங்கிட்டுத் தந்தனர். இதில் யாரும் வஞ்சனை செய்யவில்லை. பங்கிட்டுக் கொடுத்ததில் ஒருவருக்குக்கூட வெறுப்பு ஏற்படவில்லை. திருப்தியும் மகிழ்ச்சியுமே காணப்பட்டது.

சமையல் வேலை முடிந்ததும் அசிம் அசிமோவிச் புது ஆடை அணிந்து கொண்டான். பிறகு இதயப் பூர்வமாகப் பிரார்த்தனை செய்தான். சற்று வயதானவர்கள் நீண்ட நேரம் பிரார்த்தனை செய்தனர். வாலிபர்களாக உள்ளவர்களோ அப்படிச் செய்யவில்லை. பெரும்பாலானவர்கள் தங்கள்மீது சிலுவைச் சின்னத்தை செய்து கொள்வதுடன் நிறுத்திக் கொண்டனர்.

பிரார்த்தனை முடிந்ததும் அசிம் அசிமோவிச் வந்து எனக்கு வாழ்த்துக் கூறினான். அவனைத் தேநீர் பருக அழைத்தேன். அவனும் பதிலுக்கு விருந்து சாப்பிட அழைத்தான். சிறிது நேரத்திற்குள் பெட்ராவ் வந்தான். அப்பொழுதே அவன் சிறிது சாராயம் பருகியிருந்தான். எனக்கு வாழ்த்துக் கூறிவிட்டு அவன் வேகமாக சமையலறைக்குச் சென்றான்.

ராணுவப் பகுதிக் கைதிகள் பாதிரியாரை வரவேற்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தனர். அவர்களுடைய விடுதியில் நேர்த்தியாக

ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. சாதாரண கைதிகளின் விடுதியைப் போல் அது இருக்கவில்லை. கைதிகளுக்கான அறைகள் இருபக்கங்களிலும் ஓரமாக இருந்தன. நடுவில் நன்றாகப் போய்வர வசதியிருந்தது. மத்தியில் ஒரு கூடமும் இருந்தது. அங்கு ஒரு மேஜை போடப்பட்டு, அதன்மீது சிலை ஒன்று வைக்கப்பட்டிருந்தது. சிலையின் இரு பக்கங்களிலும் மெழுகுவர்த்திகள் ஏற்றி வைக்கப்பட்டிருந்தன.

பாதிரியார் கையில் ஒரு சிலுவையும், புனித நீரும் எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தார். சிலையின் முன்நின்று அவர் பிரார்த்தனை செய்தார். கைதிகளை ஒவ்வொருவராக வந்து சிலுவைக்கு முத்தமிடச் சொன்னார். அவர்களும் பணிவுடன் வந்து பக்தியுடன் சிலுவைக்கு முத்தம் அளித்தார்கள். பிறகு பாதிரியார் புனித நீரை விடுதி முழுவதும் தெளித்தார். கைதிகளைப் பாராட்டினார். அவருக்கு இரண்டு ரொட்டி எடுத்துச் சென்று கொடுக்கத் தீர்மானமாயிற்று.

இதே போல மற்ற பகுதிகளிலும் நடைபெற்றது. எங்கும் பாதிரியாரை பயபக்தியுடன் வரவேற்றனர்.

சிறை அதிகாரியும், மேல் அதிகாரியும் வந்து சேர்ந்தனர். அவர்கள் சிறைச்சாலை முழுவதும் சுற்றிப்பார்த்து அனைவருக்கும் வாழ்த்துக் கூறினர். மேல் அதிகாரி சென்ற பிறகு காலை ஆகாரம் சாப்பிடும்படி கட்டளையிட்டான். சிறை அதிகாரியின் கொடுமையான பார்வையிலிருந்து தப்ப அனைவரும் முயற்சித்தனர். புனித நாளில் ஏதும் தவறு நடக்கக்கூடாது என்று அஞ்சினர். சிறை அதிகாரியும் மேல் அதிகாரியும் சென்ற மறுகணமே காலை ஆகாரம் சாப்பிடத் தொடங்கினர். அந்த ஒரு கணத்திற்குள் எப்படித்தான் சாராயம் பருகினரோ தெரியவில்லை. பலர் மது போதையில் பாட்டுப் பாடிக் கொண்டே அங்கு உலாவத் தொடங்கினர்.

பல நேர்த்தியான பாடல்கள் பாடப்பட்டன. சில கிராமியப் பாடல்கள், ஒவ்வொன்றும் மனதைவிட்டு அகலாத சொற்சுவையுள்ளவை.

வயதானவர்கள் சாப்பிட்ட பிறகு சென்று படுத்துக் கொண்டனர். வாலிபர்களாகவும் நடுத்தர வயதினராகவும் உள்ளவர்கள் ஆடிப்பாடி மகிழ்ந்தனர். விரோதிகளாக உள்ளவர்கள்கூட நெருங்கிப் பழகினர். ஒவ்வொருவரும் ஏசிப் பேசி வேடிக்கையாகப் பொழுதைப் போக்கினர்.

சாராயம் விற்பவன் அன்று வழக்கத்திற்கு மாறாகச் சாராயம் பருகவில்லை. எல்லோருடைய பணத்தையும் பறித்துக் கொண்ட பிறகு அவன் சாராயம் பருக எண்ணியிருக்கலாம்.

நான் என் வேலைகளை முடித்துக் கொண்டு கணப்பருகில் போய் உட்கார்ந்திருந்தேன். மற்ற கைதிகளின் செய்கைகளை உன்னிப்பாகக் கவனித்து வந்தேன்.

ஸ்டபென் வந்தான். அவன் சாராயம் விற்பவனிடம் பேரம் பேசிச் சாராயம் வாங்கினான். அச்சமயம் வேறு ஒரு கைதி வந்து அவனுக்கு வாழ்த்துக் கூறினான். இருவரும் சாராயம் பருகினர். அப்போது மற்றவன் ஸ்டபெனிடம் ''கடந்தது போக நீ இன்னமும் நூறு ஆண்டுகள் வாழ வேண்டும்'' என்றான்.

''ஹூம் அதிருக்கட்டும்'' என்றான் ஸ்டபென்.

''நீ என்னை மோசமாக நடத்தியிருக்கிறாய். அத்துடன்...''

''பேசாதே. உலகம் பரந்து கிடக்கிறது. உன் வழியே போ. நான் என் வழியில் செல்கிறேன். மீண்டும் நாம் சந்திக்காமலிருக்க முயற்சி செய். உன்னைக் காணவே வெறுப்பாக இருக்கிறது''

''அப்படியானால் என் பணத்தைத் திருப்பிக் கொடுக்க மாட்டயா?''

''என்ன பணம்?''

''நல்லது பொறுத்திரு. மறு உலகத்தில் நீ பணத்தைப் பெற்றுக் கொள்ளும்படி கெஞ்சிக் கேட்பாய். நான் பாடுபட்டுப் பணம் திரட்டினேன். என்னை மோசம் செய்கிறாய். மறு உலகத்தில் உன்னிடமுள்ள பணம் நெருப்பு போல் இருக்கும். அதை நான் வாங்கிக் கொள்ள மாட்டேன்''

''சரிதான் போடா.''

இருவரும் அங்கிருந்து சென்றனர்.

பாடிக்கொண்டே வந்த வர்மலாவ் என்னைப் பார்த்து விட்டான். அவன் ஒரு காதல் பாட்டையே பாடினான். அவனுடைய பாட்டு பல்கின் என்பவனுக்கு ஆத்திரத்தை ஊட்டியது. அவன் ஏளனமாக ''இதோ பாருங்கள் பொய் சொல்லுகிறான்'' என்றான்.

வர்மலாவ் என்னைப் பார்த்து, ''எல்லோரும் காலையிலிருந்து சாராயம் பருகி ஆடிப்பாடி மகிழ்கிறார்கள். தயவு செய்து என்னை மன்னியுங்கள்'' என்றான். மீண்டும் பாடத் தொடங்கினான்.

''மீண்டும் பொய் சொல்லுகிறான். அவன் கூறுவதில் ஒன்றுகூட உண்மையானதல்ல'' என்றான் பல்கின்.

''அதனால் உனக்கு என்ன?'' என்று மற்ற கைதிகள் சிரித்துக் கொண்டே பல்கினைக் கேட்டனர்.

''அந்த நாட்களில் நான் மிகவும் அழகாக இருப்பேன். பெண்கள் என்னைத் தேன் எனக் கருதி வண்டுகளைப்போல் மொய்த்துக் கொண்டிருப்பார்கள்'' என்றான் வர்மலாவ்.

''பொய்யின் சிகரத்திற்கே போய் விட்டான்'' என்றான் பல்கின்.

''எனக்குச் சொந்தமாக இரண்டுஅடுக்கு மாடி வீடுகள் இரண்டு இருந்தன. அவற்றை நான் அழித்து விட்டேன். பணம் ஒரு பறவையைப் போன்றது. அதிவேகமாகப் பறந்து சென்று விடுகிறது.''

''இன்னமும் பொய்யே சொல்கிறான்.''

''என் முட்டாள்தனத்தை உணர்ந்து நான் தவறுக்கு வருந்தி என் பெற்றோருக்குக் கடிதம் எழுதினேன். அவர்கள் அனுதாபத்துடன் எனக்கு ஏதாவது பணம் அனுப்புவார்கள் என்று எண்ணினேன். அவர்களுடைய விருப்பத்திற்கு மாறாக நான் நடந்து கொண்டதால் பதிலே எழுதவில்லை. நான் அவர்களுக்குக் கடிதம் எழுதி இன்றைக்கு ஆறு ஆண்டுகளாகின்றன.''

நான் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தேன். பல்கின் மீண்டும் அவன் பொய் சொல்லுவதாகவே கூறினான்.

''காலையிலிருந்து நான் தேநீரைத் தவிர வேறு எதையும் பருகவில்லை என்பது உங்களுக்குத் தெரியும். இப்பொழுதுதான் என் வயிறே ஒரு பெரிய புட்டிபோல் சாராயத்தைப் பருகி விட்டேன்'' என்றான் வர்மலாவ்.

''நல்லவர்களே, அவன் பொய் சொல்கிறான். நம்பாதீர்கள்'' என்றான் பல்கின்.

''அதனால்உனக்கு என்ன?''என்று ஒரு கைதி கேட்டான்.

''அவன் பொய் சொல்லிக்கொண்டே போக விடமாட்டேன். என்னால் அது இயலாது.'' என்றான் பல்கின்.

எல்லோரும் நகைத்தார்கள். வர்மலாவ் எனக்கு வந்தனம் கூறிவிட்டு அங்கிருந்து சென்றான். பல்கினும் அங்கிருந்து சென்றான்.

கைதிகள் அனைவரும் மெள்ள தங்கள் இடத்திற்குச் சென்றனர். ஒவ்வொருவரும் படுக்கையில் படுத்தனர். மறுகணம் குறட்டைவிட்டுத் தூங்கத் தொடங்கினர். மற்ற இரவுகளைவிட அன்று அவர்கள் அளவுமீறி பிதற்றினர்.

# 10

விடுமுறை தினத்தின் மூன்றாம்நாள் மாலை முதல் நாடகம் நடைபெற்றது. நாடகத்திற்காகப் பலத்த ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஆனால் அனைத்தையும் நடிகர்களே மேற்கொண்டு விட்டனர். எங்களுக்கு என்ன நடக்கிறது, எப்படி எல்லாம் நடக்கலாம் என்பதே தெரியாது. என்ன நாடகம் நடத்தப் போகிறார்கள் என்பதையும் அறியோம்.

கடந்த மூன்று நாட்களாக நடிகர்கள் தங்களுக்கு தேவையான ஆடை அணிகளுக்காக எங்கெல்லாமோ அலைந்து திரிந்தார்கள். ஒவ்வொரு சமயமும் அவர்கள் தடுத்து வேலைக்கு அனுப்பட்டனர். நாங்கள் சந்திக்கும்போது பக்லூஷின் மகிழ்ச்சியுடன் விரலைக் கடிப்பான். சிறை அதிகாரியும் மகிழ்ச்சியுடனேயே காணப்பட்டான். அவனுக்கு நாடகத்தைப்பற்றி ஏதாவது தெரியுமா என்பதே சந்தேகம்தான். அப்படித் தெரிந்திருந்தால் அதற்கு அனுமதி கொடுத்திருக்கலாம்.

அவனுக்குத் தெரியும் என்றே நினைக்கிறேன். தெரியாமலிருக்க நியாயமும் இல்லை. ஆனால் நாடகம் நடத்தக்கூடாது என்று தடை விதித்தால் விபரீதமே ஏற்படலாம். கைதிகள் மது அருந்தி கலவரம் செய்யத் தொடங்கலாம். அவ்விதம் செய்தால் அவர்களை அடக்குவது மிகக் கடினம். அதே சமயம் அவர்களுக்கு நாடகம் நடத்த அனுமதி அளித்துவிட்டாலோ அடங்கி ஒடுங்கி நடப்பார்கள். ஒரு கலவரமும் நடைபெறாது. இதுசிறை அதிகாரிக்கு நன்கு தெரியும்.

கைதிகள் விடுமுறை நாட்களைக் கழிக்க நாடகம், அல்லது வேறு பொழுது போக்கு ஆகியவற்றை மேற்கொள்ளாவிட்டால் அதிகாரிகளே அதுபோன்ற ஒன்றிற்கு ஏற்பாடுகள் செய்திருப்பார்கள். ஆனால் சிறை அதிகாரியோ மனித சமூகத்திற்கே மாறுபட்ட வகையில் எதையும் சிந்திக்கக் கூடியவன். அதனால் அவனுக்கு

நாடகத்தைப்பற்றித் தெரியும் என்று நான் எண்ணியது முற்றிலும் தவறானது. சிறை அதிகாரியைப் போன்றவர்களுக்கு சந்தர்ப்பம் கிடைத்தால் யார் உடைமையையும் உரிமையையும் பறிக்கலாம், யாரை ஒரேயடியாக பாதாளத்திற்கு அமுக்கலாம் என்றே சிந்தித்துக் கொண்டிருப்பார்கள். இத்தகைய குணம் படைத்தவன் என்று அவனைக் குறித்து நகரம் முழுவதற்குமே நன்கு தெரியும். ''எந்த ஒரு தவறுக்கும் தண்டனை உண்டு. அதுதான் சட்டம்.'' என்று கூறுவான். மனிதத் தன்மையே அவனிடம் கிடையாது.

நாடகம் நடத்த மாத்திரமே சிறை அதிகாரியின் அனுமதி தேவை. அது இல்லாமலும் நடத்தலாம். காவல்காரர்களின் ஒத்துழைப்பின்மீது ஒரு தவறும் ஏற்படாத வகையில்நாடகத்தை நடத்துவதில் தடையே இருக்கவில்லை. அப்படியே நாடகம் நடக்கும் சமயம் அதிகாரி வருவது தெரிந்தால் அரைக்கணத்தில் எல்லாவற்றையும் அப்புறப்படுத்திவிடலாம். அனைவரும் தங்கள் இருப்பிடத்திற்குச் சென்று படுத்துவிடலாம். அல்லது உட்கார்ந்தோ உலாவிக் கொண்டோ இருக்கலாம். விடுமுறை நாளாகையால் அது குற்றமாகாது.

நாடகத்தைக் குறித்தும் சிலவற்றைக் கூறவேண்டும். முதல் நாடகத்தை எழுதி வைக்கவில்லை. இரண்டாவது மூன்றாவது நாடகத்திற்கு ஒரே ஒரு பிரதியே எழுதியிருந்தார்கள். முதல் நாள் நாடகத்திலிருந்து தொடர்ந்து பார்க்கவரும் பெரிய மனிதர்கள், அதிகாரிகள் ஆகியவர்களுக்காக அதை பக்லூஷின் எழுதியிருந்தான். சிறைச்சாலையினுள் நடத்தும் நாடகத்தின் புகழ் நகரம்வரை பரவ வேண்டும் என்று அனைவரும் விரும்பினர். ஒரு சிறு வெற்றி கிடைத்தாலும் கைதிகள் சிறு பிள்ளைகளைப்போல் ஆனந்தமடைவார்கள்.

''யாருக்குத் தெரியும்? பெரிய அதிகாரிகளுக்கு நமது நாடகத்தின் புகழ் எட்டலாம். அவர்களே நாடகத்தைக் காண வரலாம். கவர்னருக்கும் செய்தி எட்டி அவர்கூட வந்து பார்க்கலாம். பிறகு தண்டனை குறைக்கப்படலாம். அல்லது விடுதலையே கிடைக்கலாம்'' என்று கைதிகள் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டனர்.

எனக்கும் நாடகத்தைப் பற்றிப் பூரணமாகத் தெரியாது. ஆனால் நாடகத்தின் சில பகுதிகளை அறிவேன். ''பில்டகா மிரேஷிகா எதிரி'' என்பதே முதல் நாடகத்தின் தலைப்பு. ஒரு வாரத்திற்கு முன் பல்லூஷின் இந்த நாடகத்தைக் குறித்துப் பெருமையாகப் பேசிக் கொண்டான். இதைப்போன்ற நாடகத்தை பீட்டர்ஸ்பர்க்

நகரத்தில்கூட யாரும் பார்த்திருக்க மாட்டார்கள் என்றான். பில்டகாவாக பக்லூஷினே நடிக்கப் போகிறான். அவனுடைய காதலியாக சிரோடிகின் என்ற கைதி நடிக்கிறான். ''நீங்கள் வேண்டுமானால் பாருங்கள். சிரோடிகின் பெண் வேடத்தில் எப்படி இருக்கப் போகிறான்?'' என்றான் பக்லூஷின்.

இரண்டாவது நாடகம் ''கெபுரில் கிலிட்டன்'' என்பதே. இந்தத் தலைப்பு எனக்குப் பிடித்தமாக இருந்தது. நாடகத்தைக் குறித்து நான் ஒன்றும் கேட்கவில்லை. ஆனால் இது ஒரு புத்தகமாக வெளி வராத சிறு நாடகம் என்று அறிந்தேன். இந்த நாடகத்தின் முடிவில் கதாநாயகனை பேய் வந்து நரகலோகத்திற்குத் தூக்கிச் சென்று விடுகிறதாம்.

பதினைந்து நடிகர்கள் இருந்தார்கள். எல்லாருமே துணிவானவர்கள். ஒன்றை உடன் புரிந்துகொள்ளும் சக்தி படைத்தவர்கள். நாடாக ஒத்திகை சிறைச்சாலையின் மதிற் சுவருக்கு அருகிலேயே நடைபெறும். அதுவும் யாருக்கும் தெரியாமல் நடத்துவார்கள். நாடகத்தைப் பற்றியவரை அவர்கள் அனைத்தையும் ரகசியமாகவே வைத்திருந்தார்கள். திடீரென்று எங்களை ஆச்சரியக் கடலில் ஆழ்த்தவேண்டும் என்பதே அவர்களுடைய எண்ணம்.

சாதாரண நாட்களில் மாலை மங்கியதுமே விடுதியின் கதவுகளை மூடிப் பூட்டி விடுவார்கள். ஆனால் கிறிஸ்துமஸ் பண்டிகை விடுமுறை நாட்களில் இந்தக் கட்டுத்திட்டம் சற்று தளர்த்தப்படும். இரவு முரசு முழங்கும்வரை கதவுகளை மூடிப் பூட்டமாட்டார்கள். இந்த சலுகை நாடகத்திற்கும் காட்டப்பட்டது. விடுமுறை நாள் ஒவ்வொன்றின் மாலையிலும் ''நாடகம் முடிவடையும்வரை கதவுகளை மூடிப் பூட்டாமலிருக்கவும், எந்த ஒரு கலவரமும் நடைபெறாது என்று உறுதி கூறுகிறோம். நேற்று ஒரு கலவரமும் ஏற்படவில்லை. தயவுசெய்து எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கவும்'' என்று ஒரு தூதனை அதிகாரியிடம் அனுப்புவோம்.

''கலவரம் நடைபெறாது என்ற உறுதிமொழியை நம்புகிறேன். நேற்று கலவரம் நடைபெறவில்லை என்பது உண்மைதான். எல்லோரும் கைதிகள்தானே! நாடகம் நடத்துவது குற்றம்தான். ஆனால் ஏதும் சச்சரவு நடைபெறாமல் பார்த்துக் கொள்வது காவலாளிகளின் கடமை''என்று அதிகாரி கூறுவான்.

இதுவும் ஏற்க வேண்டிய ஒன்றுதான். காவல் வேலை சலிப்பைக் கொடுக்கக்கூடியது. மேலும் இது சாதாரண சிப்பாய்கள் நடத்தும் நாடகம் அல்ல. கைதிகளோ விசித்திரமான குணமுடையவர்கள். அவர்கள் நடவடிக்கைகளை ஒவ்வொரு இரவும் கவனித்து வரவேண்டியது அவசியம்தான்.

மாலை ஆறுமணி சுமாருக்கு பெட்ராவ் வந்தான். என்னை நாடகத்திற்கு அழைத்துச் சென்றான். பழைய மதக்கோட்பாடுகளில் நம்பிக்கையுடையவர்களும் போலந்துக்காரர்களும் நாடகம் பார்க்க வரவில்லை. இவர்கள் கடைசிநாள் நாடகம்வரை மனதை மாற்றிக் கொள்ளவில்லை.

நாடகம் ஆரம்பமாகும் சமயம் மூன்று கோபக்குகளும் முடிவில் பத்து கோபக்குகளும் ஈசய்யா கொடுத்து வந்தார். நடிகர்கள் தங்களுடைய செலவுகளைச் சரிக்கட்ட ஒவ்வொருவரிடமும் ஏதாவது பணம் கேட்டு வாங்கினார்கள். நான் பணக்காரன், என்னிடம் அதிகமாகப் பணம் எதிர்பார்க்கலாம் என்ற எண்ணத்திலேயே பெட்ராவ் எனக்கு நல்ல இடமாகவும், முன் பாகத்திலும் ஏற்பாடு செய்திருந்தான்.

நாடகசாலையைக் குறித்தும் சிறிது விவரிக்கிறேன். நாடக அரங்கத்தை ராணுவக் கைதிகள் விடுதியிலேயே அமைத்தனர். அங்குதான் இடவசதி இருந்தது. விடுதியின் நடுவில் நாடக அரங்கம். அதன் அருகில் சில நாற்காலிகளும், பலகைகளும் போடப்பட்டிருந்தன. இவை அதிகாரிகள், பெரிய மனிதர்கள் ஆகியோருக்காக ஒதுக்கப்பட்டிருந்தன. சாதாரண கைதிகள் எங்கு வேண்டுமானாலும் உட்காரலாம். பணம் அதிகமாகக் கொடுப்பவர்கள் மாத்திரம் பலகை அல்லது நாற்காலியில் உட்கார வேண்டும்.

பத்து அடி அகலமுள்ள திரை தொங்கவிட்டிருந்தார்கள். அதை பல கந்தைத் துணிகளை ஒன்றாகச் சேர்த்துத் தைத்து வர்ணம் பூசியிருந்தார்கள். பைரைஸோ தன் ஓவியக் கலைத்திறமையைக் காட்டியிருந்தான். விளக்குகள் மெழுகுவர்த்திகளே. மேஜைக்கு அருகில் பல மெழுகுவர்த்திகளைக் கொளுத்தி வைத்திருந்தார்கள். வெளிச்சம் அதிகமாக இல்லாவிட்டாலும் உள்ளதே போதுமானதாகக் காணப்பட்டது.

வெளியில் குளிர் அதிகமாக இருந்தும் நாடகம் பார்க்க வருபவர்களின் வசதிக்காக கதவுகள் திறந்து வைக்கப்பட்டிருந்தன. கைதிகளும் உள்ளே வந்து குழுமினர். சிலர் கணப்பின் அருகிலுள்ள மேடையிலும் ஏறிப் படுத்துக் கொண்டனர்.

என்னைக் கூட்டத்தினரிடையே பெட்ராவ் அழைத்துச் சென்றான். மேடைக்கு அருகாமையிலுள்ள நாற்காலியில் உட்கார வைத்தான். அங்கு பக்லூஷின் வந்து என்னிடம் ஆலோசனை கேட்பதை மற்ற கைதிகள் பார்த்தனர். ஒரு சமயம் என்னைக் கேலி செய்த கைதிகளே அப்போது மரியாதையுடன் நடந்து கொண்டனர். வீழ்ச்சியடைந்த

பிரபுவாகக் கருதி ஏளனம் செய்யவில்லை. மேலும் என்னை அவர்களின் நாடகத்தைக் குறித்து பாரபட்சமின்றி உண்மையை எடுத்துக் கூறும் நீதிபதியாகவும் கருதினர். என்னிடம் விரோதமாக இருந்தவர்கள்கூட என்னுடைய அனுமதியைப் பெற முயற்சித்தனர். அச்சமயம் அவர்களிடம் கர்வமோ அலட்சியத் தன்மையோ காணப்படவில்லை. நாடக நாட்கள் கடந்தும் அவர்கள் மரியாதையுடனேயே நடந்து வந்தார்கள்.

நாடக மேடைத்திரையுடன் தோற்றமளித்த கைதிகள் விடுதி வினோதமாக இருந்தது. நான் மேடையின் அருகில் உட்கார்ந்து திரும்பிப் பார்த்தேன். எங்கும்மொட்டைத் தலைகளாகத் தென்பட்டன. பார்த்த முகமெல்லாம் மகிழ்ச்சியுடன் இருந்தன. ஒவ்வொருவர் முகத்திலும் குழந்தைகளைப் போன்ற களங்கமற்ற ஆனந்தம் தாண்டவமாடிற்று. கண்கள் ஒளியுடன் பிரகாசித்தன.

கடைசியாக திரை தூக்கப்பட்டது. வாத்தியங்கள் முழங்கத் தொடங்கின. வாத்தியக் கருவிகள் பல சிறைச் சாலையின் பட்டறையில் தயாரிக்கப்பட்டன. ஒரு பிடில் முன்பே இருந்தது. மற்றொரு பிடில் வெளியிலிருந்து வாங்கி வந்திருந்தார்கள். இசை அமைப்பு, பாடல், வாத்தியக் கருவிகளைக் கையாண்ட முறை ஆகிய அனைத்துமே சிறைச்சாலைக் கென்றே ஏற்பட்ட பிரத்யேக முறையில் இருந்தன. தகப்பனாரைக் கொன்ற சீமான்தான் கெயிட்டர் வாத்தியத்தை வாசித்தான். அவனுடைய விரல்கள் தந்திக் கம்பிகளின் மீது நடனமாடின. இசைக் கருவிகளைக் கையாண்டவர்கள் அனைவருமே அற்புதத்தை விளைவித்தனர். என் வாழ்க்கையில் முதன் முறையாக ரஷ்ய கிராமிய நடனப் பாடல்களைக் கேட்டு அனுபவித்தேன்.

திரை விலகியது. நாடக அரங்கில் ஒரு மாற்றம் உண்டாயிற்று. அங்கிருந்த அனைவரும் நிமிர்ந்து உட்கார்ந்தனர். நின்றிருந்தவர்களோ உடலின் பாரத்தை ஒரு காலிலிருந்து மற்றொன்றிற்கு மாற்றிக்கொண்டனர். சுவரில் சாய்ந்திருந்த ஒருவன் திடீரென்று கீழே விழுந்தான். ஆனால் எல்லோருடைய வாயும் ஆச்சரியத்தால் திறந்திருந்தது. கண்கள்மேடையையே நோக்கிக் கொண்டிருந்தன. நாடகமும் ஆரம்பமாயிற்று.

என் அருகில் அலியும், அவனுடைய சகோதரர்களும் நின்றிருந்தனர். அவர்கள் அனைவரும் தினமும் ஆவலோடு நாடகத்திற்கு வருவார்கள். மலைவாசிகளும், முகம்மதியர்களும் பொதுவாக நாடகத்தின்மீது பற்றுதலையும், அதற்கு ஆதரவையும் காட்டினர். ஈசய்யாவும் அங்கேயே நின்றிருந்தான். அனைவருமே

மேடையில் நடைபெறப் போகும் அற்புதத்தை எதிர் நோக்கி ஆவலோடு இருந்தார்கள். சிறுபிள்ளை போன்ற கள்ளங்கபடமற்ற அலியின் முகம் ஒன்றே எனக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்திற்று. நடிகர்கள் ஏதாவது வேடிக்கையாகப் பேசி நடித்தால் நான் உடனே அலியின் பக்கம் திரும்பி அவன் முகத்தைப் பார்ப்பேன். அவனோ என்னையோ, மற்றும் எதையோ பார்க்க மாட்டான். அவனது பார்வை நாடக மேடையிலேயே இருந்தது. அலிக்குப் பக்கத்தில் விடுதியின் தலைவன் இருந்தான். அவனுக்கு எதிலுமே திருப்தி ஏற்படாது. அவன் கூட அடிக்கடி அலியின் பக்கம் பார்த்துப் புன்முறுவல் செய்தான்.

பில்டகா மிரோஷிகா நாடகம் ஆரம்பமாயிற்று. பில்டகாவாக பக்லூஷின் நடித்தான். அவனுடைய தோற்றமும் நடிப்பும் வெகு நேர்த்தியாக இருந்தது. வசனங்களை நல்ல முறையில் சந்தர்ப்பத்திற்கேற்ற வகையிலும் பேசினான். மாஸ்கோ, பீட்டர்ஸ்பர்க் நகரம் ஆகிய எதிலுமே உள்ள நடிகர்கள் பக்லூஷினுக்கு இணையாக அந்த பாகத்தை நடிக்க முடியாது.

கெடிரலாக நடித்தவன் போட்ஸ்கின். அவன் பக்லூஷினைவிடச் சிறந்த நடிகன் என்று கூறப்பட்டது. அவனுடைய நடிப்பு என் மனதைக் கவர்ந்தது. காதல் கட்டத்தில் பக்லூஷினை எல்லோரும் உற்சாகப்படுத்தினார்கள். அவனுடைய நடிப்பைப் பாராட்டும் வகையில் கைகொட்டி ஆரவாரம் செய்தனர்.

கைகளிலும் கால்களில் விலங்குகள் பிணைக்கப்பட்டுப் பல ஆண்டுகள் சிறையிலேயே வாழ்க்கை நடத்திவரும் அந்தக் கைதிகளின் உணர்ச்சியை எப்படித்தான் வர்ணிப்பது. மேலும் மேடையில் தோன்றி நடிக்கும் நடிகர்களும் விலங்குகளுடன் இருப்பவர்கள்தான். தினமும் காணும் அவர்கள் மேடையில் மாறுபட்டு இருந்தார்கள்.

நெஸ்ட் வெஸ்தியா-சீமானாக நடித்தான். அவனுடைய நடையும், கையில் உள்ள பிரம்பை ஆட்டுவதும் இயற்கையாக இருந்தது. அவன் சிறு பையனாக இருக்கும் போது பண்ணையில் வேலை செய்து கொண்டிருந்தான். அப்போது சீமான்களின் நடை உடைகளைக் கவனித்திருக்கலாம். அதனாலேயே அவன் இயற்கையான வகையில் நடிக்க முடிந்தது.

இரண்டாவது நாடகத்தில் கதாநாயகன் ஒரு காதல் பித்தனாகவே காணப்பட்டான். அவனைப் பல பெண்கள் தாமாகவே முன் வந்து காதலிக்கத் தொடங்கினர். கதாநாயகனாக நடித்தவனும் தோற்றத்திலும் நடிப்பிலும் அனைவரையும் கவரக்கூடிய வகையில்

இருந்தான். அவனுடைய வேலைக்காரனாக வந்தவனோ எல்லோரையும் சிரிக்க வைக்கும்படி நடித்தான். அவனுடைய ஒவ்வொரு செய்கையும் சிரிப்பை உண்டு பண்ணிற்று. எஜமானனைப் பேய் தூக்கிச் செல்லும் போது அவன் மேஜையின் அடியில் உட்கார்ந்து கோழிக்கறியைத் தின்று கொண்டிருந்தான். ஒரு கையில் சாராயபுட்டி வேறு இருந்தது. ஆனால் அவன் சாராயம் பருக புட்டியை வாய் அருகில் கொண்டுபோன சமயம், பேய் வந்து அவனைப் பற்றிக் கொண்டது. அவனைப் பேய் மேலே தூக்கிச் செல்லும் சமயம் அங்குள்ளவர்கள் வயிறு புண்ணாகும் வண்ணம் சிரிக்க வைத்தான். உதவிக்காக அவன் போட்ட கூக்குரலோ உள்ளத்தை உலுக்குவதாக இருந்தது.

மற்றொரு சிறு நாடகத்தில் கிராமத்தவன் ஒருவனுக்கு பருவ மங்கை மனைவியாக இருந்தாள். அவன் வீட்டு வேலைகளை முடித்துக் கொண்டு வெளியே செல்லும் சமயம் கையில் சாட்டையை எடுத்தான். அதை மனைவியிடம் காட்டி ''நான் இல்லாத சமயம் யாராவது இங்கு வந்தால் இது தான்'' என்று கூறி விட்டுச் சென்றான். யுவதியும் அவன் சென்ற பிறகு வீட்டின் கதவைத் தாளிட்டு விட்டு உள்ளே உட்கார்ந்து கொண்டாள். சிறிது நேரத்திற்கெல்லாம் கதவு தட்டப்பட்டது. யுவதி எழுந்து சென்று கதவைத் திறந்தாள். வெளியில் ஒரு வாலிபன் நின்று கொண்டிருந்தான். அவன் அந்த யுவதியின் காதலர்களில் ஒருவன். யுவதி அவனை உள்ளே வரச் சொன்னாள். பிறகு கதவை மூடித் தாளிட்டாள்.

இருவரும் மகிழ்ச்சியுடன் பேசும் சமயம் மீண்டும் கதவு தட்டப்பட்டது. காதலனை ஒரு மறைவான இடத்தில் இருத்திவிட்டு கதவைத் திறந்தாள் யுவதி. அப்போது அவளுடைய மற்றொரு காதலன் வந்திருந்தான். அவனை அழைத்துக் கொண்டு உள்ளே சென்று கதவைத் தாளிட்டாள் யுவதி. இருவரும் ஆனந்தமாகப் பொழுதைப் போக்கத் தொடங்கினர்.

திடீரென்று கதவு தட்டப்பட்டது. காதலனை மறைத்து விட்டு யுவதி சென்று கதவைத்திறந்தாள். மீண்டும் மற்றொரு காதலன் வந்திருந்தான். யுவதி மகிழ்ச்சியுடன் அவனை வரவேற்றுக் கதவைத் தாளிட்டுவிட்டு உள்ளே சென்றாள். இருவரும் இன்பமாகப் பேச ஆரம்பித்தனர். அதே சமயம் கதவு பலமாகத் தட்டப்பட்டது. யுவதி இச்சமயம் பயந்து காதலனை கணப்பின் மேல்பாகத்தில் மறைத்து விட்டுக் கதவைத் திறந்த போது அவளுடைய கணவனே எதிரில் கையில் சாட்டையுடன் நின்று கொண்டிருந்தான். அவன் கோபமாக அவளை உள்ளே பிடித்துத் தள்ளி ''இங்கு மூவர் வந்தனரே, அவர்கள் எங்கே?'' என்று கேட்டான்.

யுவதி ஒன்றும் அறியாதவளைப் போல எழுந்து உள்ளே சென்றாள். கணவன் வீடு முழுவதும் தேடி ஒவ்வொருவராக மூவரையும் கண்டு பிடித்தான். அவர்களை சாட்டையில் அடித்துத் துரத்தினான். இந்த நாடகமும் அனைவரையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது.

கடைசி நாடகத்தில் ஒரு சவத்தை வைத்துக்கொண்டு இரு கட்சியினர் சர்ச்சை செய்கின்றனர். பொழுது போய்க் கொண்டேயிருந்தது. கடைசியாகச் சூரியன் மறையத் தொடங்கினான். அச்சமயம் இரு கட்சியினரும் ஒன்றுபட்டு சவத்தை அடக்கம் செய்யத் தூக்கும் சமயம் இறந்தவன் உயிர்பெற்று எழுந்து விட்டான். இதைக் கண்டதும் இரு கட்சியினரும் மகிழ்ச்சியடைந்து உயிர்பெற்று எழுந்தவனைக் கட்டித் தழுவி வீட்டிற்கு அழைத்துச் சென்றனர்.

நாடகம் முடிவடைந்தது. எல்லோரும் திருப்தியுடன் தங்கள் இருப்பிடத்திற்குத்திரும்பினர். ஒருவரும் சர்ச்சை செய்யவில்லை. சிறை வாழ்க்கையில் அவதியுறும் அவர்களுக்கு நாடகம் பார்த்த சிறிது நேரம் மன அமைதியையும் மகிழ்ச்சியையும் உண்டுபண்ணிற்று. எல்லோரும் அமைதியாகப் படுத்துத் தூங்கத் தொடங்கினர். நானும் படுத்துக் கொண்டேன்.

நள்ளிரவு நேரத்தில் தூக்கம் கலைந்து எழுந்தேன். நாலா பக்கங்களிலும் பார்வையைச் செலுத்தினேன். என் அருகில் படுத்திருந்த அலி நாடகத்தை அப்போதும் பார்த்துக்கொண்டிருந்தது போலவே தோன்றியது. நாடகத்தில் வந்த வேடிக்கை பாகங்களை நினைத்து அச்சமயமும் சிரித்துக் கொண்டிருந்தான். வாய் விட்டும் ஏதேதோ சொல்லிக் கொண்டிருந்தான்.

மற்ற கைதிகளோ மோசமான படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தார்கள். மங்கலான வெளிச்சத்தில் அவர்களுடைய முகத்தைப் பார்த்தேன். ஒவ்வொருவரும் ஏதோ கனவு கண்டு கொண்டிருந்தனர். சிலர் வழக்கத்திற்கும் அதிகமாகப் பிதற்றினர். சிலர் விலங்குகள் கல கல வென்று சப்திக்கக் கையையும் காலையும் அசைத்தனர். அதே சமயம் வயதான கைதி ஒருவன் கணப்பருகில் உட்கார்ந்து பிரார்த்தனை செய்து கொண்டிருந்தான். அவன் வாய்விட்டு ''கர்த்தரே எங்கள் மீது கருணை காட்டுங்கள்'' என்று அங்குள்ள அனைவருக்குமாகப் பிரார்த்தனை செய்தான். கர்த்தரிடம் வேண்டிக் கொண்டான்.

''எல்லைக் காலத்திற்கும் நான் இங்கேயே இருக்கப் போவதில்லை. சில ஆண்டுகளே இருப்பேன்'' என்று சொல்லிக் கொண்டு நான் மீண்டும் படுக்கையில் படுத்தேன்.

# 11

கிறிஸ்துமஸ் பண்டிகைக்குப் பிறகு நான் நோய்ப்பட்டு படுத்து விட்டேன். என்னை ராணுவ மருத்துவ சாலைக்கு அனுப்பினார்கள். மருத்துவ சாலைக் கட்டடம் சிறைச் சாலையிலிருந்து அரை கிலோ மீட்டரில் இருந்தது. ஒற்றைமாடியுடைய அது, மஞ்சள் வர்ணம் பூசப்பட்டிருந்தது. மருத்துவமனைக்கு அருகில் மருத்துவர்களுக்கான விடுதிகளும், காரியாலயமும் இருந்தன. மருத்துவ மனையின் ஒரு பகுதியை கைதிகளுக்காக ஒதுக்கியிருந்தார்கள். வெயில் காலத்தில் அங்கு நோயாளிகள் அதிகமாக இருப்பார்கள். அச்சமயங்களில் அவர்களுக்காகப் புதுப் படுக்கைகள் போடப்படும். இடமும் நெருக்கமாகி விடும். அந்த இடத்தில் ராணுவக் கைதிகளும், எங்கள் சிறைச் சாலையைச் சேர்ந்த கைதிகளும் இருந்தார்கள். சிறைச்சாலைக் கைதிகள் துரதிர்ஷ்டம் பிடித்தவர்கள்.

அங்கு தண்டனை பெற்ற கைதிகளும் தண்டனையை எதிர் நோக்கியுள்ளவர்களும் கூட இருந்தார்கள். சிறு குற்றங்கள் புரிந்தவர்களும், நம்பத்தகாத சிப்பாய்களும் அங்கு சீர்திருந்து வதற்காக அனுப்பப்படுவார்கள். ஆனால் அங்கு இரண்டு ஆண்டுகள் இருந்து வெளியேறியதும் மிகவும் மோசமான குற்றங்களையே அவர்கள் செய்வார்கள். அவர்களைப் போன்ற மோசமான குணமுள்ளவர்களைக் காணவும் முடியாது.

நோய்வாய்ப்பட்ட கைதிகள் வழக்கமாக மறுநாள் காலை சிறை அதிகாரியிடம் தங்கள் குறையைக்கூறுவார்கள். அவர்கள் பெயர்களை ஒரு புத்தகத்தில் பதிவு செய்து கொண்டு காவல்காரர்களுடன் மருத்துவமனைக்கு அனுப்பு வார்கள். மருத்துவர்கள் எல்லா நோயாளிகளையும் பரிசோதனை செய்வார்கள். உண்மையிலேயே கடுமையான நோய் கண்டவர்களை மருத்துவ மனையில் மருத்துவத்திற்காக அனுமதிப்பார்கள்.

எல்லோரும் வேலைக்குப் போன பிறகு என் பெயரை பகல் ஒரு மணிக்குப் புத்தகத்தில் பதிவு செய்தார்கள். மருத்துவ சாலைக்கும் அழைத்துச் சென்றார்கள். முதல் நாள் மருத்துவமனையில் சாப்பிட எதுவும் கொடுக்க மாட்டார்கள். அதனால் நோயாளிகள் தங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களை எடுத்துச் செல்லலாம். அத்துடன் பணம், புகையிலை, சுங்கான் முதலியவற்றையும் எடுத்துக் கொண்டு போகலாம். ஆனால் அவற்றை அதிகாரிகள், மருத்துவர்கள் ஆகியோர் பார்வையில் படாமல் மறைத்து வைத்துக் கொள்ளவேண்டும்.

அன்று வெப்பமாக இருந்தது. என்னை காவல்காரர்கள் அழைத்துப் போனார்கள். என்னுடன் இரண்டு நோயாளிக் கைதிகளும் வந்திருந்தனர். மருத்துவரின் உதவியாளன் வந்து எங்களை அதிகார தோரணையில் பார்த்தான். பிறகு அவன் மனம்போல நிதானமாக மருத்துவரிடம் சென்று விவரத்தைக் கூறினான். உடனே மருத்துவர் வந்தார். எங்களைப் பரிசோதனை செய்தார். அன்புடன் பேசினார். எங்களுக்கான சீட்டை எழுதினார். அதில் எத்தகைய மருத்துவம், என்ன மருந்து, ஆகாரம் முதலியவற்றை கொடுக்கவேண்டும் என்று கைதிகளுக்கு மருத்துவம் செய்வதற்காக ஒதுக்கப்பட்ட பகுதி மருத்துவருக்குக் குறித்துக் கொடுத்தார்.

மருத்துவர்களை ''தகப்பனாரை விட மேலானவர்கள்''என்று கைதிகள் புகழ்வதை நான் கேட்டிருக்கிறேன். அதே விதமாகத்தான் மருத்துவர்களும் இருந்தார்கள்.

மருத்துவமனைக்கு அனுப்புவதற்கு முன் எங்கள் ஆடைகளை மாற்றினார்கள். மருத்துவ சாலையின் ஆடைகளை அணிவித்தார்கள். தலைக்குத் தொப்பியும், குளிருக்கு அடக்கமான கதகதப்பு ஆடையும் கொடுத்தார்கள். மேல் அங்கி ஒரேயடியாக அழுக்குப் படிந்திருந்தது. அப்படியும் அது தேவையாக இருந்தது.

எங்களைக் கைதிகளுக்கான பகுதிக்கு அழைத்துச் சென்றார்கள். வெளித் தோற்றத்திற்கு எல்லாமே சுத்தமாகக் காணப்பட்டன. தண்டனையை எதிர் நோக்கியுள்ள இரண்டு கைதிகளை வேறு ஒரு பகுதிக்கு அனுப்பினார்கள். கைதிகளின் பகுதியின் வாயிலில் ஆயுதம் தாங்கிய சிப்பாய் ஒருவன் காவல் புரிந்து கொண்டிருந்தான். அவனுக்கு ஒரு உதவியாளனும் இருந்தான். என்னை உள்ளே அனுமதிக்கும்படி அவர்களிடம் மருத்துவ மனையைச் சேர்ந்தவன் கட்டளையிட்டான்.

இருபது கட்டில்கள் போடப்பட்ட கூடத்தில் என்னை அழைத்துச் சென்றார்கள். கட்டில்கள் இரு கூராக போடப்பட்டிருந்தன. அவற்றில் நான்கு கட்டில்கள் காலியாக இருந்தன. கட்டில்களில் போடப்பட்டிருந்த படுக்கைகளிலுள்ள மூட்டைப் பூச்சிகள் ரஷ்யா தேசம் முழுவதும் பிரபலமானவை.

என்னுடைய கட்டில் ஜன்னல் ஓரத்தில் ஒரு ஒதுக்குப்புறமான பகுதியில் இருந்தது. அங்குள்ள நோயாளிகளில் சிலர் எங்கள் சிறைச் சாலையைச் சேர்ந்தவர்கள். அவர்களில் சிலருக்கு என்னை நன்றாகத் தெரியும். சிலரோ என்னைக் குறித்துக் கேள்விப்பட்டிருப்பார்கள். ஆனால் அங்குள்ளவர்களில் பெரும்பாலானவர்கள் ராணுவத்தைச் சேர்ந்தவர்களாகவும் தண்டனையை எதிர் நோக்கியிருப்பவர்களாகவுமே இருந்தார்கள். மருத்துவமனையிலுள்ள அனைவருமே கடுமையான நோயுடன் அவதிப்படுபவர்கள் அல்ல. மிகவும் நோயோடு போராடுபவர்கள் ஒன்று, கட்டிலின் மீது உட்கார்ந்திருப்பார்கள், அல்லது கட்டிலின் இடைவெளியில் உலாவுவார்கள்.

மருத்துவமனையில் எல்லாவிதமான நாற்றமும் வீசிக் கொண்டிருந்தது. முக்கியமாக மருந்துகளின் வாசம் மூக்கைத் துளைத்தது. நோயாளிகள் படுக்குமிடம் எப்போதும் சதசதப்பாகவே இருந்தது. என் படுக்கையில் ஒரு கம்பளமும் மடித்து வைக்கப்பட்டிருந்தது. அலமாரிகளில் தேநீர் தயாரிக்கும் பாத்திரங்கள் இருந்தன. நோயாளிகளில் சிலரே தேநீர் பருகக் கூடியவர்களாக இருந்தார்கள். ஆனால் அதிக நோயுடன் அவதிப்படுபவர்கள்கூட புகையிலை சுங்கான் ஆகியவற்றை படுக்கையின் அடியில் மறைத்து வைத்திருந்தனர். நோயாளிகள் புகை பிடிப்பதையோ, அவர்கள் சுங்கான், புகையிலை ஆகியவற்றை வைத்திருப்பதையோ மருத்துவர்களோ அதிகாரிகளோ பார்த்தாலும் பார்க்காதது போல நடந்து கொள்வார்கள். அதே சமயம் நோயாளிகளும் கணப்பருகிலேயே நின்று புகை பிடிப்பார்கள். அப்படிச் செய்வதால் அவர்கள் புகை பிடிப்பதை உடனே மறைக்க இயலும். மேலும் இரவு நேரத்திலேயே அவர்கள் புகை பிடிப்பார்கள். இரவு நேரங்களில் காவல்காரர்களைத் தவிர வேறு எவரும் உள்ளே வந்து பார்க்கமாட்டார்கள்.

அதற்கு முன், நான் மருத்துவமனைக்குச் சென்றதே இல்லை. அது எனக்குப் புது அனுபவமாகும். நான் மருத்துவ மனைக்கு வந்ததும் என்னை நோயாளிகள் விசித்திரமான வகையில் பார்த்தனர். பள்ளிக்கு வரும் புது மாணவனாகவும் விண்ணப்பத்தை அளிக்க

கவந்தவனாகவுமே என்னை அவர்கள் கருதினர். எனக்கு வலது பக்கம் ஒரு ராணுவ அதிகாரியின் மகன் இருந்தான். அவன் தண்டனையை எதிர் நோக்கிக் காத்திருந்தான். அவன் மீது கள்ள நாயணம் தயாரித்ததாகக் குற்றம் சாட்டப்பட்டிருந்தது. கடந்த ஒரு ஆண்டு காலமாக அவன் மருத்துவ மனையிலேயே படுத்துக் கொண்டிருந்தான். வெளித் தோற்றத்திற்கு நல்லவிதமாகக் காணப்பட்டாலும் கடுமையான நோய்க்கு அவன் இலக்காகியிருந்தான். இருபத்தி எட்டே வயதான அவன் சட்டத்தைப் பற்றி நன்கு அறிந்தவன். மிகவும் மோசமான குணமும் வஞ்சகமான எண்ணமும் கொண்ட அவன் தன்னை நேர்மையானவன், ஒரு குற்றமும் செய்யாதவன் என்று என்னிடம் கூறினான். அவன்தான் என்னுடன் முதலில் பேசியவன். மருத்துவ மனையின் சட்டதிட்டங்களில் சிலவற்றை எனக்கு அவன் தெரிவித்தான்.

அவனுக்குப் பிறகு ராணுவத்தைச் சேர்ந்த கைதி ஒருவன் என்னிடம் பேசினான். நரைத்த தலையுடைய அவன் தனக்குப் பல சீமான்களைத் தெரியும் என்றான். அவன் பொய் சொல்கிறான் என்று நன்கு தெரிந்தது. செக்னாவ் என்ற அவன் என் நன்மதிப்பை பெற எண்ணினான். என்னிடம் பணம் இருப்பது அவனுக்குத் தெரிந்தது. தேயிலை, சர்க்கரை ஆகியவை என்னிடம் இருப்பதை அறிந்த அவன், தேநீர் தயாரிக்கும் பாத்திரத்தை எடுத்து வந்தான். அடுத்த நாள் வரும்போது எனக்குத் தேநீர் தயாரிக்கும் பாத்திரத்தை எடுத்து வருவதாக என் சக கைதி ஒருவன் வாக்களித்திருந்தான்.

ஆனால் செக்னாவ் தேநீர் தயாரிக்க ஒரு இரும்புப் பாத்திரத்தை எடுத்து வந்தான். அவனே தேநீரும் தயாரித்துக் கொடுத்தான். இதை கடுமையான நோயினால் பிடிக்கப்பட்ட உத்னாவ் என்ற கைதி கேவலமாகக் கருதினான். இவன்தான் கசை அடிக்குப் பயந்து சாராயத்தில் மூக்குத் தூளை கலந்து குடித்து கடுமையாக ரத்த வாந்தி எடுத்தவன். அவன் செக்னாவ் செய்வதை உன்னிப்பாகக் கவனித்து வந்தான். பிறகு அவனைக் கேவலமாகப் பேசத் தொடங்கினான். செக்னாவும் வாயை மூடிக்கொண்டிருக்கவில்லை. இருவருக்கும் சொற்போர் மூண்டது. கடைசியில் அதிகமாகப் பேசியதன் காரணமாக உத்னாவ் ரத்தவாந்தி எடுக்கத் தொடங்கினான். அவனுடைய கண்கள் பஞ்சடைந்தன. பலவீனமான அவன் கூறியவற்றை செக்னாவ் மறுகணமே மறந்து விட்டான்.

உத்னாவைத் தவிர அங்குள்ளவர்களில் எவரும் செக்னாவின் செயலைத் தவறாகக் கருதவில்லை. ஒன்று அல்லது இரண்டு கோபக்குகளுக்காக அவன் பிறருக்கு உதவி செய்வதைத் தடுக்கவில்லை.

உண்மையில் உத்னாவின் எண்ணம் இதுதான். தண்டனை அடைந்து கையிலும் காலிலும் விலங்குகள் பூட்டப்பட்ட பிறகும் நான் பிரபுக்களைப் போலவே நடந்து கொள்வதை அவன் விரும்பவில்லை. சிறைச்சாலையில்கூட நான் ஒருவன் உதவியை நாடுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் நானோ என் வேலைகளைச் செய்து கொள்ளவே எண்ணினேன். மெத்தாதியாக இருக்க விரும்பவில்லை. அப்படியும் எக்காரணத்தாலோ எனக்கு யாராவது உதவி செய்ய முன் வந்து நானே என் வேலைகளைக் கவனிக்காத வண்ணம் தடுத்து விடுகிறார்கள். இது எனக்கு வேதனையையே அளித்தது.

உத்னாவைத் தவிர மற்ற நோயாளிகள் ஒரு முக்கியமான விஷயத்தைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். அன்று துப்பாக்கி மட்டையில் ஐநூறு அடிபடும் ஒருவனை அங்கு கொண்டு வரப் போகிறார்கள். அவனைக் காணவே அனைவரும் ஆவலோடு காத்திருந்தார்கள்.

நான் என்னைச் சுற்றியுள்ளவர்களைப் பார்த்தேன். மற்ற மருத்துவமனை போல் இல்லாமல் அங்கு பலதரப்பட்ட நோயாளிகள் இருந்தார்கள். சில கைதிகள் ஓய்வுக்காகவே அங்கு வந்திருந்தார்கள். மருத்துவர்களும் அனுதாபம் காட்டி அவர்களை உள்ளே அனுமதித்திருந்தார்கள். மருத்துவமனையிலேயே காலத்தைக் கடத்த விரும்புபவர்களும் அங்கு காணப்பட்டார்கள்.

இரண்டு வாரங்களுக்கு முன் சிறைச் சாலையில் கண்ட மிகிலாவ் என்பவன் படுத்த படுக்கையாக எனக்கு எதிரில் கிடந்தான். அவன் அதற்கு முன்பே நோயுடன் துன்பப்பட்டுக் கொண்டிருந்தான். முன்பே மருத்துவ மனைக்கு வரவேண்டிய அவன், பொறுமையாக மனதை அடக்கிக் கொண்டிருந்தான். இதுவே அவனை நோய் விழுங்கும் வண்ணம் ஆக்கிவிட்டது. அவன் அடியோடு மாறியதைக் கண்டு நான் திகைத்துவிட்டேன்.

எல்லா நோயாளிகளையும் குறித்து நான் விவரிக்கப் போவதில்லை. வயதான ஒருவனைப் பற்றி மாத்திரம் கூறவிரும்புகிறேன். அங்கு வந்த சிறிது நேரத்திலேயே அவன் என் கவனத்தைக் கவர்ந்து விட்டான். அவன் ஒரே சமயத்தில் ஐந்து ஆறு முறை தும்மினான். ஒவ்வொரு முறையும் அவன் ''கடவுளே நான் என்ன குற்றம் செய்தேன், இவ்விதம் துன்பப்பட''என்று சொன்னான். அவன் படுக்கையில் உட்கார்ந்து பொடி போட்டு மூக்கைச் சரிசெய்ய முனைந்து கொண்டிருந்தான். ஒவ்வொரு முறையும் தும்மிவிட்டு மூக்கைச் சிந்துவான். பொடி கலந்த சளியை மேல் அங்கியிலும் கைக்குட்டையிலும் துடைத்துக் கொள்வான். நோயாளியான அவனுக்கு துணி அசுத்தமாவதைக் குறித்துக் கவலையே இல்லை.

செக்னாவ் தயாரித்த தேநீரை என் முன் கொண்டு வைத்த சமயம் கூடத்தின் கதவுகள் திறக்கப்பட்டன. பலத்த பாதுகாப்புடன் துப்பாக்கி மட்டை அடிபட்ட சிப்பாயை அழைத்து வந்தார்கள். அந்த நிலைமையிலுள்ள ஒருவனை அப்போதுதான் முதன் முறையாகப் பார்த்தேன். அதன் பிறகு எத்தனையோ பேர்களைக் கண்டேன். அவனுக்குக் கடுமையான தண்டனை அளிக்கப்பட்டிருந்தது. அங்குள்ள அனைவருமே அவனை ஆச்சரியத்துடன் பார்த்தனர். பயங்கரக் குற்றங்களைச் செய்த கைதிகள் கூட அவ்விதம் தண்டனை பெற்றிருக்கமாட்டார்கள். தண்டனை பெற்றுத் திரும்பியவனிடம் அனைவரும் மௌனமாக அனுதாபம் காட்டினர். உதவியையும் செய்ய முன் வந்தனர். மருத்துவர்களின் உதவியாளுக்கு அனுபவசாலிகளை நன்கு தெரியும். அதனால் உதவி செய்ய முன் வந்தவர்களை அவன் தடுக்கவில்லை. வழக்கமாக இவ்விதம் தண்டனை பெற்று வருபவன் முதுகில் துணியைத் தண்ணீரில் நனைத்து எடுத்துப் பிரித்துப் போடுவார்கள். துப்பாக்கி மட்டை பிளந்து அதிலுள்ள மரத்துண்டுகள் முதுகில் பொத்துக்கொண்டு விடலாம். இதை அகற்றுவதுதான் பெரிய வேலை. அப்போது தண்டனை பெற்றவன் உயிரே போய்விட்டது போலக் கூப்பாடு போடுவான். வலி தாங்காமல் கத்துவான். ஆனால் பெரும்பாலானவர்கள் முகத்தைச் சுளித்துக் கொள்வார்களே தவிர கூப்பாடு போடமாட்டார்கள். உதட்டைக் கடித்துக் கொண்டு வலியைப் பொறுத்துக் கொள்வார்கள்.

துப்பாக்கி மட்டைஅடி தண்டனை பெற்று வந்தவன் வாலிபன். நல்ல உயரமாகவும் கட்டு உடையவனாகவும் இருந்தான். முகம் அழகாகவும் இருந்தது. அடிபட்ட முதுகில் ஈரத் துணியைப் போர்த்திக் கொண்ட அவன் உலாவத்தொடங்கினான். அடிக்கடி அவன் என் தேநீரையே பார்த்தான். அவன் பார்வையிலிருந்து தேநீரை விரும்புகிறான் என்று தெரிய வந்தது. நான் ஒரு கோப்பை தேநீரை அவன் முன் நீட்டினேன். அவன் பதில் பேசாமல் வாங்கிக் குடித்துவிட்டு கோப்பையை என் முன் வைத்தான். பிறகு முன் போலவே உலாவத் தொடங்கினான்.

மாலைமங்கி இரவு விளக்குகள் ஏற்றப்பட்டன. சில கைதிகள் தங்களிடமுள்ள மெழுகுவர்த்திகளை பற்ற வைத்தனர். அன்றைக்குக் கடைசி முறையாக மருத்துவர் சுற்றிப் பார்த்துச் சென்றதும் காவலாளி, கூடத்தின் கதவை மூடிப் பூட்டினான். அதற்கு முன்னதாகவே கைதிகள் இரவு நேரத்தில் வெளியில் போகாதிருக்க வாளியைக் கொண்டு உள்ளே வைத்தனர். இது எனக்கு ஆச்சரியத்தை விளைவித்தது. காற்றே புக முடியாத அந்த இடத்தில் நாற்றமடிக்கும்

வாளியை இரவு முழுதும் அங்கு வைத்திருப்பது என்றால் அதை யாரால் தான் பொறுத்துக் கொண்டிருக்க முடியும்? ஆனால் இந்தச் சட்டத்தை யார் ஏற்படுத்தினார்களோ! இதற்காக மருத்துவர்கள் மீது குறை கூறக்கூடாது. அவர்கள் சர்க்காரின் கட்டுத்திட்டத்திற்கு உட்பட்டவர்கள்.

கைதிகளை இரவில் ஏன் வெளியே அழைத்துச் செல்லக்கூடாது என்பதற்கான காரணம் எனக்குப் பல ஆண்டுகளாகியும் விளங்கவில்லை. புரியாத புதிராகவே இருக்கிறது. பகல் வேளையிலுள்ள கட்டுக்காவல் இரவிலும் இருக்கிறது. தப்பிச் செல்ல நினைக்கும் கைதி பகலைப் போல் இரவிலும் முயற்சிக்கலாம். ஆனால் பகலில் வெளியே அழைத்துச் செல்பவர்கள் இரவில் நம்பிக்கை இழந்து விட்டார்கள் போலத்தோன்றுகிறது. எங்கும் காவல்காரர்கள் இருக்கும் போது கைதி எப்படித் தப்பிச் செல்லமுடியும் என்பதை அவர்கள் உணரவில்லை. தப்பிச் செல்ல நினைப்பவன் எப்படியும் போய்விடுவான். அவனைத் தடுக்கவே முடியாது. ஆனால் இவ்விதம் ஆரோக்கியத்தையே பாதிக்கும் காரியத்தைச் செய்வது மரணத்துடன் போராடும் மனிதர்களுக்கு மேலும் தண்டனையை அளித்தது போலாகும்.

இந்த வரிகளை எழுதும் சமயம் மரணத்துடன் போராடிக் கொண்டிருந்த மிக்லாவின் நினைவு வருகிறது. அவனது கட்டில் எனக்கு எதிரிலே இருந்தது. நான் மருத்துவமனைக்குக் கொண்டுவரப்பட்ட நான்காவது நாள் அவன் இறந்தான். அவனது மரணம் என் மனதைவிட்டு அகலவே இல்லை. அவனை எனக்கு அதிகமாகத் தெரியாது. அவன் வாலிபன். இருபத்தைந்து வயதே ஆகியிருக்கலாம். நல்ல அழகனான அவன் உயரமாக இருந்தான். பிரத்யேகக் கைதிகளின் வகுப்பைச் சேர்ந்தவன். எல்லோரிடத்திலும் நல்லவிதமாகப் பழகுவான். எப்பொழுதும் மௌனமாக இருப்பான். அவனுடைய ஒளி பொருந்திய கண்களை என்னால் மறக்கவே முடியாது. ஏன் அது என்று எனக்குப் புரியவில்லை. பிற்பகல் மூன்றுமணிக்கு அவன் உயிர் உடலை விட்டுப் பிரிந்தது. அவன் மரணதேவதையுடன் போராடும் சமயம் சூரியனின் கிரணம் ஜன்னல் வழியே அவன் முகத்தில் படர்ந்திருந்தது. அன்று காலையிலிருந்தே அவனுடைய நிலைமையை நான் கவனித்து வந்தேன். காலையிலேயே அவன் சுய உணர்வை இழந்துவிட்டான். அருகில் உள்ளவர்களையும் அவனால் அடையாளம் தெரிந்துகொள்ள முடியவில்லை.

பொழுது ஏற ஏற அவன் வேதனை அதிகரித்தது. முதலில் போர்வையை அகற்றினான். பிறகு சொக்காயைக் கழட்டினான்.

இப்படியே அவன் ஆடைகள் அனைத்தையும் அகற்றச் செய்தான். கடைசியில் பெருமூச்சு அதிகரித்தது. அப்போது அவன் எலும்புக் கூடாகக் கிடந்தான். அவன் உடலில் சிறிது மாமிசம் கூட இல்லை. மரணவேதனை அதிகரித்ததும் எல்லோரும் பேசுவதையும் நிறுத்திக் கொண்டனர். அவன் அருகில் சூழ்ந்து நின்றனர். கடைசி நேரம் வந்ததும் அவன் கையையும் காலையும் அடித்துக் கொண்டான். மறுகணம் உயிர்ப்பறவை பறந்து சென்றது. அவன் கட்டை போல் விறைத்துக்கொண்டான்.

கைதிகள் கண்களில் நீர்பெருக கதவைத் தட்டினர். காவலாளி வந்தான். அவனிடம் விவரம் கூறப்பட்டது. அவன் இறந்தவனைப் பார்த்துவிட்டு வெளியே சென்றான். மருத்துவரின் உதவியாளனை அழைத்து வந்தான். அவனும் இறந்தவனைத் தொட்டுப் பார்த்தான். நாடியைப் பரிசோதனை செய்தான். பிறகு அலட்சியமாக அங்கிருந்து சென்றான்.

இறந்தவனின் கண்கள் திறந்திருந்தன. எங்களில் ஒருவன் சென்று கண்களை மூடினான். இறந்தவனின் படுக்கையில் கிடந்த சிறு மரச்சிலுவையை எடுத்து அவன் மார்பில் வைத்தான். பிறகு சிலுவைச் சின்னத்தைச் செய்து விட்டுத் தன் இருப்பிடத்திற்குத் திரும்பினான்.

இறந்தவன் பிரத்யேகப் பகுதியைச் சேர்ந்தவன். அதனால் அவனது மரணம் சரியான முறையில் நிர்ணயிக்கப்பட வேண்டும். இதற்காக காவல் படையின் அதிகாரி இரண்டு சிப்பாய்களுடன் வந்தான். அவன் இறந்தவனின் படுக்கை அருகில் வந்து நின்றான். தலையிலிருந்த தொப்பியைக் கழட்டிக் கையில் வைத்துக் கொண்டான். இறந்தவனின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான். பிறகு தம் மீது சிலுவைச் சின்னத்தைச் செய்து கொண்டான். செக்னாவ் அவன் பக்கத்திலேயே நின்றிருந்தான். அவன் தன்னை அறியாமலேயே ''இறந்தவனுக்குத் தாயார் இருக்கலாம்'' என்றான்.

அந்த சொல் என் இதயத்தையே பிளந்தது. எதனால் அவன் அவ்விதம் சொன்னான்? எது அவனைச் சொல்லச் செய்தது?

வாலிபனுடைய சடலத்தைப் படுக்கையோடு தூக்கிச் சென்றார்கள். கூடத்திற்கு வெளியே கருமானை அழைத்து வரும்படி அதிகாரி கட்டளையிட்டது கேட்டது. இறந்தவனுடைய விலங்குகள் அகற்றப்பட வேண்டும். அதற்காகவே கருமானை அழைத்துவரக் கட்டளையிடப்பட்டது.

ஆனால் நான் கூற வந்ததை மறந்து வேறு ஒன்றிற்கு மாறிவிட்டேன்.

# 12

**கா**லை பத்து மணிக்குப் பிறகு மருத்துவர்கள் ஒவ்வொரு பகுதியாகச் சுற்றிப் பார்த்து வருவார்கள். அவர்கள் தலைமை மருத்துவருடன் கூட்டமாக வருவார்கள். அவர்கள் வருவதற்கு ஒரு ஒன்றரை மணி நேரம் முன்னதாக ஒவ்வொரு பகுதியின் மருத்துவரும் வந்து நோயாளிகளைக் கவனிக்கத் தொடங்குவர். எங்கள் பகுதி மருத்துவர் மிகவும் நல்லவர். வாலிபரான அவர் ஒவ்வொரு கைதியின் அருகிலும் சிறிது நேரம் உட்கார்ந்து அவர்களின் குறைகளைக் கேட்டறிவார். ஆகாரம், மருந்துகள் ஆகியவற்றை எழுதிக் கொடுப்பார். புதிய மருத்துவத்திற்கும் ஏற்பாடு செய்வார். அவர் சங்கோசக்காரராக இருந்தபோதிலும் நோயாளி களுக்கு நன்மை செய்ய மாத்திரம் தயங்கவே மாட்டார். ரஷ்யாவிலுள்ள பல மருத்துவர்கள் மக்களின் மதிப்பைப் பெற்றிருக்கிறார்கள்.

அதே சமயம் நவீன மருந்து வகைகளை சாதாரண மக்கள் நம்புவதே இல்லை என்பதைக் கூறியே ஆகவேண்டும். ஒருவனுக்குக் கடுமையான நோய் வந்ததாக வைத்துக் கொள்ளலாம். அவன் உடனே கிராம வைத்தியனிடம் போவான். அவன் ஆலோசனைப்படி மருத்துவம் செய்து கொள்வான். அவனுடைய மருந்துகளைப் புசிப்பான். அதில் குணமாகாவிட்டால் நவீன மருத்துவர்களின் உதவியை நாடுவான். அல்லது மருத்துவ சாலையில் சேர்ந்து கொள்வான். பொதுவாக மருத்துவ சாலைகளின் மீது மக்களுக்கு ஒரு வித பயம் இருந்தது. இதற்கு அடிக்கடி மருத்துவ சாலையைப் பற்றித் தவறான வதந்திகள் பரவுவதே காரணமாகும். கட்டுதிட்டங்கள், எல்லோருமே நோயாளிக்குப் புதியவர்களாக இருப்பது, மருத்துவர், அவருடைய உதவியாளர், சடலங்களை அறுத்து சோதனை செய்வது ஆகிய அனைத்தும் மக்களின் அச்சத்தை அதிகரிக்கச் செய்தன. மேலும்

பணக்காரர்களாக உள்ளவர்கள் அவர்களுக்கு மருத்துவம் செய்வது பிடிக்கவில்லை. மருத்துவர்கள் பணக்காரக் குடும்பங்களைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். ஆனால் மருத்துவர்களுடன் நெருங்கிப் பழகத் தொடங்கியதும் அவர்கள் அச்சம் பறந்து போய்விடுகிறது. முக்கியமாக மருத்துவர்கள், அதிலும் வாலிபர்களாக உள்ளவர்கள் அனைவருடைய நன்மதிப்பையும் பெறுகிறார்கள் என்பதே என் கருத்து.

மருத்துவர்களில் பெரும்பாலானவர்களுக்குச் சாதாரண மக்களின் நன் மதிப்பை எப்படிப் பெறுவது என்பது தெரிந்திருந்தது. ஒன்றிற்கு மேற்பட்ட இடங்களில் எனக்கு ஏற்பட்ட அனுபவத்தை நான் கூறுகிறேன். வேறு எங்காவது மாறுபட்டு இருக்கலாம். மிகவும் ஒதுக்குப்புறமான பகுதிகளில் மருத்துவர்கள் லஞ்சம் வாங்கலாம். தனது நோயாளிகளை அலட்சியம் செய்யலாம். தொழிலையும் கடமையையும் மறக்கலாம். ஆனால் பொதுவாக மருத்துவர்கள் நல்ல குணத்தையே கூறுகிறேன். நோயாளிகளுக்கு மருந்து, மருத்துவம் ஆகியவற்றைவிட அவர்களுடைய நோய் குணமாக மனிதத் தன்மையும், அனுதாபமும், அன்புமே முக்கியத் தேவையாகும்.

எங்கள் பகுதி மருத்துவர் ஒவ்வொரு நோயாளியின் அருகிலும் சிறிது நேரம் நின்று அவர்களுடைய குறையைக் கேட்பார். அவர்களை பரிசோதனை செய்வார். சிலருக்கு உண்மையிலேயே நோய் குணமாகியிருக்கலாம். அல்லது நோயே இல்லாமலும் போகலாம். அவன் கடுமையான உழைப்பிற்குப்பின் ஓய்வு, நல்ல ஆகாரம், படுக்க வசதியான இடம் ஆகியவற்றிற்காகவே மருத்துவமனையின் உதவியை நாடி வந்திருப்பான். இத்தகையவர்களுக்காக ஒரு நோயை கற்பனை செய்து எழுதுவார் மருத்துவர். ஆனால் ஓய்வுக்காக வந்த மனிதனோ சில நாட்கள் இருந்துவிட்டுப் போகமாட்டான். இயன்ற வரை இங்கேயே இருக்கலாமே என்று எண்ணுவான். இத்தகையவர்களை மருத்துவர்கள் நல்லவிதமாகச் சொல்லி அங்கிருந்து வெளியேற்றுவர். அதற்கும் அவன் இசையாவிட்டால் பலவந்தமாக வெளியேற்ற நேரிடும்.

தலைமை மருத்துவர் மிகவும் கண்டிப்பாக நடந்து கொள்ளக் கூடியவர். மனித உள்ளம் படைத்த அவர் நோயாளிகளிடம் அன்பாகவே நடந்து கொள்வார். ஆனால் அளவுக்கு மீறிச் சலுகை பெற விரும்பும் நோயாளிகளிடம் கடுமையாகவும் கண்டிப்பாகவும் நடப்பார்.

வேலைக்குச் சோம்புபவர்களாக உள்ளவர்களே மருத்துவ சாலையை விட்டு எளிதில் போக விரும்பமாட்டார்கள். வெயில்

காலங்களில் அதிக நேரம் வேலை செய்ய வேண்டும். இதற்கு அஞ்சியும் மருத்துவ சாலையின் உதவியை நாடிவரும் கைதிகளும் இருப்பார்கள். அவர்கள் சில நாட்கள் அங்கு தங்கி ஓய்வு பெறுவதை மருத்துவர்கள் பொருட்படுத்த மாட்டார்கள். அதுவே, சண்டித்தனமும், ஏமாற்றுவித்தையும் செய்பவர்களாகவோ காணப்பட்டால் மருத்துவர்கள் கையாளும் முறையே வேறுவிதமாக இருக்கும். உதாரணமாக ஒரு கைதியின் விவகாரத்தைக் கூறுகிறேன். அவன் கண் வலி என்று மருத்துவமனைக்கு வந்தான். அவனுக்கு மருத்துவமும் செய்யத் தொடங்கினர். ஆனால் பல நாட்களாகியும் நோய் அதிகரிக்கவோ, குறையவோ இல்லை. இது மருத்துவர்களுக்குச் சந்தேகத்தை உண்டுபண்ணிற்று. அவன் வாலிபன். நல்ல அழகன். ராணுவத்தில்பணிபுரிந்த அவன் பெரிய திருட்டுத் தொழிலில் அகப்பட்டுக் கொண்டான். ஆயிரம் கசை அடியும், சிறைதண்டனையும் பெற்று சிறைச்சாலைக்கு வந்தான். கசை அடி, துப்பாக்கி மட்டை அடி, பிரம்படி ஆகிய தண்டனை பெற்றவர்கள் அதை ஏற்றுக் கொள்ள நடுநடுங்குவார்கள் என்று முன்னதாகவே கூறியிருக்கிறேன். அவர்கள் இந்த தண்டனை நிறைவேற்றுவதைச் சிறிது காலம் தள்ளிவைக்க ஏதாவது துடுக்காகச் செய்வார்கள். யாராவது அதிகாரியைக் கத்தியாலும் குத்தி விடுவார்கள். அவன் மீண்டும் விசாரிக்கப் படலாம். தண்டனை நிறைவேற்றுவதும் ஒன்று அல்லது இரண்டு மாதகாலம் ஒத்திவைக்கப்படலாம். இதைத்தான் அவர்களும் விரும்புகிறார்கள். தண்டனையை ஒத்திப் போடுவதால் அது முன்னிலும் கடுமையாகிவிடும் என்பது அவர்களுக்கு நன்கு தெரியும். அதைப் பற்றி அவர்கள் அதிகமாகக் கவலைப்படுவதே இல்லை.

நாளை தண்டனையை நிறைவேற்றப் போகிறார்கள் என்றால் சிலர் மிகவும் மோசமாகவும் பயங்கரமான வகையிலும் எதையும் சிந்திக்காமலும் காரியத்தைச் செய்து விடுவார்கள். அவர்கள், அருகில் தூங்கும் கைதியையே கத்தியால் குத்தி விடுவார்கள். சிலர் சுவரிலுள்ள சுண்ணாம்பை எடுத்துக் கண்களில் தேய்த்துக் கொண்டு விடுவார்கள். பொழுது விடிந்ததும் அவர்கள் மருத்துவசாலைக்கு அனுப்பப்படுவார்கள்.

இவ்விதம் தான் அந்த வாலிபனும் கண்களை சிவப்பாக்கிக் கொண்டு மருத்துவ மனைக்கு வந்து சேர்ந்தான். அவனுக்கு ஆரம்பத்தில் ஏதேதோ மருந்துகளைப் போட்டுப் பார்த்தார்கள். ஒருவித பயனும் ஏற்படவில்லை என்றதும் கடுமையான மருத்துவங்களைக் கையாளத் தொடங்கினர். மருத்துவம், மருந்து

ஆகியவற்றின் கடுமையைக் கண்டதுமே மறு நாளே அவன் கன் குணமாகிவிட்டது. பல நாட்கள் ஏமாற்றிவந்த அவன் மறு நாளே மருத்துவ மனையை விட்டுச் செல்லச் சம்மதித்தான். தண்டனையை ஏற்றுக் கொள்ளவும் தயாரானான்.

தண்டனையை அனுபவிப்பதற்கு முந்தய காலம் மிகவும் பயங்கரமானது. இந்த பயம் மன உறுதி இல்லாததால் ஏற்படுகிறது என்று கூறுவது கொடிய பாவமாகும். தண்டனை அனுபவிக்க வேண்டிய காலத்தை ஒத்திப்போட்டுக்கொண்டே போவது இரட்டிப்பு தண்டனையை அனுபவிக்க நேரிடும். முதல் பகுதி தண்டனையை அனுபவித்து முதுகில் ரணங்கள் ஆறுவதற்குள்ளா கவே மீதத்தை அனுபவிக்க விரும்பி மருத்துவ சாலையிலிருந்து விடுதலை பெற்று வெளியேற விரும்புபவர்களும் இருந்தார்கள். இவர்களைக் குறித்தும் நான் முன்பே கூறியிருக்கிறேன். சிறு வயது முதலே அடிபட்டுப் பழக்கமானவர்களுக்குப் பயம் என்பதே இல்லாமல் போய் விடுகிறது. இதற்கு உதாரணமாக அலக்ஸாண்டர் என்று பெயரை மாற்றிக் கொண்ட கல்மிச் பற்றிக் கூறுகிறேன்.

அவன் நல்லவன். எப்பொழுதும் ஏதாவது குறும்புத்தனம் செய்து கொண்டே இருப்பான். பயம் என்பதே சிறிதும் இல்லாதவன். அவனுக்கு அளிக்கப்பட்ட நாலாயிரம் அடியையும் ஏற்றுக் கொண்டதைக் கூறினான். அவன் இதை சிரித்துக் கொண்டும் வேடிக்கையாகவும் விவரித்தான். மலைப்பகுதியைச் சேர்ந்த அவனை எந்த ஒரு சிறு குற்றத்திற்காகவும் பெற்றோரும் மற்றவர்களும் அடித்துக் கொண்டே இருந்தனர். ''பதினைந்தாவது வயதிலிருந்து நான் அடிபட்டுக் கொண்டே வருகிறேன். ஒருநாள்கூட அடிபடாமல் இருக்க மாட்டேன். அடிபட்டே எனக்கு பழக்கமாகிவிட்டது'' என்றான்.

அவன் எப்படி ராணுவத்தில் சேர்ந்தானோ எனக்குத் தெரியாது. அதை அவன் சொல்லவும் இல்லை. அவன் பிறவி நாடோடி. குற்றம் புரிவதே அவனது வாழ்க்கையின் லட்சியமாகவும் இருந்தது. அவனுடைய மேல் அதிகாரியைக் கொலை செய்ததற்காக அவன் சிறைதண்டனையையும் நாலாயிரம் கசை அடியும் பெற்றிருந்தான். அதிகாரியைக் கொலை செய்ததால் எல்லோரும் ஆத்திரமடைந் திருந்தனர். அதனால் அவனை அடித்தே கொன்று விடலாம். இதற்கு அவன் ஒரு தந்திரம் செய்தான். மதம் மாறி வேறு பெயரை வைத்துக் கொண்டான். கிறிஸ்துவனாக மாறிய அவனிடம் கடுமையாக நடந்து கொள்ளமாட்டார்கள் என்று நம்பினான். ஆனால் அதிகாரிகள் அவனுக்கு அனுதாபம் காட்டவே இல்லை. முதல் ஆயிரம்

அடிகளைப் பெற்றபோது அவன் உடல் முழுதும் எரிவதுபோலிருந்தது. இரண்டாவது ஆயிரத்தைப் பெறும்போது இனி உயிருடன்இருக்கப் போவதில்லை என்ற தீர்மானத்திற்கே வந்து விட்டான். அவனது கால்கள் தள்ளாடின. அப்படியே தரையிலும் சாய்ந்தான். வாயிலிருந்து நுரை கக்கினான்.

எந்தக் கணத்திலும் மடிந்து விடலாம் என்று மருத்துவர்கள் கருதினார்கள். அதனால் அவனை மருத்துவமனைக்கு எடுத்து வந்தார்கள். மூன்றாவது ஆயிரம் அடியும் அவனை நிலைகுலைய வைத்தது. அவனும் அதிகாரிகளை ஏமாற்றாமல் போகவில்லை. பாசாங்கு செய்து அவர்களை மடையர்களாக்கினான். நான்காவது ஆயிரம் அடியைப் பெறும் போது அதிகாரிகள் ஏமாந்தே போனார்கள். இருநூறு அடிகளைக் கொடுத்த சமயம் அவன் இறந்தவனுக்குச் சமமாக விழுந்தான். ஆனால் மற்ற ஆயிரம் அடிகளையும் ஒன்று சேர்ந்தாற் போல் இந்த நாலாயிரம் அடிகளின் தொடக்கமே இருந்தது. எப்படியோ அவன் தண்டனை முழுவதையும் அனுபவித்து விட்டு இன்று உயிருடன் இருக்கிறான். இதற்கு அவன் சிறுவயது முதலே அடிபட்டுப் பழக்கமானதே காரணமாகும்.

சாதாரண மக்களிடம் குற்றம் புரிபவன் நிலைமை வேறு. அதிகாரிகளிடத்தில் தவறாக நடந்த கொள்பவன் நிலைமை அடியோடு மாறுபட்டது. குற்றம் புரிபவன் இரண்டையும் ஒன்றாகவே கருதுகிறான். அதற்கான தண்டனையையும் அவன் ஒரேவிதமாகக் கருதுகிறான். ஆனால் அதிகாரிகளோ தன் அதிகார வர்க்கத்தினிடம் தவறாக நடந்து கொள்பவனை அடியோடு மாறுபட்டவனாகக் கருதி அவனுக்கு அளிக்கும் தண்டனையையும் கடுமையான முறையில் நிறைவேற்றுகிறார்கள்.

சில அதிகாரிகள் தண்டனையை நிறைவேற்றுவதை தங்கள் மகிழ்ச்சிக்காகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். தண்டனை பெறுபவன் போடும் கூக்குரல், கெஞ்சுதல், கண்ணீர் பெருக்குதல் ஆகியவற்றைக் கண்டு ஆனந்தமடைகிறார்கள்.

நான் மருத்துவ சாலையில் இருக்கும் போது உதவி அதிகாரி ஜார்பிடினிகாவைக் குறித்து முதன் முறையாகக் கேள்விப்பட்டேன். ஒரு சமயம் அவனைப் பார்த்தும் இருக்கிறேன். முப்பது வயதே ஆன அவன் உயரமாக இருப்பான். அவன் முகத்தோற்றத்திலிருந்து உலகத்தில் எதுவுமே அவனைத் தொந்தரவு செய்யவில்லை என்பது தெரியவரும். அவன் நல்லவன் என்று கைதிகள் சொன்னதையும் கேள்விப்பட்டிருக்கிறேன். அதே சமயம் தண்டனை நிறைவேற்றுவதை அவன் ஒரு பொழுது போக்காகவும் மன

திருப்திக்காகவும் செய்து வந்தான். வஞ்சகமான நெஞ்சம் படைத்த அவன் கைதிகளிடம் நயமாகப் பேசி அவர்கள் உயிரையே குடிக்கும் வண்ணம் தண்டனையை நிறைவேற்றுவான். மேலும் கசை அடி, துப்பாக்கி மட்டை அடி, பிரம்படி ஆகிய தண்டனைகளை அவன் முன்னிலையில்தான் நிறைவேற்ற வேண்டும்.

தண்டனையை நிறைவேற்ற சிப்பாய்கள் கையில் துப்பாக்கி மட்டை அல்லது பிரம்புகளை வைத்துக் கொண்டு காத்திருப்பார்கள். கைதியின் சொக்காயை அகற்றி கையைப் பின்புறமாக துப்பாக்கியை நுழைத்தும் கட்டுவார்கள். அல்லது கயிற்றினாலும் கட்டுவார்கள். பிறகு கைதியை சிப்பாய்களின் மத்தியில் கொண்டு நிறுத்துவார்கள். இரண்டு பக்கங்களிலும் வரிசையாக நின்றிருக்கும் சிப்பாயைக் கண்டதும் கைதி பயந்து உதவி அதிகாரியிடம் போய் காலில் விழுந்து கெஞ்சுவான். ''ஐயா, நீங்கள் என் தந்தைக்குச் சமமானவர். என்னைக் காப்பாற்றுங்கள். நீங்கள் செய்யும் உதவியை நான் என்றைக்கும் மறக்க மாட்டேன். பிரார்த்தனையின் போது உங்களை நினைத்துக் கொள்வேன்'' என்று கூறுவான்.

உடனே உதவி அதிகாரி அவன் அருகில் நின்று ''நான் என்ன செய்வது? சட்டம் உன்னை தண்டிக்கிறது. நான் இல்லை'' என்று சொல்லுவான்.

''எல்லாம் உங்கள் கையில் தான் இருக்கிறது. என்மீது அனுதாபம் காட்டுங்கள்.''

''உனக்காக நான் வருந்தவில்லை என்று நினைக்கிறாயா? உன்னை அடிப்பதைக் காண எனக்கு மகிழ்ச்சியா ஏற்படுகிறது? நான் மனிதன் இல்லையா?''

''இல்லாமல் எப்படி இருக்க முடியும்? நாங்கள் உங்கள் குழந்தைகள். நீங்கள் எங்களுடைய தந்தைக்குச் சமமானவர்'' என்று கைதி அழுது புலம்புவான்.

''நல்லது. இந்த முறை உன் தண்டனையை கடுமையாக அளிக்கவில்லை. இதனால் உனக்கு நன்மைக்குப் பதில் தீமைதான் ஏற்படும். நான் தயவுடன் நடந்து கொள்வதை எண்ணி நீ மீண்டும் குற்றம் புரியத் தொடங்குவாய்.''

''கடவுள் சாட்சியாக நான் இனி குற்றமே செய்ய மாட்டேன்.''

''நல்லது. உன் சொல்லை நம்புகிறேன்.'' என்று கூறுவான் உதவி அதிகாரி. கைதியும் அவன் சொல்லை நம்பிவிடுவான். ஆனால் தண்டனை நிறைவேற்றும் சமயமோ அவன் சிப்பாய்களைப் பார்த்து 'அடியுங்கள். நன்றாக அடியுங்கள். அனாதைப் பயல். துரோகி'' என்றெல்லாம் கத்துவான்.

வேறு ஒரு சமயமோ ''துப்பாக்கியை வைத்துக் கட்டாமல் விடுகிறேன். உன்னால் முடிந்த அளவு வேகமாக ஓடு. சிப்பாய்கள் அடிப்பதிலிருந்து தப்பித்துக் கொள்'' என்று கைதிக்கு அனுதாபம் காட்டுவது போல் ஆலோசனை கூறுவான்.

சிப்பாய்களுக்கு நன்றாகத் தெரியும். அவர்கள் ஒரு அடி தவறினாலும் கடுமையான தண்டனைக்குள்ளாக வேண்டும். இதனால் கைதியை எந்த விதத்திலும் தப்பிச் செல்ல விடமாட்டார்கள்.

தற்போதுள்ள சிறை அதிகாரிக்கு முன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் செமிகலாவ். அவனை கைதிகள் அனைவரும் புகழ்வார்கள். தந்தையைப் போன்றவன் என்று கூறுவார்கள். கசை அடி, துப்பாக்கி மட்டை அடி தண்டனையை நிறைவேற்றுமிடத்திற்கு அவன் வருவான். தண்டனையை அவன் முன்தான் நிறைவேற்ற வேண்டும். ஒரு நாற்காலியைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து கொள்வான். கைதி அவனிடம் சென்று கெஞ்சும்போது ''வீணாகப் பொழுதைப் போக்காதே போ.'' என்று கூறுவான். கைதி மேலும் கெஞ்சினால் வேதநூலிலிருந்து குறிப்பிட்ட சில பகுதிகளை கூறும்படி கட்டளையிடுவான். கைதியும் அதைப் பலமுறை திரும்பத் திரும்பச் சொல்லுவான். கடைசியில் தண்டனையை அனுபவிக்க அனுப்புவான்.

செமிகலாவ் தன் வேலையைச் செய்ததாக மகிழ்ச்சியடைவான். கைதிகளும் அவனுடைய குணத்தைப் பாராட்டிவிட்டு தண்டனையை மகிழ்ச்சியுடன் ஏற்கச் செல்வார்கள். ''மிகவும் அபூர்வமானவர், வேடிக்கையான மனிதர்'' என்று கைதிகள் கூறுவர்.

# 13

தண்டனை, தண்டனையை அனுபவிப்பவர்கள், நிறைவேற்றும் அதிகாரி ஆகியவற்றை நான் மருத்துவமனைக்கு வந்ததும் நேரிடையாக அறிந்தேன். அதற்கு முன் அவற்றைக் குறித்துக் கேள்விப்பட்டே இருந்தேன். துப்பாக்கி மட்டை அடி தண்டனைக்குள்ளானவர்கள் யாராக இருந்தாலும் நான் இருந்த ராணுவ மருத்துவ மனைக்கே எடுத்து வந்தார்கள். மருத்துவமனைக்கு வந்த புதிதில் நான் என்னைச் சுற்றியுள்ளவற்றை கவனித்து வந்தேன். தண்டனையை அனுபவித்தவர்கள், எதிர்பார்த்திருப்பவர்கள் ஆகியோர் என் கவனத்தைக் கவர்ந்தனர். திடீரென்று நான் எல்லாவற்றையும் பார்த்து விபரங்களைக் கேட்டு அறிந்தது எனக்கு இன்னமும் நன்றாக நினைவிருக்கிறது. மற்றவற்றுடன் தண்டனையின் தன்மை நிறைவேற்றும் முறை அதை கைதிகள் எவ்விதம் நினைக்கிறார்கள் என்பதை அறிய நான் மிகவும் விரும்பினேன்.

துப்பாக்கி மட்டை அடியை ஒருவன் ஒரு சமயத்தில் ஐநூறு பெற்றாலே அதிகம். ஆனால் ஆயிரம், ஆயிரத்து ஐநூறு அடிகள் கூட ஒரே சமயத்தில் கொடுப்பார்கள். ஒருவருக்கு அளிக்கப்பட்டுள்ள துப்பாக்கி மட்டை அடி தண்டனையை இரண்டு அல்லது மூன்று பாகங்களாகப் பிரித்துக் கொள்வார்கள் முதல் பகுதியை அனுபவித்துவிட்டு மருத்துவமனைக்கு வந்து காயம் ஆறி இரண்டாவது பகுதி தண்டனையை அனுபவிக்கச் செல்பவர்கள் மிகவும் கவலையுடன் இருப்பார்கள். அவர்கள் யாருடனும் பேசமாட்டார்கள். எந்த ஒரு எண்ணமும் அவர்களுக்கு இல்லாததுபோல் காணப்படுவார்கள். மற்ற கைதிகளும் தண்டனையைக் குறித்து அவர்களுடன் பேசாமல் இருப்பது வியப்பாக இருந்தது. இவ்விதம் நடந்துகொள்வது தண்டனையை அனுபவிக்கச் செய்பவனுக்கு உதவி புரிவதாகவே இருந்தது.

ஓர்லாவைப் போன்றவர்கள் இதற்கு விலக்கானவர்கள். தண்டனையின் முதல்பகுதியை அனுபவித்த அவனுக்கு ஒரே ஒரு செய்திதான் கவலையை அளித்து வந்தது. அவனது முதுகில் ஏற்பட்ட காயம் குணமாக அதிக காலதாமதமாயிற்று. அது குணமானதும் அவன் மீத தண்டனையைப் பெற்று வேறு இடத்திற்கு அழைத்துச் செல்லும் போது வழியில் தப்பி ஓட எண்ணியிருந்தான். அவனுடைய எண்ணம் அவனது மனதை தேற்றியது. அத்துடன் அவன் வேறு என்ன எண்ணியிருந்தானோ கடவுளுக்குத்தான் தெரியும். இரண்டாவது பகுதி தண்டனையை ஏற்றுக் கொண்ட பிறகு அவன் உயிர்பிழைத்து இருப்போம், தப்பிச் சென்று விடுவோம் என்று எண்ணியிருந்தான். அதில் அவனுக்குப் பூர்ணமான நம்பிக்கையும் இருந்தது. ஆனால் முதுகு குணமாகி, இரண்டாவது பகுதி தண்டனையை ஏற்றுக் கொண்டு மருத்துவ மனைக்குத் திரும்பி வந்தவன் இரண்டு நாட்களுக்குள் இறந்து விட்டான்.

சில கைதிகள் தண்டனையை ஏற்றுக் கொள்வதற்கு முன் மிகவும் கவலைப்படுவார்கள். தம்மையே சித்திரவதை செய்து கொள்வார்கள். ஆனால் அவர்கள் தண்டனையை ஏற்றுக் கொள்ளும் சமயம் உரக்க முனகவும் மாட்டார்கள். அவர்களுக்கு எவ்விதம் துன்பத்தை அனுபவிப்பது என்பது நன்கு தெரியும்.

துப்பாக்கி மட்டை அடி தண்டனையை ஏற்கும் போது எப்படி இருந்தது என்று கேட்டு அறிய நான் ஆவல் கொண்டேன். இந்த ஆவல் ஏன் ஏற்பட்டது என்று எனக்கே தெரியாது. நான் பலரிடம் கேட்டேன். ''அது நெருப்பு போல் உடல் முழுதும் எரிவதாக இருந்தது'' என்று பலர் சொன்னார்கள். ''தேள் கொட்டுவது போலிருந்தது. வலி பொறுக்கவே முடியாது'' என்றும் சொன்னார்கள்.

கசை அடி, தூக்கு தண்டனை ஆகியவற்றை நிறைவேற்றுபவன் அதையே தொழிலாகக் கொண்டவனாக இருக்க வேண்டும். பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவனாகவோ கத்துக் குட்டியாகவோ இருக்கக் கூடாது என்று சமூகக் கட்டுப்பாடுகள் கூறுகின்றன. சமீபத்தில்தான் அதற்கு மாறுபட்டகருத்து கூறப்பட்டது. அப்படிச் சொல்பவர்கள் கூட தன் அதிகாரத்தை நிலைநாட்டும் சமயம் மாறி விடுகிறார்கள்.

தண்டனையை நிறைவேற்றுபவர்களை இரண்டு விதமாகப் பிரிக்கலாம். ஒன்று சொந்த விருப்பத்தின் மீது அந்த வேலைக்கு வந்தவர்கள். இரண்டாவது பலவந்தமாக மேற்கொள்ளச் செய்தவர்கள். தானாக வந்தவர்கள் எல்லா வகையிலும் மோசமானவர்களாக இருப்பார்கள். தண்டனை பெற்ற குற்றவாளி

கசை அடிபடக் கூடிய சமயத்தில் கருணை காட்டும்படி கேட்க வேண்டும். உண்மையாகவோ பொய்யாகவோ அவன் இப்படிச் செய்வதையே தண்டனையை நிறைவேற்றுபவர் விரும்புகிறார். அவ்விதம் செய்யா விட்டால் அதைத் தவறாகக் கருதுகிறார்கள். அதனால் அவர்கள் ஆத்திரமடைந்து கூக்குரலிட்டு கெஞ்சிக் கேட்கும் வகையில் ஐம்பது அடிகள் அதிகமாகக் கொடுப்பார்கள்.

கசை அடி, தூக்கு தண்டனை ஆகியவற்றைத் தொழிலாகக் கொண்டவர்கள் பெரும்பாலும் ஆயுள் தண்டனை பெற்ற குற்றவாளிகளாகவும் பலவந்தமாகத் தொழிலை மேற்கொள்ள செய்தவர்களாகவும் இருப்பார்கள். ஆரம்பத்தில் அவன் அந்தத் தொழிலைக் கற்றுக் கொள்பவனாக இருக்கிறான். பிறகோ அதைக் கலையாகக் கருதி அந்த வகையிலேயே தொழிலைச் செய்கிறான். கிட்டத்தட்ட அவன் உயிருள்ள யந்திரமாக நடந்து கொள்வான். சிறைச் சாலைப்பகுதியிலேயே ஒரு தனிஇடத்தில் அவன் வசிப்பான். அப்படியும் அவன் காவல்காரர்களால் சூழப்பட்டிருப்பான். வெயில் காலத்திலோ அவனை நாய்களை அடித்துக் கொல்ல காவல்காரர்களுடன் அனுப்புவார்கள். அவன் அதிகாரிகளிடம் பணிவுடன் பேசி, நடந்து கொள்வான். அப்படியும் அவன் தன்னை அதிகாரிகளுக்கும் மேம்பட்டவனாகக் கருதுவான்.

ஒருவகையில் தண்டனையை நிறைவேற்றுபவன் வாழ்க்கை ஒரு கவலையுமற்றது. பணம், நல்ல உணவு, சாராயம் ஆகிய அனைத்தும் கிடைக்கும். பணம் லஞ்சமாகக் கொடுப்பார்கள். சாதாரண மக்கள் குற்றம் புரிந்து தண்டனையை பெற்றால் அவர்கள் கசை அடிக்குப் பயந்து தண்டனையை நிறைவேற்றுபவன் கடுமையாக நடந்து கொள்ளாமலிருக்கப் பணம் கொடுப்பார்கள். குறைந்தது முப்பது ரூபிளாவது அவன் வாங்காமல் போகமாட்டான். அதை முன்னதாகவே பெற்றுவிடுவான். பிறகோ வழக்கமான முறையிலேயே தன் தொழிலைச் செய்வான்.

கைதிகளிடம் பல கதைகளைக் கேட்டிருக்கிறேன். மருத்துவமனையில் படுத்துக் கொண்டேயிருப்பது சலிப்பையே அளிக்கும். மேலும் எல்லா நாட்களும் ஒன்று போலவே இருந்து வரும். காலையில் மருத்துவர்கள் வருவார்கள். உணவு முக்கியமானது. நோயாளிகளுக்கு வெவ்வேறான உணவுகள் கொடுப்பார்கள். அவர்கள் நோயின் தன்மைக் கேற்பவே இது இருக்கும். உணவின் மீதுள்ள ஆசையாலேயே பல கைதிகள் மருத்துவமனையிலேயே தங்கியிருக்க விரும்புவர். உணவுப் பொருள்களை விற்பவர்களும் இருந்தார்கள். பணமுள்ளவர்கள்

தங்களுக்குத் தேவையானவற்றை மற்ற நோயாளிகளிடமிருந்து பணம் கொடுத்து வாங்குவார்கள். எங்கள் பகுதியில் வாங்குவதற்கு ஆள் இல்லாவிட்டால் மருத்துவமனை சிப்பந்தி வேறு பகுதிக்கு எடுத்துச் சென்று விற்றுவிடுவான். ரொட்டி முதலியவற்றைக் கடைத் தெருவிற்குக் கூட அனுப்புவார்கள்.

ஒரு வேலையுமில்லாத சமயத்தில் சிலர் படுத்துத் தூங்குவார்கள். சிலர் வம்பளப்பார்கள். மேலும் ஏதாவது கதை, அல்லது சொந்த விவரங்கள் ஆகியவற்றைச் சொல்லிக் கொண்டிருப்பார்கள். இதில் நாம் கேட்காமலே தங்கள் சொந்த வாழ்க்கையைப் பற்றிக் கூறுபவர்களும் இருக்கத்தான் செய்தார்கள்.

எல்லாவகையான நோயாளிகளும் அங்கு இருந்தார்கள். மூளைக்கோளாறு உள்ளவர்கள் கூட அங்கு அழைத்துவரப் பட்டார்கள். அவர்களில் ஒருவன் எங்கள் பகுதியில் மூன்று வாரங்கள் இருந்தான். அவன் போட்ட கூச்சல், செய்த கோமாளித்தனம் ஆகியவற்றால் அங்கிருந்தே ஓடிவிடலாமா என்று தோன்றிவிட்டது.

எனக்குத் தெரிந்த ஒரு போலந்துக்காரர் இருந்தார். அவர் கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்தவர். எப்பொழுதும் பிரார்த்தனை செய்துகொண்டே இருப்பார். மிகவும் நல்லவர். வெகு நேர்த்தியாகவும் அருமையாகவும் பேசுவார். அவரை இரண்டு ஆண்டுகள் வரை நான் பார்க்கவே இல்லை. ஏதோ குற்றம் செய்ததற்காக அவர் கைது செய்யப்பட்டார் என்பது தெரியும். ஆனால் இச்சமயம் அவர் மூளைக்கோளாறு அடைந்தவராக மருத்துவமனைக்கு அழைத்து வரப்பட்டார். இரவும் பகலும் அவர் போட்ட கூச்சல், ஆடிய நடனம், பேசிய பேச்சு மருத்துவ மனையிலுள்ளவர்களை நடுநடுங்கச் செய்து விட்டது. அவரை வேறு இடத்திற்கு மாற்றிய பிறகே நாங்கள் நிம்மதியடைந்தோம்.

மற்றொரு விசித்திரமானவனை எனக்குத் தெரியும். வேனிற்காலத்தின் மத்தியில் ஒரு நாள் துப்பாக்கி மட்டை அடி தண்டனையை எதிர்நோக்கியிருக்கும் ஆயுள் கைதி ஒருவனை அழைத்து வந்தார்கள். அவனுக்கு நாற்பத்தைந்து வயதிருக்கலாம். திடகாத்திரமாக இருந்தான். முகத்தில் அம்மைத் தழும்புகள் ஆழமாக இருந்தன. சிவந்த கண்களையுடைய அவன் எனக்கு அருகிலுள்ள படுக்கைக்குக் கொண்டு வந்துவிடப்பட்டான். ஆரம்பத்தில் அவன் நல்லவிதமாகவும், யாரிடத்திலும் பேசாமலும் இருந்தான். கட்டிலில் உட்கார்ந்து எதையோ சிந்தித்துக் கொண்டிருப்பவனைப் போல் இருந்தான். மாலை மங்கி இருள் கவிந்ததும் திடீரென்று என் பக்கமாகத் திரும்பினான். மிகவும் ரகசியம் என்ற வகையில் பேசத்

தொடங்கினான். அவனுக்கு இரண்டாயிரம் துப்பாக்கி மட்டை அடி தண்டனை கொடுக்கும்படி கட்டளையிடப்பட்டிருக்கிறது. ஆனால் அதைப்பற்றி அவன் இப்பொழுது கவலைப்படவில்லை. யாரோ ஒரு அதிகாரியின் மகள் அவனுக்கு உதவி செய்யப் போகிறாளாம்.

நான் சந்தேகக் கண்களுடன் அவனைப் பார்த்தேன். அதிகாரியின் மகள் ஏதும் உதவி செய்ய இயலாது என்றேன். எதற்காக அவன் இங்கு அழைத்துவரப்பட்டிருக்கிறான், அவனுடைய நிலைமை என்ன என்று எனக்குத் தெரியாது. நல்ல நிலைமையிலுள்ள அவனை இங்கு ஏதோ ஒரு காரணத்திற்காகக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று தீர்மானித்தேன். அதிகாரியின் மகள் அவனைக் காதலிக்கிறாளாம். இரண்டு வாரங்களுக்கு முன் அவன் பாதுகாப்பு அறையிலிருக்கும் போது அவள் அந்தப் பக்கமாக வந்தாளாம். அவனைப் பார்த்ததுமே காதல் கொண்டு விட்டாளாம். தகப்பனாருடனும் சகோதரனுடனும் அவனைக் காண வந்தாளாம். தாயாருடன், கைதிகளுக்குப் பிச்சை கொடுக்கும் காரணத்தை வைத்துக்கொண்டு அவனை சந்திக்க வந்தாளாம். அவனை நேசிப்பதாகவும் சொன்னாளாம்.

விவரமாகச் சொல்வதைக் கேட்க விசித்திரமாக இருந்தது. இவை அனைத்தும் மூளைக் கோளாறினால் ஏற்பட்டவை. ஆனால் அவனோ முழுமனதுடன் தண்டனையிலிருந்து தப்பலாம் என்று நம்பினான். அவன் கூறிய விவரம் முட்டாள்தனமானது. மோசமான தோற்றமும், ஐம்பது வயதை நெருங்கிக் கொண்டிருப்பவனையும் ஒரு யுவதி நேசிப்பாளா? பித்துப் பிடித்த அவன் எதையோ பார்த்ததும் பயத்தைப் போக்கிக் கொள்ள ஒரு வழியைக் கண்டான். துரதிர்ஷ்டம் பிடித்த அவன் எந்தக் காலத்திலும் பெண்களைப் பற்றியே நினைக்காதவன். திடீரென்று ஒரு காதலை தோற்றுவித்தான். அவன் சொல்வதை மறுக்காமல் கேட்டுக் கொண்டிருந்தேன். சிலரிடத்திலும் சொன்னேன். அவர்கள் விசாரிக்கத் தொடங்கியதும் அவன் மௌனமாகிவிட்டான்.

மறுநாள் மருத்துவர்கள் அவனை வந்து பார்த்தார்கள். விசாரித்தார்கள். பரிசோதனை செய்தார்கள். பிறகு மருத்துவ மனையிலிருந்து அனுப்பி விட்டார்கள். அவனை அனுப்பியவன் ஒரு தவறு செய்து விட்டான். எதற்காக அனுப்பியிருக்கிறேன் என்று சொல்ல வில்லை. ஒருவேளை அவன் சந்தேகப்பட்டு அதைப் போக்கிக் கொள்ளவும் அனுப்பியிருக்கலாம். எப்படியோ இரண்டு நாட்களுக்குள் அவன் துப்பாக்கி மட்டை அடி தண்டனையை ஏற்கவேண்டியதாயிற்று. கடைசி வினாடிவரை அவனும் அதிகாரியின் மகள் உதவி செய்ய வருவாள் என்று நம்பினான்.

தண்டனையை நிறைவேற்ற அழைத்துச் செல்லும் போதே அவன் உதவி கோரி அழத் தொடங்கிவிட்டான். அவனை மீண்டும் மருத்துவமனைக்கு அழைத்துவந்தபோது எங்கள் பகுதியில் இடம் காலியாக இருக்கவில்லை. அதனால் அவனை வேறு பகுதிக்கு அனுப்பினார்கள். அவனைக் குறித்து விசாரித்த போது ஒரு வாரம் வரை அவன் பேசவே இல்லை என்று அறிந்தேன். முதுகு ரணம் குணமானதும் அவனை மருத்துவமனையிலிருந்து அனுப்பினார்கள். அதன் பிறகு அவனைக் குறித்து நான் ஒன்றும் கேள்விப்படவே இல்லை.

எதற்கும் சர்ச்சையும், சண்டையும் செய்யக் கூடியவர்களும் இருந்தார்கள். அவர்களில் முக்கியமாக உத்ஸனீவைக் குறிப்பிட வேண்டும். சந்தர்ப்பம் கிடைத்தால் சச்சரவு செய்ய அவன் தயங்கவே மாட்டான். இது அவனுக்கு மகிழ்ச்சியாகவும் அவசியமாகவும் இருந்தது. அவன் எங்கள் நடத்தைகளையும் கட்டுப்பாடுகளையும் உன்னிப்பாகக் கவனித்து வருவான்.

''எல்லாவற்றையும் உன்னிப்பாகக் கவனிக்கிறான்'' என்று அவனைக் குறித்துச் சிரித்துக் கொண்டே சக கைதிகள் கூறுவார்கள்.

''என்ன சொல்கிறீர்கள்? ஒரு முட்டாளுக்காக நான் என் கடமைகளை மறப்பதா? ஏன் முரடனுடன் நல்லவனையும் சேர்த்துக் கொள்ளக் கூடாது?'' என்று கேட்டான் உத்ஸனீவ்.

''அதனால் உனக்கு என்ன?''

''ஒருவனுடன் மற்றவரைப் பிணைப்பது கடினமானதல்ல. நானே முயற்சித்திருக்கிறேன். ஆனால் உங்கள் காதைப் பிடித்துத் திருகுவதுதான் மோசமானது.''

எல்லோரும் நகைத்தார்கள். ''யாராவது உன் காதைப் பிடித்துத் திருகினார்களா?'' என்று ஒருவன் கேட்டான்.

''ஏன்? போலீஸ் அதிகாரி திருகினான். அது நான் ஊர்போகும் வழியில் நடந்தது. யாபினும் நானும் அப்போது ஒன்றாக இருந்தோம். அவனும் ஒரு நாடோடி. வழியில் நாங்கள் டால்மினாவில் ஒரு குடியானவன் வீட்டில் எங்கள் கைவரிசைகளைக் காட்டினோம். அது நகரத்தைப் போன்றது இல்லை. ஒருவன் வந்தான். எங்களிடம் அடையாளச் சீட்டு இருக்கிறதா என்று கேட்டான். இல்லை என்றோம். வேறு ஒரு நண்பனும் வந்தான். நாங்கள் மூவரும் சாராயம் பருகினோம். மற்றும் இருவர் எங்களுடன் சேர்ந்து கொண்டனர். நாங்கள் ஐவருமாக அந்த ஊரிலிருந்த வியாபாரியின் இல்லத்திற்கு ஒரு முறை போய் வரத்திட்டமிட்டோம். ஆனால் அன்றிரவே

வியாபாரியின் வீட்டில் நாங்கள் அகப்பட்டுக் கொண்டோம். போலீஸ் நிலையத்திற்கும் அழைத்துச் செல்லப் பட்டோம்.

அங்கு போலீஸ் அதிகாரி இருந்தார். அவரே எங்களை விசாரிப்பதாகக் கூறினார். அவர் பெரிய சுங்கானில் புகை பிடித்துக் கொண்டிருந்தார். நாடோடி என்பவன் விசித்திரமானவன். அவனுக்கு எதுவுமே நினைவிருக்காது.

என்னை முதலில் ''நீ யார்?'' என்று போலீஸ் அதிகாரி கேட்டார்.

நான் வழக்கம் போல ''எனக்கு ஒன்றும் நினைவில்லை. எல்லாம் மறந்து விட்டது'' என்றேன்.

''நல்லது நீ இரு. பிறகு உன்னிடம் பேசிக் கொள்கிறேன்.'' என்று மற்றவர்களை ஒவ்வொருவராகக் கேட்டார். எல்லோரும் ஒரே விதமாகத் தங்களுக்கு எதுவுமே நினைவில்லை என்றனர். பிறகு மற்றவர்களை அழைத்துச் செல்லச் சொன்னார். என்னை மாத்திரம் இருக்கும்படி கட்டளையிட்டார். என்னை எதிரேயிருந்த நாற்காலியில் உட்காரச் சொன்னார். காகிதம் பேனாவை என் முன் எடுத்து வைத்தார். பிறகு பேனாவை கையில் எடுக்கச் சொன்னார். என் காதைப் பற்றித் திருகினார்.

நான் அவரைப் பார்த்தேன். ''எனக்கு எழுதத் தெரியாது'' என்றேன்.

''நான் சொல்வதை எழுது'' என்றார்.

''நான் எப்படி எழுதுவேன்''

''மூளைக் கோளாறு ஏற்பட்டிருக்கிறதா?'' என்றார்.

''இதற்கு ஒரு காரணமும் இருந்தது. தபலாஸ்காவில் ஒருவன் இருந்தான். அவன் அரசாங்கத்தில் வேலை செய்து கொண்டிருந்தான். அரசாங்கத்தின் பணத்தைச் சிறிது எடுத்துக் கொண்டு அவன் மறைந்துவிட்டான். அவனுடைய தோற்றம் என்னுடையதைப் போலிருந்தது. அதனாலேயே என்னை அவர் சோதனை செய்தார்.''

இதைக் கேட்டு எல்லோரும் நகைத்தார்கள். ''உனக்கு எழுதத் தெரியாதா?'' என்று ஒருவன் கேட்டான்.

''தெரியும். ஆனால் மறந்துவிட்டேன்'' என்றான் உத்ஸனீவ்.

இவ்விதமே நாங்கள் எங்கள் பொழுதைப் போக்கினோம். ஒரு மாறுதலும் இல்லாத நாட்கள் எவ்வளவு சலிப்பைக் கொடுத்தன? புத்தகங்கள் இல்லாவிட்டால் எப்படி மனம் குழம்புகிறது? மருத்துவ மனையைவிட சிறைச்சாலையின் விடுதி மோசமானது. எப்போதும் சண்டையும் சச்சரவும் ஓயாத தொல்லையுமாக இருந்து வரும்.

மருத்துவ மனையில் நாங்கள் அனைவரும் சமம். நட்பு முறையிலும் இருப்போம். மாலை நேரம்தான் மிகவும் மோசமானது. மெழுகுவர்த்திகளைக் கொளுத்தி வைப்பதால் மூச்சுத்திணறும். மெழுகுவர்த்திகளை அணைத்ததும் தூங்கச் செல்ல வேண்டும். கதவருகில் மங்கலாக விளக்கு எரிந்து கொண்டிருக்கும். அப்படியும் உள்பகுதி இருட்டாகவே இருக்கும். கெட்ட நாற்றமும், மருந்துகளின் வாசனையும் மூச்சுவிட முடியாமல் திணரச் செய்யும். தூக்கம் வராத காரணத்தால் நோயாளிகள் எழுந்து படுக்கையிலேயே மணிக்கணக்காக உட்கார்ந்திருப்பார்கள். இத்தகைய நேரங்களில் நான் பொழுதைப் போக்க என்னைப் போல் தூக்கம் வராமல் உட்கார்ந்திருப்பவனைக் கவனிப்பேன். அவன் என்னதான் சிந்திக்கிறான் என்பதை அறிய முயற்சிப்பேன். அல்லது கடந்த காலத்தை நினைவுக்குக் கொண்டு வருவேன். சில சிறு சம்பவங்கள் நினைவிற்கு வரும். எதிர் காலத்தைப் பற்றியும் சிந்திப்பேன். நான் சிறைச் சாலையை விட்டு வெளியேறிய பிறகு எப்படியிருக்கலாம்? நான் எங்கு போவது? இது எப்போது நடைபெறும்? என் வீட்டிற்கு நான் என்றாவது போவேனா?'' என்று நினைப்பேன்.

அச்சமயம் என் உள்ளத்தில் சிறிது நம்பிக்கை உதயமாகும். சில சமயங்களில் தூக்கம் வருவதற்காக ஒன்று இரண்டு மூன்று என்று எண்ணத் தொடங்குவேன். ஆயிரம் வரைகூட எண்ணியிருப்பேன். தூக்கம் வராது.

யாராவது இருமுவார்கள். உத்ஸனீவ் கடுமையாக இருமுவான். ஒவ்வொரு சமயமும் அவன் ''கடவுளே, நான் கொடிய பாவம் செய்திருக்கிறேன்'' என்று கூறுவான். அவனுடைய நோயின் தன்மை சந்தடியற்ற அந்த இடத்தை நடு நடுங்கச் செய்யும்.

தூக்கம் வராதவர்கள் அவர்களைப் போல் விழித்திருப் பவர்களிடம் பேசத் தொடங்குவார்கள். கடந்த கால வாழ்க்கை, மனைவி, மக்கள், வீடு, உற்றார், உறவினர் ஆகியோரைக் குறித்துச் சொல்லுவார்கள். நீரோடை சல சலவென்று சப்தித்துக் கொண்டு ஓடுவது போல் பேசுவார்கள். பனிக் காலத்தில் ஒரு நாள் இரவு நான் கேட்ட கதை எனக்கு இன்னமும் நினைவில் இருக்கிறது. ஆனால் அது கடுமையான காய்ச்சலில் அவதிப்பட்டுப் படுத்திருக்கும் போது கண்ட ஒரு கனவு போலத் தோன்றிற்று.

# 14

வெகு நேரமாயிற்று. பன்னிரண்டு மணியிருக்கலாம். நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்த நான் திடீரென்று கண்விழித்து எழுந்தேன். மங்கலான விளக்கொளி இருளைச் சிறிது போக்கியது. எல்லோரும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். உத்ஸனீவும் தூங்கிக் கொண்டிருந்தான். அவன் விட்ட குறட்டை அந்த இடத்தில் நிலவிய மௌனத்தைக் கலைத்தது. கனத்த பாத அணிகளை அணிந்த காவல் மாற்றல் நேரம் வந்தது. பல சிப்பாய்கள் வந்தனர். அவர்கள் துப்பாக்கிகளை தோளிலிருந்து இறக்கித் தரையில் வைத்தது, இடி இடிப்பது போலிருந்தது. கதவு திறக்கப்பட்டது. காவலாளியின் தலைவன் உள்ளே வந்தான். நோயாளிகளை எண்ணிப் பார்த்தான். பிறகு வெளியே சென்றான். கதவுகள் மூடிப்பூட்டப்பட்டன. பழைய காவல்காரர்கள் ஓய்வுக்காகச் சென்றனர். புதியவர்கள் தங்கள் இடங்களில் நின்று கொண்டனர்.

அச்சமயம் தான் என்படுக்கைக்கு சிறிது தூரத்தில் இருவர் குசுகுசுவென்று பேசிக் கொண்டிருப்பதைக் கவனித்தேன். மருத்துவ மனையில் இருவர் ஒருவர் அருகில் மற்றவர் என்று பல மாதங்களாகப் படுத்திருப்பார்கள். ஒரு நாள் கூடப் பேசியிருக்க மாட்டார்கள். அத்தகையவர்கள் திடீரென்று ஒரு நாள் இரவின் திரை மறைவில் பேசத் தொடங்கினர். ஒருவன் மற்றவனுக்குத் தன் வாழ்க்கை முழுவதையும் கூறிவிடுவான்.

இந்த இருவரும் அவ்விதம் இருந்தே இன்று பேசத் தொடங்கியவர்கள். அவர்கள் பேச்சின் ஆரம்பத்தை நான் கேட்கத் தவறிவிட்டேன். அதன் பிறகு அவனுடைய மெல்லிய குரலை உன்னிப்பாகக் கேட்டேன். எனக்குத் தூக்கம் வரவில்லை. அவர்கள் பேசுவதைக் கேட்பதைத் தவிர எனக்கு வேறு ஒன்றும் செய்ய இருக்கவில்லை.

இருவரில் ஒருவன் தன் கதையைச் சொல்ல மிகவும் ஆவலாக இருந்தான். மற்றவன் வேறு ஏதோ கவனமாக அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தான். அடிக்கடி டப்பாவிலிருந்து மூக்குத் தூளை எடுத்து உறுஞ்சினான். கதை சொல்பவன் பெயர் ஷிவுகாவ். வாலிபன், முப்பது வயதுக்கு மேலிருக்காது. சாதாரணக் கைதி. தையல் பகுதியில் வேலை செய்து கொண்டிருந்தான்.

கதையைக் கேட்டுக் கொண்டிருந்தவன் பெயர் செரிவின். அவனுக்குச் சுமார் ஐம்பது வயதிருக்கலாம். ராணுவத்தில் பணி புரிந்தவன்.

ஷிவுகாவ் எப்போதும் யார் மீதாவது ஏதாவது சொல்லிக் கொண்டேயிருப்பான். இதற்காக அடியும் படுவான். நடனமாடுவான். அவனை நடனமாடச் செய்வது மிகவும் எளிது. புதிய நண்பர்களை ஏற்படுத்திக் கொள்ளவே இவ்விதம் செய்வான்.

வெகு நேரம் வரை அவன் கூறிவந்த கதையை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. கடைசியில் ஷிவுகாவ் ''அவன் கடைத்தெருவிற்குப் போனால் எல்லோரும் தலையிலிருந்து தொப்பியைக் கழட்டிக் கையில் வைத்துக் கொண்டு வந்தனம் செய்வார்கள். சுருக்கமாக அவன் பெரிய பணக்காரன் என்று கூறிவிடலாம்'' என்றான்.

''அவனுக்கு ஒரு கடை இருந்ததாகக் கூறினாயே?'' என்றான் செரிவின்.

''ஆமாம். இரண்டு கடைகள் இருந்தன. எங்கள் பகுதி மக்கள் மிகவும் ஏழை. பிச்சைக்காரர்கள் என்றும் சொல்லலாம். பெண்கள் வெகுதூரத்திலுள்ள நதியிலிருந்து தண்ணீர் கொண்டு வருவார்கள். அவர்கள் கடுமையாக வேலை செய்தும் முட்டக்கோஸ், குழம்புக்குக் கூடப் போதும் போதாத வகையிலேயே பயிராகும்.

''அவனுக்குப் பெரிய பண்ணையும் மூன்று வேலைக்காரரும் இருந்தார்கள். எங்கள் பகுதியிலேயே அவன் பெரிய பணக்காரன், எதையும் செய்யச் சக்தி படைத்தவன் என்று கூறலாம். அவன் எழுபதாவது வயதை நெருங்கிக் கொண்டிருந்தான். அவன் பெயர் அன்குதிம். சப்தித்து அனைவரிடத்திலும் பேசுவான். அவனது சொல் சுத்தப் பொன்னுக்குச் சமமானது. எப்போதும் வேதாந்த நூல்களையே படித்து வருவான். ''இதோ பார் நான் சொல்வதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்'' என்று மனைவியிடம் கூறுவான். அப்போது இருந்த மனைவி அவனுக்கு இரண்டாந்தாரம். முதல் மனைவிக்குக் குழந்தைகள் இல்லாததால் அவளை மணந்து கொண்டான்.

அவளுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தன. அன்குதிமுக்கு அறுபது வயதாகும் சமயம் இரண்டாவது குழந்தை வாஸ்யா பிறந்தது. முதல் பெண் அகூலகாவிற்கு அப்போது பதினெட்டு வயதாயிற்று'' என்றான்.

''அவள் உன் மனைவியா?'' என்று செரிவின் கேட்டான்.

''சற்று பொறுங்கள். பல்கா என்பவன் அன்குதிமிடம் 'நம்முடைய உடமைகளைப் பங்கு போட்டுக் கொள்ளலாம். என்னுடைய நானூறு ரூபிள்களைக் கொடுங்கள். உங்கள் வியாபாரத்திற்கு அதைப் பயன்படுத்துவதை நான் விரும்பவில்லை. அடிமையாக இருக்கவோ உங்கள் மகளை கல்யாணம் செய்து கொள்ளவோ நான் தயாராக இல்லை. என் பெற்றோர் இறந்து விட்டனர். அதனால் என்னுடைய பணத்தை மது அருந்தியே செலவழித்து விட்டு ராணுவத்தில் சிப்பாயாகச் சேர்ந்து விடுகிறேன். பத்து ஆண்டுகளில் நான் தளபதியின் பதவியில் திரும்பி வருவேன்'' என்றான். அன்குதிம் அவனுடைய பணத்தைக் கொடுத்து கணக்கைத் தீர்த்துக் கொண்டான். பில்காவின் தகப்பனார் அன்குதிமுடைய வியாபாரத்தில் கூட்டாளியாக இருந்தார். கணக்கைத் தீர்த்துவிட்டு பில்காவிடம் அன்குதிம் 'நீ வீணில் கெட்டுவிடுவாய்' என்றான்.

அதற்கு ''எப்படி வேண்டுமானாலும் ஆகட்டும். உங்களிடம் இருந்தால் நல்லவிதமாகவே வைத்திருப்பீர்கள். நிலத்தைச் சுரண்டிச் சுரண்டியே அதைச் சுடுகாடாக்கி விட்டீர்கள். என் மனப் போக்கே வேறுவிதமானது. உங்கள் மகள் அகூலகாவை நான் மணக்க மாட்டேன். அவளுடன் நான் காதல் வாழ்க்கை நடத்தியாகி விட்டது'' என்றான்.

அன்குதிம் ஆத்திரமடைந்தான். 'நேர்மையான தகப்பனுக்கும், தூய மகளுக்கும் கெட்ட பெயரை ஏற்படுத்தவும் அவமானத்தை உண்டு பண்ணவும் நினைக்கிறாயா? எப்போது நீ அவளுடன் காதல் வாழ்க்கை நடத்தினாய்?' என்று கேட்டான். 'நான் அகூலகாவை மணக்க மாட்டேன். அவளை யாரும் மணக்கமாட்டார்கள். இது உறுதி. கெட்டுப் போன இவளை நிகிதாவும் மணக்க மாட்டான். நாங்கள் வெகு காலமாக காதல் வாழ்க்கை நடத்தி வருகிறோம். நீங்கள் இப்போது நூறு ரூபிள்கள் கொடுத்தால் அவளை மீண்டும் தீண்டமாட்டேன்' என்றான்.

''பில்காவுக்கு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. அவனுடன் ஒரு கூட்டமே இருந்தது. சுமார் மூன்று மாதங்கள் வரை அவன் தன் கூட்டத்துடன் மது அருந்தி மயங்கிக் கிடந்தான். கையிலுள்ள பணம் முழுவதும் செலவாகும் வரை அவன் அப்படியே காலங்கடத்தத்

தீர்மானித்தான். பணம் செலவழிந்தால் வீட்டை விற்பேன். அதன் பிறகு ராணுவத்தில் சேர்ந்து விடுவேன் என்று கூறுவான். மது அருந்தி, இரட்டைக் குதிரை வண்டியில் சுற்றித் திரிவான். அவனைப் பெண்கள் மோசமான வகையில் நேசித்தார்கள். அவன் வாத்தியக் கருவிகள் வாசிப்பான்'' என்றான் ஷிவுகாவ்.

''அதற்கு முன் அவன் அகூலகாவிடம் காதல் வாழ்க்கை நடத்தி வந்தானா?'' என்று கேட்டான் செரிவின்.

''சற்று பொறுங்கள். என் தகப்பனார் காலமான பிறகு என் தயார், அல்குதீம் கடைக்காக ரொட்டி தயாரித்து கொடுத்து வந்தாள். அதில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டே நாங்கள் வாழ்க்கை நடத்தினோம். கானகத்திற்கு அப்பால் எங்களுக்குச் சிறிதுநிலம் இருந்தது. அதில் பயிர் செய்வோம். என் தகப்பனார் காலமான பிறகு அங்கு பயிர் செய்யவே இல்லை. நான் தாயாரிடமிருந்து மூர்க்கத்தனமாகப் பணம் பெற்று வந்தேன். அதனால் என் வாழ்க்கையே வேறுவிதமாக இருந்தது.''

''அது தவறு. பெரிய பாவமாகும்.''

''காலையிலிருந்து இரவு வரை நான் மது போதையிலேயே இருந்தேன். எங்கள் வீடு மிகவும் பழையது. நான் எப்போதும் பில்காவுடன் இருந்து வந்தேன். அவன் என்னிடம் 'எனக்காக வாத்தியம் வாசி. நடனமாடு. உனக்குப் பணம் தருகிறேன். நான் பெரிய பணக்காரன் தெரியுமா?' என்று கூறுவான். ஒரு சமயம் அவன் 'அகூலகாவின் வீட்டின் கதவுகளில் தார் பூசு. அவளை நிகிதாவும் மணம் செய்து கொள்ளக்கூடாது' என்று கூறினான்.

''வயதான நிகிதா வெகு நாட்களாகவே அகூலகாவை மணக்க விரும்பியிருந்தான். அவன் மனைவியை இழந்தவன். வியாபாரம் செய்து பணம் திரட்டிக் கொண்டிருந்தான். அகூலகா பற்றிக் கூறப்பட்டதை அவனும் அறிந்தான். 'எனக்கு வயதாகி விட்டது. இனி அவளை மணக்க மாட்டேன்' என்று அவன் தீர்மானித்தான்.

'நாங்கள் அகூலகாவின் வீட்டுக் கதவுகளின்மீது தார் பூசினோம். இதைக் கண்ட அவளுடைய தகப்பன் 'அவளுக்கு ஒரு முடிவை ஏற்படுத்துகிறேன். அந்தக் காலமானால் இத்தகைய பெண்களை வெட்டி புதைத்து விடுவார்கள். ஆனால் இப்போது உலகம் மாறி விட்டது' என்று சொல்லிக் கொண்டான். மணிக்கணக்காக அவர்கள் அகூலகாவை அடித்துத் துன்புறுத்தினர். அவள் கூக்குரலிட்டுக் கொண்டே இருந்தாள்.

''பில்கா மது அருந்தி ஊரின் முக்கியமான தெருக்களில் அகூலகாவைக் குறித்துக் கேவலமாகப் பேசிக் கொண்டே சுற்றித்

திரிந்தான். ஒருநாள் அகூலகாவை நான் சந்தித்தேன். அவளுடைய ஆடைகளைப் பார்த்துக் கேவலமாகப் பேசினேன். நான் பேசிக் கொண்டிருந்ததை அவளுடைய தாயார் பார்த்து விட்டாள். உடனே அவளை அழைத்தாள். கண்டபடி பேசினாள். அன்று இரவு முழுவதும் அவளை அடித்துக் கொண்டேயிருந்தாள். 'அவள் என் மகளே இல்லை' என்று கூறினாள்.

''ஒரு நாள் என் தாயார் என்னிடம் வந்து 'நீ அகூலகாவை மணந்து கொள்கிறாயா?' என்று கேட்டாள். பிறகு 'நீ சம்மதித்தால் உனக்கு முன்னூறு ரூபிள் கொடுப்பார்கள்.' என்றாள். 'ஆனால் அவள் பெயர் கெட்டு விட்டதே என்றேன்.' 'நீ ஒரு முட்டாள். திருமணத்தின் மூலம் அந்தக் கெட்ட பெயர் மறைந்து விடும். அவர்களுடைய பணம் நமக்கு உதவியாக இருக்கும்' என்றாள். 'இப்போது இருபது ரூபிள் கொடு. நான் அவளை மணக்கிறேன்' என்றேன்.

''பணத்தைப் பெற்றதும் சாராயக் கடைக்குச் சென்று மது அருந்தத் தொடங்கினேன். பில்காவுக்கு நான் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்தது தெரிய வந்தது. அவன் என்னைப் பயமுறுத்தத் தொடங்கினான். 'எல்லோர் முன்னிலையிலும் உன்னை உதைப்பேன். அகூலகாவை அழைத்துச் சென்று விடுவேன்' என்றான். நான் உடனே வீட்டிற்குச் சென்றேன். என் தாயாரிடம் 'நீ உடனே ஐம்பது ரூபிள் கொடுத்தால் நல்லது, இல்லா விட்டால் அகூலகாவை மணக்க மாட்டேன்' என்றேன்.''

''உனக்கு அவளை மணம் முடித்து வைக்க அவர்கள் சம்மதித்தார்களா?'' என்றான் செரிவின்.

''ஏன் சம்மதிக்க மாட்டார்கள்? நான் அவர்களைவிட மோசமாக இல்லையே? என் தகப்பனார் இறப்பதற்கு முன் அவரை அவன் தான் ஓட்டாண்டியாக்கியது. அதற்கு முன்பு நாங்கள் பணக்காரர்களாகத் தான் இருந்தோம். எப்படியோ என்னைப் பலவந்தப்படுத்தி அகூலகாவை எனக்குத் திருமணம் செய்து வைத்தான் அன்குதிம். திருமணம் முடிந்த பிறகு நான் கையில் சாட்டையை எடுத்துக் கொண்டேன். அகூலகாவுக்குச் சிறிது வேடிக்கை காட்ட எண்ணினேன் 'ஏமாந்து போய் மணந்து கொண்டேன். ஆனால் நான் மடையன் இல்லை' என்று சொல்லத் தீர்மானித்தேன்.''

''நீங்கள் நினைத்தது தான் சரியானது. ஆரம்பத்திலேயே அவளுக்கு இந்த எண்ணத்தைஏற்படுத்த வேண்டியதுதான்.''

''குறுக்கே பேசாமல் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். திருமணத்தன்று எங்களைத் தனி அறைக்குக் கொண்டுவிட்டார்கள்.

கையில் சாட்டையுடன் சென்ற நான் அவள் ஒரு பாவமும் அறியாதவள் என்பதை அறிந்தேன். 'பில்காவைச் சந்தித்தால் அவனுக்கு ஒருமுடிவைக் கட்டிவிடுகிறேன்' என்று எண்ணினேன்.

''அதன் பிறகு நான் நடந்து கொண்ட முறையைக் கண்டு அகூலகாவின் தாயார் தகப்பனார் மகிழ்ச்சியடைந்தனர். திருமணத்திற்குப் பிறகு முதல் ஞாயிற்றுக்கிழமை நானும் அகூலகாவும் மாதாகோயிலுக்குச் சென்றோம். எங்கள் இருவரையும் கண்டவர்கள் 'சரியான தம்பதிகள்' என்றனர்.''

''எல்லாம் நல்லவிதமாக முடிந்து விட்டன அல்லவா?'' என்றான் செரிவின்.

ஓ ஓ ஓ

''ஒரு நாள் மது போதையில் இருந்தேன். நான் எனது நண்பர்கள் முன்னிலையில் 'எங்கே அந்த பில்கா? கொண்டுவாருங்கள்' என்று கத்தினேன். பலர் பலவிதமாகப் பேசினர். என் மனைவியை விற்று விடும்படியும் சொன்னார்கள். என்னை இவை மோசமாக நடந்து கொள்ளச் செய்தது. அகூலகாவை அடித்துத் துன்புறுத்தத் தொடங்கினேன். இதைக் கண்ட என் தாயார் ஆத்திரமடைந்தாள். என்னைக் கண்டபடி பேசினாள்.'' என்றான் ஷிவுகாவ்.

''அவளைக் கையும் களவுமாகக் காதலனுடன் பிடித்தீர்களா?''

''இல்லை. ஊரார் என்னைக் கேலி செய்து நகைத்தார்கள். பில்கா முன்னிலும் மோசமாக நடந்து கொண்டான். அகூலகாவின் வீட்டின் கதவுகளில் நானே தார் பூசியதைச் சொன்னான். 'என் நண்பர்கள் கூட்டத்துடன் உன் வீட்டிற்கு வருகிறேன். என் மனம் திருப்தியடையும் வரை உன் முன்னிலையிலேயே உன்னுடைய மனைவியை அடிக்கிறேன்' என்றான். அதனால் நான் சுமார் ஒரு மாதம் வரை வீட்டை விட்டே வெளியில் போகாமல் இருந்தேன். என் மனைவியையும் நான் தவறாமல் அடித்துத் துன்புறுத்திக் கொண்டிருந்தேன்.''

''எதற்காக அடித்துக் கொண்டிருந்தீர்கள்? ஊரார் பலவிதமாகப் பேசலாம், அதற்காக மனைவியை அடிக்கலாம், தண்டனை அளிக்க வேண்டியது தான். ஆனால் அவளுக்கு நல்லவற்றைக் கற்றுக் கொடுத்து நல்லவழிகளில் திருப்ப வேண்டும்.''

ஷிவுகாவ் ஒரு கணம் மௌனமாக இருந்தான். பிறகு பேசத் தொடங்கினான். ''என் மனம் வேதனை அடைந்தது. அவளை

அடித்துத் துன்புறுத்திக் கொண்டே இருந்தேன். இதை நான் என்மனவேதனையை மாற்றுவதற்காகச் செய்யவில்லை. அவள் ஜன்னலில் உட்கார்ந்து அழுது கொண்டே இருப்பாள். அதனால் அடித்தேன். இதற்காக என் தாயார், மாமனார், மாமியார் அனைவரும் என்னைக் கேவலமாகப் பேசத் தலைப்பட்டனர். கடைசியில் என் மாமியார் 'அவளை மன்னித்து விடுங்கள். அவள் தூய்மையானவள் என்பது உங்களுக்கே தெரியும்' என்றாள்.

''நான் யாருடைய சொல்லையும் கேட்கவில்லை. எனக்கு நானே அதிபதியாகக் கருதினேன். 'உங்கள் சொல்லைக் கேட்கமாட்டேன். என் விருப்பம் போல் நடப்பேன். பில்கா என் நண்பன், அவனை விடமாட்டேன்' என்று கூறுவேன்.''

''நீங்கள் மீண்டும் அவனுடன் சேர்ந்து குடித்து வந்தீர்களா?'' என்று கேட்டான் செரிவின்.

''இல்லை. மது அருந்தி விட்டால் அவனை யாருமே நெருங்க முடியாது. மேலும் அவன் கையிலுள்ள பணம் செலவாகி யாராவது ஒரு பணக்கார வாலிபனைப் பிடிப்பான். ராணுவத்தில் அவனைச் சேரும்படி தூண்டுவான். ராணுவத்தில் சேருவதானால்தான் வாலிபன் தன் பணம் முழுவதையும் பெறலாம். இவ்விதம் பெற்ற பணத்தை இருவருமாகக் குடித்துச் செலவழிப்பார்கள். பணம் போன பிறகு வாலிபன் ராணுவத்தில் சேர வேண்டியதாகி விடும். கடைசியில் பில்காவே ராணுவத்தில் சேர வேண்டியதாயிற்று. அவனை ராணுவத்தினர் அழைத்துப் போக வந்தார்கள்; அவன் பெரிய கூட்டத்துடன் எங்கள் வீட்டின் பக்கமாக அழைத்து வரப்பட்டான். அச்சமயம் அகூலகா சமையலறையிலிருந்து வெளியே வந்தாள். அவளைக் கண்ட பில்கா அருகில் வந்தான். 'அன்பே உன்னை இரண்டு ஆண்டுகளாக நேசித்து வந்தேன். இப்போது அவர்கள் என்னை அழைத்துப்போக வந்திருக்கிறார்கள்' என்று கூறினான். தலை குனிந்து வணங்கிவிட்டுச் சென்றான்.

''முதலில் அகூலகா மௌனமாக நின்றிருந்தாள். அவன் போவதைக் கண்டு 'நல்லது போய் வாருங்கள். எனக்கு உங்கள் மீது ஒரு கோபமும் இல்லை' என்றாள். நான் அகூலகாவைத் தொடர்ந்து வீட்டினுள் சென்றேன். பிறகு அவளிடம் 'பில்காவிடம் என்ன கூறினாய்?' என்று கேட்டேன்.' உலகத்தில் எல்லாவற்றையும்விட உங்களை நேசித்தேன் என்று கூறினேன்' என்றாள். அவள் இவ்விதம்தான் சொன்னாள்.''

''நீங்கள் ஒன்றும் சொல்லவில்லையா?''

''ஒன்றும் சொல்லவில்லை. அன்றிரவு முழுவதும் நான் தூங்கவே இல்லை. கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தேன். மறுநாள் அகூலகாவிடம் 'வெளியே போகலாம். வேறு ஆடை உடுத்தித் தயாராகு' என்றேன். அவளும் ஒன்றும் சந்தேகப்படாமல் தயாரானாள். வண்டியில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டேன். நான் என் நிலங்களைப் பார்க்கப் போவதாக அவள் நினைத்து விட்டாள். நானும் மௌனமாக வண்டியைச் செலுத்திக் கொண்டு சென்றேன். இரண்டு கல் சென்றதும் குதிரைகளை நிறுத்தினேன். வண்டியிலிருந்து இறங்கினேன். 'அகூலகா கீழே இறங்கு. உன் முடிவு நெருங்கி விட்டது' என்றேன். அவள் பயந்து விட்டாள். ஒன்றும் சொல்லாமல் கீழே இறங்கினாள். நான் அவளுடைய நீண்ட கூந்தலைப் பற்றினேன். கழுத்தைக் கத்தியால் அறுத்தேன். அறுபட்ட இடத்திலிருந்து ரத்தம் பீறிட்டு அடித்தது. அவள் என் கைகளில் துடிதுடித்தாள். என் உடல் முழுவதும் ரத்தக் கறையாயிற்று. அவள் துடிதுடித்துக் கொண்டிருக்கும் போது நான் புறப்பட்டேன். அவளை அங்கேயே விட்டேன். நேராக என் வீட்டிற்கு வந்து குளிக்கும் அறையில் பதுங்கிக் கொண்டேன்.''

''அகூலகாவின் கதி என்ன ஆயிற்று?''

''அவளைக் கண்டு எடுத்து வந்தார்கள்?''

''அவள் இறக்கவில்லையா?''

''அன்றிரவே அவள் இறந்துவிட்டாள். போலீசுக்கும் அவர்கள் தெரிவித்தார்கள். அதிகாரிகள் என்னை குளிக்கும் அறையில் கண்டு பிடித்தார்கள். அதனாலேயே கடந்த மூன்று ஆண்டுகளாக நான் இங்கே இருக்கிறேன்'' என்றான் ஷிவுகாவ்.

''ஹூம். உங்களை ஒரு முட்டாள் என்றே கூறுவேன்'' என்று பொடிடப்பாவை எடுத்தான் செரிவின். அதை உறிஞ்சினான். பிறகு 'என் மனைவிக்கும் ஒரு காதலன் இருந்ததாக அறிந்தேன். அவனை ஒன்றும் செய்யவில்லை. என் மனைவியை அழைத்துச்சென்று சாட்டையால் அடித்தேன். 'நீ என்னுடன் வாழ்க்கை நடத்துகிறாயா? இல்லை அவனுடன் ஓடிவிடுகிறாயா?' என்று கேட்டேன். அவள் அழுது கொண்டே 'உங்கள் கால்களைக் கழுவி அந்த நீரைப் பருகுகிறேன்' என்றாள். அவள் பெயர் அல்டோட்டியா!'' என்று கூறினான்.

# 15

ஏப்ரல்மாத ஆரம்பம். புனித வாரம் நெருங்கிக் கொண்டிருந்தது. வெயில் கால வேலைகள் மெள்ளத் தொடங்கின. சூரியன் நாளுக்கு நாள் பிரகாசமாகவும், அதிக வெப்பத்துடனும் காணப்பட்டான். வசந்தகாலக் காற்று கைகளிலும் கால்களிலும் விலங்குகளுடனிருக்கும் ஒருவனையே தொல்லைகொடுக்கிறது. வீட்டின் நினைவை ஏற்படுத்துகிறது. பனி, மழை காலத்தைவிட வெயில் காலத்திலேயே மனிதர்கள் விடுதலையை அதிகமாக நேசிக்கிறார்கள். இதை ஒவ்வொரு ஆயுள் தண்டனைக் கைதியின் முகத்திலும் பார்க்கலாம். வெயில் சச்சரவுகள் அதிகரிப்பதையும் நான் அறிந்தேன். கூக்குரலிட்டு, குதித்து ஆடுவார்கள்.

சகக் கைதிகள் வேலை செய்யும்போது கவனிப்பேன். எதிரே பரந்த நீல வானம். அதனடியில் பாய்ந்தோடும் நதி, அதற்கு அப்பால் பத்து கிலோ மீட்டரிலுள்ள கிராமம், ஆகியவற்றை அடிக்கடி உன்னிப்பாக பார்த்துக்கொண்டிருப் பார்கள். அல்லது அடக்கி ஒடுக்கப்பட்ட உற்சாகத்தை விடுவித்து வெகு தூரத்திலுள்ள சுதந்திரமான காற்றை சுவாசிக்க ஏங்கித் துடிப்பது போலப் பெருமூச்சு விடுவார்கள். கடைசியில் ''என்ன பயன்?'' என்று சொல்லிக் கொண்டே செங்கல்களைச் சுமந்து செல்வார்கள். அல்லது வேறு வேலையில் ஈடுபட்டு உள்ளத்தில் போராடிக் கொண்டிருக்கும் எதையோ அடிக்க முயற்சிப்பது போல் நடந்து கொள்வார்கள். அவர்கள் காலிலும் கையிலும் விலங்குகள் பூட்டப்பட்டிருந்தன. பெரும்பாலானவர்கள் வாழ்க்கையின் தொடக்கத்தினராகவே இருந்தனர். கவிகளைப் போல் நான் அனைத்தையும் வர்ணிக்க முயற்சிக்கவில்லை. ஆனால் உண்மையானவற்றை அப்படியே கூறுகிறேன்.

அச்சமயம் ரஷ்ய நாடு முழுவதிலும், சைபீரியாவிலும் நாடோடிகள் காணப்பட்டனர். கடவுளின் மக்கள் சிறைச் சாலையிலிருந்து தப்பி காடுகளுக்குச் சென்று தங்களைக் காப்பாற்றிக் கொள்வார்கள். மோசமான நாற்றமுடைய சிறைச்சாலை, நீதிமன்ற விசாரணை, விலங்கு, கசையடி, துப்பாக்கி மட்டை அடி ஆகிய அனைத்தையும்அனுபவித்த பிறகு தப்பிச் சென்று விருப்பம் போல் சுற்றி அலைவார்கள். எந்த ஊரைப் பார்த்தாலும் அவர்களுக்கு இன்பமளிப்பதாகவே இருக்கும். பறவைகளைப் போல சுதந்திரமாக அவர்கள் ஆடிப் பாடித் திரிவார்கள். கடவுள் அளித்ததை அவர்கள் உண்டு, பருகி ஆனந்தமடைவார்கள். இருள் வந்ததும் அவர்கள் விருப்பமான இடத்தில் படுத்து உறங்குவார்கள். அல்லது திறந்த வெளியில் படுத்து கடவுளின் பார்வையின்கீழ், சிறைச்சாலையின் துன்பங்களின்றியிருப்பார்கள். அவர்களுக்கு வானத்தில் மின்னும் தாரகைகள் துணையாக இருந்து வரும். அச்சமயங்களில் பல நாட்கள் உண்ண ஒரு துண்டு ரொட்டிகூடக் கிடைக்காமல் போகலாம். சில சமயம் உலகம் பூராவும் சுற்றித் திரிவார்கள். பார்த்ததைக் கவர்ந்து விடுவார்கள். கொள்ளை அடிப்பார்கள். கொலைகூடச் செய்வார்கள்.

ஆயுள் தண்டனைக் கைதியாக சிறைவாசம் செய்து சைபீரியாவில் குடியேறியவன் ஒரு குழந்தையைப் போன்றவன். எதைப் பார்த்தாலும் அவனுக்குப் புதுமையானதாகவும் அதைப் பெறவேண்டும் என்ற எண்ணமும் ஏற்படும். இது எல்லோராலும் கைவிடப் பட்டவர்களுக்கும் பொருந்தும். நாடோடியாக ஊர் சுற்றித் திரிபவன் வழிப்பறிக்காரனோ, திருடனோ இல்லை. ஆனால் ஆசையைவிட அவசியம் காரணமாகவே அவன் அவ்விதம் மாறுகிறான்.

சிறையிலிருந்து தப்பி வெளியே வந்து விட்டால் போதுமானது, பிறகு கவலையே இல்லை என்று நினைக்கலாம். அது தான் இல்லை. சில சமயங்களில் அவர்களை வெகு தூரத்திற்கு அழைத்துச் சென்று விடுவது போலத் தோன்றலாம். காட்டில் வாழ்வது பயங்கரமானது. ஆனால் சுதந்திரமானது, வீர தீரச் செயல்கள் நிரம்பியது. ஒரு முறை அந்த வாழ்க்கையைச் சுவைத்தவர்களுக்கு அது மர்மம் நிறைந்ததாகவும், கவர்ச்சி பொருந்தியதாகவும் இருக்கும்.

ஒருவன் குடியேறி, நல்லவிதமாக வாழ்க்கை நடத்துபவனாகவும், சிறந்த குடியானவனாகவும் காணப்படலாம். சில சமயம் அவன் யாரையாவது மணந்து, மக்களைப் பெற்று, ஐந்து ஆண்டுகள் வரை குடும்ப வாழ்க்கையை நடத்தலாம். அப்படியும் ஒரு நாள் காலையில் அவன் மனைவி மக்களையும் அவனுக்காக ஏற்பாடு செய்து

ஒப்புவிக்கப்பட்ட நில புலன்களையும் கைவிட்டு மறைந்து விடலாம். இத்தகைய குணமுள்ள கைதியை எனக்குக் காட்டினார்கள். அவன் ஒரு குறிப்பிட்ட குற்றம் எதுவும் செய்யவில்லை. ஆனால் விருப்பமான சமயங்களில் ஓடி மறைந்து விடுவான்.

சிறைச்சாலையின் முன் கொடிய விலங்குகள் வசிக்கும் காடு தேவலோகம் போன்றதாகவே காணப்படலாம். அதில் வசிப்பது மிகவும் கடினமே. அப்படியும் சுதந்திரம் சுதந்திரந்தான். ரஷ்யாவிலுள்ள ஒவ்வொரு ஆயுள் கைதியும் கோடைகாலத்து சூரியனின் முதல் கிரணம் தோன்றியதுமே அமைதியிழந்து காணப்படுவார்கள். எல்லோருமே தப்பி ஓடிவிடுவார்கள் என்பதல்ல. தப்பி ஓடுவதால் ஏற்படும் துன்பம், மீண்டும் அகப்பட்டால் கிடைக்கும் தண்டனை ஆகியவற்றிற்குப் பயந்து மௌனமாக இருப்பார்கள். நூற்றில் ஒருவன் இந்தத் தொல்லைகளைப் பொருட்படுத்தாது, துணிந்து வெளியேறுவான். மற்ற தொன்னூற்றி ஒன்பது பேர்கள் பகல் கனவு காண்பவர்களாக இருப்பார்கள். தண்டனையை எதிர்நோக்கியிருப்பவர்கள் ஆகியோரைக் குறித்தே சொல்கிறேன். அவர்களே தப்பிச் செல்ல முயற்சிப்பார்கள். ஆயுள் கைதி யாராவது தப்பிச் சென்றான் என்றால் அவன் தண்டனையை அனுபவிக்கத் தொடங்கியவனாகவே இருக்கலாம். இரண்டு ஆண்டுகள் அவன் தண்டனையை அனுபவித்து விட்டால் அதை பல ஆண்டுகள் அனுபவித்துவிட்டதாகக் கருதுவான். மெள்ள அவன் தண்டனைக் காலத்தை முடித்துக் கொண்டு சட்டப்பூர்வமாகக் குடியேறவும், நிலபுலன்களைப் பெறவும் விரும்புவான். வீணில் தப்பிச் சென்று கிடைக்கக்கூடிய நல்லவற்றை இழக்க விரும்ப மாட்டான்.

தப்பி ஓட முயற்சிக்கையில் தோல்வி கட்டாயம் ஏற்படும். தப்பிச் செல்லும் பத்துப் பேர்களில் ஒருவன்தான் வேறு சிறைச் சாலைக்கு மாற்றிக்கொள்ள இயலும். பதினைந்து, இருபது ஆண்டுகள் ஓரேசிறைச் சாலையில் இருப்பதை மாற்றிக்கொள்ளச் சிலர் விரும்புவார்கள். வேறு சிறைச்சாலைக்கு மாற்றுவது அரசாங்கத்தின் கட்டுதிட்டங்களில் ஒன்று. ஒருவன் தப்பிச் செல்ல முயன்று பிடிபட்டால் அவன் வேறு சிறைச்சாலைக்கு மாற்றவேண்டும் என்று கூறினால் அவ்விதமே செய்வார்கள். வெயில் காலத்தில் தப்பிச் செல்லும் கைதிகள் பனி காலத்திற்குத் தகுதியான இடம் கிடைக்காமல் அவதியுறுவார்கள். அச்சமயங்களில் அவர்கள் பனிகாலத்தைக் கடத்த எதையும் செய்வார்கள். ஒருவனுடைய அடையாளச் சீட்டைப் பறிக்க அவனைக் கொலையும்

செய்துவிடுவார்கள். சில சமயங்களில் அவர்கள் தங்கள் விருப்பத்துடனேயே மீண்டும் சிறைச்சாலைக்குத் திரும்பி வந்து விடுவார்கள்.

கோடை காலம் என்னை தொந்தரவு செய்தது. நான் சந்து பொந்துகளின் வழியாக வானத்தையே பார்த்துக் கொண்டிருப்பேன். சோர்வும், அமைதியின்மையும் நாளுக்கு நாள் என் மனதில் வளர்ந்து சிறைச் சாலையின் மீதே வெறுப்பை உண்டு பண்ணிற்று. சிறை தண்டனை பெற்று அதை அனுபவிக்கத் தொடங்கிய முதல் ஆண்டு எனது முந்தைய வாழ்க்கை என்னையே சித்திரவதை செய்தது. அதுவே என்னுடைய வாழ்க்கையை கொடிய நஞ்சாகச் செய்தது. உடல் நலமுடன் இருந்த போதிலும் நான் அடிக்கடி மருத்துவமனைக்குச் சென்றேன். கைதிகளின வெறுப்பையும் சிறைச் சாலையின் வாழ்க்கையையும் மறக்கவே அவ்விதம் செய்தேன். சாதாரணக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களோ என்னைப் போன்றிருக்கவில்லை. அவர்கள் சிறைச் சாலையினுள் வந்ததுமே நண்பர்களை ஏற்படுத்திக் கொண்டு விடுவார்கள். மகிழ்ச்சியுடன் காலத்தைக் கடத்தத் தொடங்குவார்கள். இதனாலேயே கோடை காலத்தைக் கண்டதும் என் மனம் கவலை கொள்ள ஆரம்பித்தது.

நோன்பு நாளின் முடிவில் நான் ஒரு தொழுகைக்கு ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது. முதல் வாரம் அதிகாரி வந்து கைதிகளை ஏழு பிரிவுகளாகப் பிரித்தார். முப்பதுபேர் கொண்ட ஒவ்வொரு பிரிவினரும் ஒரு வாரம் நோன்பு இருப்பது என்று ஏற்பாடாயிற்று. நான் நோன்பு இருப்பதை விரும்பினேன். அச்சமயங்களில் வேலை செய்ய அனுப்பமாட்டார்கள். மாதா கோயிலுக்குப் போய் வருவோம். சிறைச்சாலையிலிருந்து மாதாகோயில் அதிக தூரம் இருக்கவில்லை. ஒரு நாளைக்கு இரண்டு அல்லது மூன்று முறை போய் வருவோம். மாதா கோயிலுக்குச் சென்று வெகு காலமாகிவிட்டது. நோன்பு இருப்பது எனக்குச் சிறுபிள்ளையிலிருந்தே பழக்கமானது. நோன்பு, பிரார்த்தனை, மற்றும் நோன்பு நாளைச் சேர்ந்த ஒவ்வொன்றும் என் மனக் கண்முன் துள்ளிவிளையாடின. இரவிலிருந்து உறைபனி படிந்திருக்கும் தெருக்களில் அதிகாலையில் நடந்து கடவுளின் இல்லமான மாதா கோயிலுக்குப் போவது எவ்வளவு நேர்த்தியானது!

சிப்பாய்கள் எங்களுடன் மாதாகோயிலினுள் தொடர்ந்து வர மாட்டார்கள். நாங்கள் ஒன்றாகக் கூடி நின்று பாதிரியாரின் குரலைக் கேட்கவும், அவரைப் பார்க்கவும் துடிதுடிப்போம்.

கைதிகள் பிரார்த்தனை செய்வார்கள். ஒரு கோபக் மெழுகுவர்த்தி வாங்கி வைப்பார்கள். ''நான் மனிதன்தான்! கடவுளின்

முன்னிலையில் எல்லோரும் சமம்''என்று எண்ணுவார்கள். நாங்கள் காலை பிரார்த்தனையில் கலந்து கொள்வோம். 'கடவுளே, எங்களைத் திருடனாகவும் ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று கூறும்போது நாங்கள் எங்களுடைய விலங்குகள் சப்திக்க மண்டியிட்டு உட்காருவோம். முக்கியமாக அந்த வாக்கியங்கள் எங்களுக்காக ஏற்பட்டவை என்று கருதுவோம்.

ஈஸ்டர் பண்டிகை வந்தது. அதிகாரிகள் எங்களுக்கு முட்டையும், இனிப்பு ரொட்டியும் கொடுத்தார்கள். வழக்கம் போல நகர மக்கள் வந்து கூடினார்கள். தர்மம் செய்தார்கள். கிறிஸ்துமஸ் பண்டிகை நாளைப் போலவே நாங்கள் அப்போது நல்ல உணவாக உண்டு, ஆடிப்பாடினோம். வெளியில் வந்து உட்கார்ந்து அதை அனுபவித்தோம். குளிர்காலத்தைவிட அதிக வெளிச்சமும், இடமும் இருப்பதாகக் கருதினோம். ஆனால் அதிக வருத்தத்தையும் அடைந்தோம். விடுமுறை நாட்கள் நீண்டதாகத் தோன்றிற்று, சாதாரண நாட்களின் வேலை எங்களுக்குக் குறுகியதாக இருந்தது.

குளிர்காலத்தைவிட வெயில் காலத்தில் எங்கள் வேலை கடினமானதாக இருந்தது. பெரும்பாலும் வீடு கட்டுவதும், வீடுகளிலுமே நாங்கள் வேலை செய்ய வேண்டியிருந்தது. கைதிகளில் சிலர் அடித்தளம் தோண்டுவார்கள். செங்கல் அடுக்குவார்கள். சிலர் தச்சு வேலை, கருமான்வேலை, வர்ணம் பூசும் வேலை ஆகியவற்றை அரசாங்க கட்டிடங்களில் செய்வார்கள். சிலர் செங்கல் அறுக்க அனுப்பப்படுவார்கள். இந்த வேலை தான் கடுமையானதாகக் கருதப்பட்டு வந்தது. செங்கல் சூளை கோட்டையிலிருந்து இரண்டு கிலோமீட்டர் தூரத்திலிருந்தது. அதிகாலையிலேயே ஐம்பது பேர் கொண்ட ஒரு கூட்டம் சூளை போடுமிடத்திற்குச் செல்லும். அவர்கள் பகல் சாப்பாட்டிற்குத் திரும்பி வர இயலாதநால் கையில் ரொட்டியை எடுத்துச் செல்வார்கள். அந்த நீண்ட பகல் பொழுதில் அவர்களுடைய வேலையைச் செய்து முடிப்பது மிகவும் கடினமானது.

முதலில் மண்ணைத் தோண்டி எடுக்க வேண்டும். அதை ஒரு இடத்திற்குக் கொண்டு கொட்டி, தண்ணீர் ஊற்றி மிதிக்க வேண்டும். பிறகு செங்கல் அறுத்துக் கொடுக்க வேண்டும். ஒவ்வொருவரும் இருநூற்றி ஐம்பது செங்கல்களுக்குக் குறையாமல் அறுத்துக் கொடுக்க வேண்டும் என்பது சட்டம்.

நான் இரண்டு முறை சூளைக்குச் சென்றிருக்கிறேன். செங்கல் அறுக்கச் செல்பவர்கள் மாலை மங்காத வரை சிறைச் சாலைக்குத் திரும்ப மாட்டார்கள். ஒரேயடியாகச் சோர்வடைந்தும் போவார்கள். வெயில் காலம் முழுவதும் தாங்கள் கடுமையான வேலைகளைச்

செய்வதாகக் குறை கூறிக் கொண்டிருப்பார்கள். இது அவர்கள் மனதிற்குச் சிறிது ஆறுதலை அளிக்கலாம்.

செங்கல் சூளையில் வேலை செய்யச் சிலர் வேறு காரணங்களுக்காகவும் போவார்கள். அந்த இடம் நகரத்திற்கு வெளியே நதிக்கரையின் அருகில் பரந்த வெளியில் இருந்தது. அங்கு தொந்தரவின்றி புகைபிடிக்கலாம். அரை மணிநேரம் ஓய்வாகவும் படுத்திருக்கலாம்.

என்னை எப்போதும் போல செங்கல் சூளையில் வேலை செய்யவோ, அல்லது செங்கல்களை சிறைச் சாலைக்கு எடுத்துக்கொண்டுவரவோ அனுப்புவார்கள். மதில் சுவர் வேலை இரண்டு மாதங்கள் நடைபெற்றன. கற்களைக் கட்டி எடுத்துவந்த கயிறு என் தோளைத் துன்புறுத்தியது. அப்படியும் நான் கற்களைச் சுமந்து வந்தேன். என் உடல் ஆரோக்கியமாக இருக்கலாம் என்ற எண்ணத்தில் அந்த வேலையை நான் விரும்பிச் செய்தேன். பன்னிரண்டு பவுண்ட் எடையுள்ள எட்டுக் கற்களையே ஆரம்பத்தில் நான் சுமந்தேன். பிறகோ பன்னிரண்டு, பதினைந்துகூட எடுத்து வந்தேன். இது எனக்குத் திருப்தியை அளித்தது. உடல் வலிமையைவிட உள்ளத்தின் உறுதியே மிக முக்கியமானது என்று அப்போது உணர்ந்தேன்.

சிறைச்சாலையிலிருந்து விடுபட்ட பிறகு ஏதாவது ஒரு தொழிலை மேற்கொள்ள விரும்பினேன்.

கல்சுமக்கும் வேலையை என் உடலுக்கு வலிமையை அளிக்கும் என்பதற்காக மாத்திரம் நான் மேற்கொள்ளவில்லை. அது என்னை நதிக் கரைக்கு அழைத்துச் செல்வதையும் முன்னிட்டே அந்த வேலையை ஏற்றுக் கொண்டேன். இந்த ஒரு இடத்திலிருந்து தான் கடவுளின் சுதந்திரமான பூமியைக் காண முடியும். நல்ல வெளிச்சத்துடனும், தூய்மை, தனிமையுடன் சுதந்திரமாகவும் இருந்தது என் மனதிற்கு நூதனமான வகையில் கவர்ச்சியுடன் காணப்பட்டது. நதிக்கரைதான் கோட்டைக்கு வெளியே இருந்தது. மற்ற தொழில்கள் செய்யுமிடங்கள் கோட்டையினுள்ளோ, அதன் அருகாமையிலோ இருந்தன. ஆரம்பத்திலிருந்தே நான் கோட்டையையும் சில கட்டிடங்களை- முக்கியமாக சிறை அதிகாரியின் இருப்பிடத்தையும் நான் வெறுத்து வந்தேன். அந்த வழியாகச் செல்லும் சமயம் நான் என்னையே அழுத்திக் கொள்வேன். ஆனால் நதிக்கரையிலோ என்னையே மறந்து விடுவேன். அங்கு எல்லாமே நேர்த்தியானவையாக இருந்தன.

கடுமையான வெயிலைக் கக்கும் சூரியன், தூயவானம், நதியின் அக்கரையில் வெகு தூரத்திலிருந்து வரும் கிராம மக்களின் பாடல்கள்- எல்லாமே என் மனதைக் கவர்வதாக இருந்தன. சுறுசுறுப்பாக வேலை செய்யும் பெண்களின் கூக்குரலையும் கேட்பேன். அவர்கள் ஏழைகளாகவும், காட்டு மிராண்டித் தனத்துடனும் ஆனால் சுதந்திரமாக இருந்தார்கள்.

நதிக்கரையிலுள்ள மிகவும் சாதாரணமான மலர்கூட என் கவனத்தைக் கவர்ந்தது. சிறை தண்டனை பெற்ற முதல் ஆண்டில் நான் மிகவும் கவலையுடன் இருந்தேன். அதனால் என்னைச் சுற்றிலுமுள்ள சிறந்தவற்றையும் கவனிக்கவில்லை. நான் கண்களை மூடிக்கொண்டு அவற்றைப் பார்க்கவும் மறுத்தேன். நல்லவர்களாகவும் சிறந்த சிந்தனாவாதிகளாகவும், உள்ளவர் களையும் பார்க்க விரும்பவில்லை. அன்பான மொழிகளைக் கூறுவதையும் கேட்கவில்லை. துன்பத்தில் உழல்பவன் மனதைத் தேற்றப் பயன்படும் நல்ல சொற்களையும் காதுகொடுத்துக் கேட்க மறுத்தேன். ஆனால் நான் சொல்லவந்ததிலிருந்து மாறுபட்டு எங்கோ போய்க் கொண்டிருக்கிறேன்.

மாலைக்குள் வேலை செய்து களைத்துப் போவதை நான் விரும்பினேன். இது ஒரு வேளை நான் இரவில் நன்றாகத் தூங்கலாம் என்ற காரணத்தினாலும் இருக்கலாம். குளிர் காலத்தைவிட கோடைகாலத்தில் தூங்க முயற்சிப்பது மிகவும் கடினம். சில மாலை வேளைகள் வெகு நேர்த்தியாக இருக்கும் என்பது உண்மைதான். சூரியன் பகல் முழுதும் சிறைச் சாலையின் கூடத்தை தணல் போலச் சூடாக்கி பிறகு விட்டுச் செல்லுவான். மாலைக் காற்று குளுமையாக இருக்கும். மெள்ள குளிர்ந்த இரவு வரும். சிறைச்சலை விடுதியினுள் அடைபடுவதற்கு முன் கைதிகள் கூட்டமாக உலாவுவார்கள். பெரும்பாலானவர்கள் உணவு உண்ணும் இடத்திலும், மற்ற பகுதிகளிலும் கூட எதைக் குறித்தாவது விவாதிப்பார்கள். சில சமயங்களில் உலகத்து அதிசயம் போன்ற வதந்திகள் உலாவத் தொடங்கும். கைதிகளும் சிறுபிள்ளைகளைப் போன்று ஆவலுடன் அதைக் குறித்து விவாதிக்கத் தொடங்குவார்கள். இவ்விதம் தான் எங்கள் சிறைச் சாலைக்கு ஒரு உயர்தர அதிகாரி பார்வையிட வரப்போவதாகவும், சிறை அதிகாரி இங்கிருந்து போய் விடுவதாகவும் செய்தி கிடைத்தது.

உயர்தர அதிகாரி வந்தால் கைதிகளிடம் குறைகளைக் கேட்பார். அப்போது சிறை அதிகாரி செய்யும் கொடுமையையும், அவன் உணவுப் பொருள்களையும் மற்றவற்றையும் கொள்ளையடிப்

பதையும் கூறிவிடலாம் என்று கைதிகள் கனவு கண்டனர். சிலரோ யார் வந்தாலும் இந்தச் சிறை அதிகாரியை ஒன்றுமே செய்ய முடியாது. அவன் எப்படிப்பட்ட வரையும் கவர்ந்து விடுவான். மேலும் அதிகாரிகள் ஒருவர் மற்றவரைக் காட்டிக் கொடுக்க மாட்டார்கள் என்று வாதித்தனர். இந்த விவாதத்தில் பலதரப்பட்ட எண்ணங் களையுடைய கைதிகளும் கலந்து கொண்டனர். ஒவ்வொருவரும் தன் மனப் போக்குப்படி பேசுவார்கள். அவர்களுக்குத் தோன்றியதை அடித்துக் கூறினர்.

சில நாட்களுக்குள்ளாகவே வதந்திகள் உண்மையானவை என்பதை அறிந்தோம். பீட்டர்ஸ்பர்க் நகரத்திலிருந்து ஒரு உயர்தர அதிகாரி சைபீரியா முழுவதும் சுற்றிப் பார்க்க வருகிறார் என்று தெரிந்தது. அதற்காக ஒவ்வொரு இடமும் சுத்தம் செய்யப்பட்டது. சிறைச்சாலையும், மற்ற கட்டிடங்களும் வெள்ளை அடிக்கப்பட்டன. பழுது பார்க்கப்பட்டன. அதிகாரி வரும் நாளைக்கு முன் ஒரு சம்பவம் நடைபெற்றது. அது வரை சிறை அதிகாரி கடுமையாக நடந்து கொண்டு வந்தான். ஆனால் சம்பவம் நடந்த அன்றே அவன் அடியோடு மாறிவிட்டான். அவன் அன்புடன் பேசினான்.

லோமால் என்பவன் சிறையில் இருந்தான். அவன் குடும்பம் ஒரு காலத்தில் செல்வச் செருக்குடன் இருந்தது. ஊரார் பொறாமைப் படும்படி வாழ்ந்த அவர்கள் கிராம மக்களிடம் வட்டி வியாபாரம் செய்து வந்தனர். இதனால் அந்தக் கிராமத்தவரே அவர்களுக்கு அடிமையாகி விட்டனர். இவ்வளவு சிறப்புடன் இருந்த அவர்கள் திடீரென்று அந்த ஊரைவிட்டு வெளியேறினர். வேறு ஒரு ஊருக்கு வந்து மறு பெயருடன் குடியேறினர். ஆனால் அங்கு அவர்களுடனிருந்த ஆறு வேலைக்காரர்கள் கொலை செய்யப்பட்டனர். பெரிய பணக்காரர்களாக இருந்த அவர்கள் உண்மையில் அப்படி இல்லை. தங்கள் வேலைக்காரர்களுக்கே அவர்களால் ஊதியம் கொடுக்க முடியவில்லை. அதனாலேயே அவர்களைக் கொலை செய்து விட்டனர் என்று கூறப்பட்டது. ஆனால் உண்மையான கொலைகாரன் யார் என்று தெரியவில்லை. கடைசியில் லோமால் குடும்பத்தினரின் ரகசியங்கள் வெளியாயின. விசாரணையும் மற்ற தொல்லைகளும் அவர்களை ஒட்டாண்டியாக்கி விட்டன.

லோமாலின் தகப்பனார் துக்கத்தினால் இறந்து போனார். சகோதரர்கள் பல ஊர்களுக்குக் கப்பலேற்றி அனுப்பப்பட்டனர். லோமாலும் அவனுடைய சித்தப்பாவும் சிறையில் இருந்தனர்.

செவரிகா என்பவன் நாடோடி. அவனைப் போன்ற கொடியவனே இருக்கமுடியாது எனலாம். அவன்தான் லோமாவின் வேலைக்காரர்கள் ஆறு பேரையும் கொன்றதாகக் கூறினான். அவன் சொன்னது உண்மையா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் அவனது தொழிலே கொலை செய்வது தான் என்று தெரிய வந்தது.

எக்காரணத்தாலோ லோமாலையும், அவனது சித்தப்பாவையும் கைதிகளில் ஒருவர்கூட விரும்பவில்லை. செவரிகாவுக்கும் லோமாலின் சித்தப்பாவுக்கும் சச்சரவு ஏற்பட்டது. அதன் மீது ஆத்திரமடைந்த சித்தப்பா செவரிகாவைக் கத்தியால் குத்திவிட்டான்.

விசாரணையின் மூலமும் மற்ற காரணங்களினாலும் லோமால் குடும்பத்தினர் ஒட்டாண்டியாகி விட்டனர். ஆனாலும் அவர்களிடம் சிறிது பணம் இருந்தது. அவர்கள் தங்களுக்கென்றே தனியாக தேநீர் தயாரிக்கும் பாத்திரம் வைத்திருந்தார்கள். தேநீரும் தயாரித்துப் பருகி வந்தார்கள். இது சிறை அதிகாரிக்குப் பிடிக்கவில்லை. அவர்கள் செய்யும் ஒரு சிறு தவறையும் அவன் உன்னிப்பாகக் கவனித்து வந்தான். சிறை அதிகாரி லஞ்சம்பெற விரும்புவதாக லோமால் எண்ணினான். ஆனால் அவன் லஞ்சம் கொடுக்க மறுத்தான்.

செவரிகாவை சித்தப்பா கொன்றிருக்கலாம். ஆனால் கத்தியால் சிறிது காயம் ஏற்படும் வண்ணமே குத்தினான். இந்தச் செய்தி சிறை அதிகாரிக்குத் தெரிந்ததும் ஓடோடியும் வந்தான். செவரிகாவிடம் தந்தையின் அன்புடன் பேசினான். மருத்துவ மனைக்கு நடந்துவர முடியுமா? இல்லை, வண்டி அழைத்துவரச் சொல்லட்டுமா என்று கேட்டான்.

செவரிகாவோ ''ஒன்றும் வேண்டாம். எனக்கு ஒன்றும் ஆபத்தில்லை. சிறிது காயம்தான் ஏற்பட்டது'' என்றான். மருத்துவமனைக்குச் செல்ல அவன் விரும்ப வில்லை.

''உனக்கு ஒன்றும் தெரியாது. பிறகுதான் உனக்கு ஏற்பட்ட காயம் அபாயகரமானது என்று தெரியவரும் வா, என்னுடன்.''

செவரிகாவை அழைத்துச் சென்று பரிசோதனை செய்தான். ஆனால் காயம் அபாயகரமானது இல்லை என்று தெரிந்தது. அப்படியும் லோமாலின் சித்தப்பாவின் தண்டனைக் காலம் மேலும் நீடிக்கப் பட்டது. ஆயிரம் கசைஅடி தண்டனையும் கிடைத்தது.

கடைசியில் உயர்தர அதிகாரி வந்தார்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. பல நாட்களாக எங்கும் சுத்தம் செய்யப்பட்டிருந்தன. கைதிகள் புதிதாக மொட்டை அடிக்கப்பட்டனர். ஆடைகளும் சுத்தமாக இருந்தன. வெயில்

காலத்தில் எல்லோரும் வெள்ளை ஆடைகளே அணிவார்கள். உயர்தர அதிகாரி வருவதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன் கைதிகள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது விளக்கிக் கூறப்பட்டது. சிறை அதிகாரி பித்துப் பிடித்தவனைப் போல் அங்கும் இங்கும் திரிந்தான்.

பகல் ஒரு மணிக்கு உயர் தர அதிகாரி வந்தார். அவர் மிகவும் முக்கியமான அதிகாரி. அவருடன் பல அதிகாரிகளும் வந்தனர். ராணுவத்தைச் சேராத ஒரு அதிகாரியும் அவருடன் வந்திருந்தார். அவரிடம் உயர்தர அதிகாரி எதையோ அடிக்கடி பணிவுடன் கூறிக்கொண்டிருந்தார். அதிலிருந்து அவர் மிகவும் முக்கியம் வாய்ந்தவர் என்று தெரிந்தது.

எங்கள் சிறை அதிகாரியோ உயர்தர அதிகாரியின் பின்னால் விரைப்பாக நின்று கொண்டிருந்தான். அவர் சொல்வதை உடனே செய்யக் காத்திருப்பவனைப் போல் காணப்பட்டான். என்னை அந்த உயர்தர அதிகாரி ஏதோ கேட்டார். நான் அவரிடம் ஒரு காலத்தில் பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவனாக இருந்தேன் என்பதைக் கூறியதாக நினைக்கிறேன். அவரும் அதற்கு 'ஹூம்' என்றார். பிறகு சிறை அதிகாரியிடம் என்னுடைய நடத்தை எப்படி என்று கேட்டார்.

''திருப்திகரமாக இருக்கிறது'' என்று சிறை அதிகாரியும் சொன்னான்.

உயர்தர அதிகாரி என்னை ஒரு கணம் பார்த்துவிட்டு சிறைச் சாலையிலிருந்து வெளியேறினார். கைதிகள் திகைத்தனர். ஆனால் ஒருவருக்குக் கூடத் திருப்தி ஏற்படாமல் போகவில்லை. சிறை அதிகாரியின் மீது குறை சொல்ல சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. சிறை அதிகாரியும் அதற்கு இடம் கொடுக்காமல் நடந்து கொண்டான்.

# 16

சிறைச் சாலையின் வேலைகளுக்காக வாங்கிய குதிரை, உயரிய அதிகாரியின் வருகையை விட கைதிகளுக்கு முக்கியமானதாகி விட்டது. தண்ணீர் எடுத்து வரவும், குப்பை கூளங்களைக் கொண்டு அப்புறப்படுத்தவும் குதிரை தேவைப்பட்டது. அந்தக் குதிரையைப் பாதுகாத்துவரும் பொறுப்பு ஒரு கைதியிடமே விடப்பட்டிருந்தது. அவன் காவலுடன் குதிரையை ஓட்டிச் செல்வான். குதிரைக்குக் காலையிலிருந்து இரவு வரை ஏராளமான வேலை இருந்தது. முன்பு பல ஆண்டுகளாக ஒரு குதிரை இருந்தது. அது நல்ல குதிரை. ஆனால் கிழமாகி விட்டது. மகான் பீட்டரின் நாளைக்கு முன் ஒரு நாள் காலை தண்ணீர் பைகளைச் சுமந்து வரும்போது அது கீழே விழுந்தது. சில வினாடிக்குள் அது இறந்து விட்டது. சிறையிலிருந்த ஒவ்வொருவரும் அதற்காக வருத்தப்பட்டார்கள். சர்ச்சை செய்தார்கள். குதிரையை குறித்தே பேசிக் கொண்டிருந்தார்கள்.

எங்கள் பிராணி மருத்துவர் தம்மாலானதைச் செய்து பார்த்தார். ஆனால் அதை மீண்டும் உயிர்ப்பிக்க இயலவில்லை. உப்பிய வயிறுடன் தரையில் கிடந்த அப்பிராணியை ஒவ்வொரு கைதியும் தொட்டுப் பார்ப்பதை தம் கடமையாகக் கருதினர். கடவுளின் இந்தச் செயலை உடனே அதிகாரிக்குத்தெரிவித்தார்கள். சிறை அதிகாரியும் வேறு குதிரை ஒன்றை வாங்கக் கட்டளையிட்டார். விற்பனைக்குத் தயாராக இருந்த குதிரைகள் மகான் பீட்டரின் நாள் அன்று அழைத்து வரப்பட்டன. அச்சமயம் கைதிகளாகிய நாங்கள் அனைவரும் வெளி முற்றத்தில் கூடியிருந்தோம். குதிரையை வாங்கும் பொறுப்பு கைதிகளிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது. இருநூற்றி ஐம்பது பேர்களில் சிலர் குதிரைகளைப் பற்றி நன்கு அறிந்தவர்களாக இருந்தார்கள். நகரத்தைச் சேர்ந்தவர்களும், பல குதிரை வியாபாரிகளும் குதிரைகளைச்

சோதனைக்காகக் கொண்டு வந்திருந்தனர். கைதிகள் பொறுமை இழந்து எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். குழந்தைகளைப் போல் அவர்கள் உணர்ச்சி வசமாகியிருந்தனர். சுதந்திரமான மக்கள் தங்களுக்குத் தேவையான குதிரையைத் தேர்ந்தெடுத்து அதற்கான பணத்தை அவர்களே கொடுப்பது போன்ற எண்ணம் ஏற்பட்டிருந்தது. பல குதிரைகள் பயனற்றது என்று தள்ளிய பிறகு ஒன்றைத் தேர்ந்தெடுத்தார்கள். குதிரை வியாபாரிகள் இதைக் கண்டு ஆச்சரியமடைந்து காவலாளிகளின் ஆதரவைப் பெற அவர்களை உற்றுப் பார்த்தார்கள். மொட்டைத் தலையுடன் கூடிய இருநூற்றி ஐம்பது பேர் கொண்ட விலங்குகள் பூட்டப்பட்ட கூட்டத்தினர் சிறைச் சாலையையே தம் இல்லமாகக் கருதியிருந்தனர். அவர்களுடைய உரிமையில் இது வரை யாருமே குறுக்கிட்டது கிடையாது என்பதை அவர்கள் உணர்ந்தனர்.

குதிரையைத் தேர்ந்தெடுப்பதில் எக்காரணத்தாலோ இரண்டு கட்சிகள் ஏற்பட்டன. எங்கள் சிறைச் சாலையில் இரண்டு பிராணி மருத்துவர்கள் இருந்தனர். ஒருவன் குலிகாவ். இவன் தன் சுய முயற்சியிலேயே பிராணி மருத்துவனானான். மற்றொருவன் சைபீரியாவைச் சேர்ந்த குடியானவன் யோவ்கின். இவன் வஞ்சகமான உள்ளமும், ஒரு சமயம் குதிரைகளைத் திருடுபவனாகவும் இருந்தவன். எங்கள் சிறைச் சாலைக்கு இவன் வருவதற்கு முன் குலிகாவ்தான் சிறந்த பிராணி மருத்துவனாக இருந்தான். இவனுக்கு நகரத்தில் அதிக வரவேற்பு இருந்தது. நகரத்தில் படித்துப் பட்டம் பெற்ற சிறந்த பிராணி மருத்துவர் இருந்தும் எதனாலோ மக்கள் குலிகாவிடம் நம்பிக்கை வைத்திருந்தார்கள். யோவ்கின் வரும் வரை அவனே நகரத்தில் பெரிய பிராணி மருத்துவனாக விளங்கி வந்தான். பிறகோ யோவ்கினிக்கே நல்ல செல்வாக்கு ஏற்பட்டது. அவனுக்கு பிராணி மருத்துவம் செய்வதற்காகப் பணமும் கிடைத்து வந்தது. அவனுடைய பணம் அவனுக்கு ஒரு தனி மதிப்பை அளித்தது. அவனுக்கு வயது அதிகமாகியும் நல்ல அழகனாக இருந்தான். முன்னாள் பிரபுக்களான எங்களிடம் அவன் மிகுந்த மரியாதையுடன் நடந்து கொண்டான். அவனுக்கு நல்ல ஆடைகளை அணிவித்து பீட்டர்ஸ்பர்க் நகரச் சங்கத்தில் கொண்டு நிறுத்தினாலும் அவனை பிரபுக்களின் கூட்டத்தைச் சேர்ந்தவனாகவே கருதுவார்கள்.

தொழிலில் ஏற்பட்ட பொறாமைக் காரணமாக குலிகாவை ஆதரிக்கும் ஒரு கூட்டமும், யோவ்கினுக்காக ஒன்றும் இருந்தது. இந்த இரு கூட்டமும் தேர்ந்தெடுக்கப்பட்ட குதிரையையும், தாங்கள் ஆதரிப்பவரையும் குறித்துச் சிறிது நேரம் ஏசிப் பேசிக்

கொண்டார்கள். கடைசியில் குதிரையை வாங்க உடன் பட்டார்கள். விலையைக் குறித்து கைதிகள் பேரம்பேசினர். குதிரைக்கு முப்பது ரூபிள் விலை கேட்டான் வியாபாரி. கைதிகளோ இருப்பத்தைந்து ரூபிள் தரலாம் என்றனர். இதைக் கண்ட வியாபாரி ''நீங்கள் என்ன உங்கள் கையிலிருந்தா பணம் கொடுக்கப் போகிறீர்கள்?'' என்று ஆத்திரமாகக் கேட்டான்.

கடைசியாக இருபத்தி எட்டு ரூபிளுக்கு விலை ஒப்புக் கொள்ளப்பட்டது. இந்த விவரம் சிறை அதிகாரிக்குத் தெரிவித்தார்கள். அவனும் உடனே குதிரையை வாங்கி வரும்படி சொன்னான். வாங்கிய குதிரையை வரவேற்க ரொட்டியும் உப்பும் கொண்டுவரப் பட்டது என்பதைச் சொல்லத் தேவையில்லை. தகுந்த முறையுடன் குதிரையை லாயத்திற்கு அழைத்துச் சென்றார்கள்.

குதிரையைப் பாதுக்காத்து அதை வேலை வாங்கும் கைதி மிகவும் நல்லவன். அவன் குதிரையுடன் போவான். அதுவும் அவன் சொல்வது போலவே நடந்து கொள்ளும்.

கைதிகள் அனைவருமே குதிரையிடம் அன்போடு நடந்து கொண்டார்கள். அதற்குத் தின்பதற்காக ரொட்டியும், வேறு பண்டங்களையும் கொண்டு கொடுப்பார்கள். அவர்கள் கொடுப்பதைத் தின்று குதிரையும் தலையை அசைக்கும். அச்சமயம் அது ''உன்னை எனக்குத் தெரியும். நான் நல்ல குதிரை நீயும் நல்ல மனிதன்'' என்று சொல்வது போலத் தோன்றும்.

எனக்கும் அந்தக் குதிரைக்கு ரொட்டியும் உப்பும் கொடுக்க அதிக விருப்பம்தான். அது என் கையிலுள்ள ரொட்டியையும் உப்பையும் தின்னும் போது பேரானந்தமடைவேன்.

கைதிகள் அனைவருமே பொதுவாகப் பிராணிகளை நேசித்தனர். அவர்கள் விருப்பத்திற்கு இணங்கியிருந்தால் சிறைச் சாலையில் ஏராளமான பிராணிகள் இருக்க முடியும். அவர்களுடைய முரட்டுத்தனத்தை இது போன்ற செயல்களைவிட வேறு எதுவும் நல்ல முறையில் மாற்ற இயலாது என்றே நான் எண்ணுகிறேன். ஆனால் சிறைச் சாலையினுள் எந்த ஒரு பிராணியையும் வளர்க்க அனுமதிப்பதில்லை. சட்டமோ, சூழ்நிலையோகூட அதற்கு இடம் கொடுக்காது.

அப்படியும் என் சிறைவாச காலத்தில் சில பிராணிகளைச் சிறைச்சாலையினுள் கொண்டு வந்து வளர்த்தார்கள். குதிரையைத் தவிர எங்களிடம் நாய், வாத்து, வஸகா என்ற ஒரு வெள்ளாடும் இருந்தன. சில காலம் ஒரு கழுகும் எங்களிடம் இருந்தது.

எங்கள் சிறைச் சாலையின் நிரந்தரமான நாய் வுரிக். அது சிறந்த பிராணி. எனக்கு அது நெருங்கிய நண்பனாக இருந்து வந்தது. அதை யாரும் சரியாகக் கவனிக்காமல் இருந்த போதும் அது எப்படியோ அங்கு வசித்து வந்தது. சமையலறையில் கிடைப்பதைக் கொண்டு உயிர் வாழ்ந்த அதை ஒவ்வொருவரும் தங்களுடையதாகவே கருதி வந்தனர். எல்லோரிடத்திலும் அது நன்கு பழகும். புதிதாக வருபவர்களையும் வாலை ஆட்டி வரவேற்கும். அதை ஒரு வழிக்குத் திருப்பிக் கொண்டு வர பல ஆண்டுகள் முயற்சித்தேன். அதற்குப் பதிலாக அது அளவு மீறி என்னை நேசித்தது. இதைத் தவிர பலகா, குல்திகா என்ற இரண்டு நாய்களும் இருந்தன. ஒரு நாள் வேலைக்குச் சென்று திரும்பும் போது குல்திகாவை எடுத்து வந்தேன். அப்போது அது சிறு குட்டியாக இருந்தது.

பலகா ஒரு விசித்திர பிராணி. அதன் கழுத்தின் மீது வண்டி ஏறி விட்டது. அதனால் அது நடப்பதே வேடிக்கையாக இருக்கும். அச்சமயம் பார்த்தால் இரண்டு நாய்கள் போவது போலத் தோன்றும்.

குல்திகா உடல் முழுதும் மயிர் அடர்த்தியாக வளர்ந்திருக்கும். அதனால் அது திடீரென்று ஒரு நாள் காணாமல் போய்விட்டது. எங்கு தேடியும் அது அகப்படவில்லை. இரண்டு வாரங்களுக்குப் பிறகு அதற்கு என்ன நேர்ந்தது என்பதை அறிந்தேன். நெஸ்டரோவா என்பவனுக்கு குல்திகாவின் தோலின் மீது விருப்பம் ஏற்பட்டது. அதை அவன் கொன்று அதனுடைய தோலினால் ஒரு அதிகாரியின் மனைவிக்குப் பாத அணிகள் தைத்துக் கொடுத்து விட்டான். பாத அணிகளை அவன் தயாரித்து முடித்ததும் என்னிடம் காட்டினான்.

கைதிகளில் பலர் தோல் பதனிடுவதில் சிறந்தவர்களாக இருந்தார்கள். அழகான நாய்களைக் கொண்டு வந்தவரிடமிருந்து திருடிக் கொன்று தோலை உரித்து எடுத்து விடுவார்கள். ஒரு நேர்த்தியான கருப்பு நாயை ஒரு கைதி அழைத்து வந்தான். அதை ஒரு வேலைக்காரன் திருடிக் கொண்டு வந்து அவனுக்கு முப்பது கோபக்குகளுக்கு விற்றிருக்கிறான். இவ்விதம் வாங்கப்பட்ட பிராணிகளைக் கொன்று தோலைஎடுத்துக் கொண்டு, தசையைக் குப்பையில் போட்டு விடுவார்கள்.

எதிர் பாராத வகையில் சில வாத்துகள் எங்களுடன் வந்து வசிக்கத் தொடங்கின. அவை யாருக்குச் சொந்தமானவை என்று எனக்குத் தெரியாது. சில காலம் வரை அவை கைதிகளுக்கு மகிழ்ச்சியை அளிப்பவையாக இருந்தன. அவற்றின் செயல்கள் நகர மக்களின் கவனத்தையும் கவர்வதாக இருந்தன. கைதிகள் வேலைக்குச் செல்லும் போது அவை பின் தொடர்ந்து வரும். அவர்கள் வேலை செய்யும் போது அவை இரை தேடச் செல்லும். கைதிகள் திரும்பி

வரும் சமயம் அவர்களுடனேயே நடந்து வரும். வாத்துகளின் செயலைக் கண்டு நகரமக்கள் அவற்றிற்குத் தீனிவாங்கிப் போடும் படி காசு கொடுப்பார்கள். எங்களிடம் அவ்வளவு அன்புடன் பழகி வந்தும் ஒரு பண்டிகை தினம் அவற்றைக் கொன்று கரி சமைத்து விட்டார்கள்.

ஒரு முக்கியமான சூழ்நிலை ஏற்பட்டிராதிருந்தால் எக்காரணத்தைக் கொண்டும் எங்கள் வெள்ளாடு வசகாவைக் கொன்றே இருக்க மாட்டார்கள். அதை யார் சிறைச்சாலைக்கு அழைத்து வந்தார்களோ தெரியாது. திடீரென்று ஒரு வெள்ளாட்டுக் குட்டி எங்கள் சிறைச்சாலையினுள் இருப்பதைக் கண்டோம். சில நாட்களுக்குள்ளாகவே எல்லோரும் அதை நேசிக்கத் தொடங்கினர். அதை எங்களுடன் வைத்திருக்க, ''நமக்குக் குதிரைலாயம் இருக்கிறது அல்லவா? குதிரையுடன் இந்த ஆடும் இருக்கட்டும்'' என்றனர்.

வெள்ளாடு சற்று வளர்ந்ததும் அதற்குக் கொம்புகள் முளைத்தன. சில நாட்களுக்குள்ளாகவே கொம்புகள் கூர்மையாக வளர்ந்தன. அது ஒவ்வொரு கைதியிடத்திலும் ஓடி விளையாடி, முட்டிச் சண்டைக்குத் தயாராக இருப்பது போல் தலையைக் குனிந்து கொண்டு விரைப்பாக நிற்கும்.

ஆடு மேலும் வளர்ந்ததும் அதற்கு எங்கள் பிராணி மருத்துவர்கள் காயடித்தனர். அது முதல் ஆடு கொழுத்து வளரத் தொடங்கிற்று. நாங்கள் வேலை செய்ய சிறைச் சாலையை விட்டுச் செல்லும் போது ஆடு எங்களுக்கு முன்னால் ஒரு சிப்பாயைப் போல அடி எடுத்து வைத்து நடந்து போய்க்கொண்டிருக்கும். எங்கள் வசகாவை கைதிகள் மாத்திரமல்ல, ஊர் மக்கள் அனைவருமே அறிவர். அதற்குக் கொம்புகள் நன்றாக வளர்ந்திருந்ததால் கைதிகளில் சிலர் மலர்களைக் கொய்து தொடுத்து அதன் கொம்பிலும் கழுத்திலும் சுற்றி விடுவார்கள். அந்த ஒரு சம்பவம் மாத்திரம் நடைபெறாதிருந்தால் எங்கள் வசகா பல ஆண்டுகள் உயிருடன் இருக்கலாம்.

ஒரு நாள் வழக்கம் போல நாங்கள் வேலைக்குச் செல்லும் போது வசகாவும் முன்னால் சென்று கொண்டிருந்தது. அது வரை சிறை அதிகாரிக்கு வசகா இருப்பதே தெரியாது. எங்களுக்கு முன்னால் ஆடு செல்வதையும், அதை ஊர் மக்கள் வேடிக்கை பார்ப்பதையும் அவன் பார்த்து விட்டான். உடனே ஆத்திரமடைந்து ''இது யாருடைய ஆடு?'' என்று கேட்டான். ''பிறகு சிறைச் சாலையினுள் ஒரு ஆடு இருப்பதா? உடனே இதைக் கொன்று விடுங்கள்''என்றான். அன்றே அதைக் கொன்று தோலை உரித்து கடைத்தெருவிற்கு எடுத்துச் சென்று விற்றார்கள். அதன் கறி வெகு சுவையாக இருந்தது என்று சொல்லத் தேவையே இல்லை.

ஒரு கழுகு எங்களுடன் சில காலம் இருந்தது. அது அடிபட்டு ஒரு சிறகு வலிமை இழந்த நிலையில் எங்கள் சிறைச்சாலையினுள் வந்து சேர்ந்தது. அதைக் கைதிகள் உன்னிப்பாக கவனித்தார்கள். அதனால் பறக்க முடியவில்லை. அதற்கு உதவி செய்யச் சென்றவர்களையும் நம்பவில்லை. மனிதர்களைக் கண்டதும் அது பயந்து விடுதியினுள் சென்று மறைந்து கொண்டது. அதை வெளியே இழுத்து வர வுரிக் நாயைக் கூட ஏவினோம். ஆனால் அதுவோ அந்த நிலையிலும் தன் சுதந்திரத்தை இழக்க விரும்பவில்லை. நாயை அருகில் கூட நெருங்கவிடவில்லை. எப்படியோ அதற்கு ஆகாரம் கொடுத்துக் காப்பாற்றி வந்தோம். அதுவும் தன் இடத்தை விட்டு வெளியே வராமல் வாழ்ந்து வந்தது சில நாட்களில்அது குணமடைந்தது. அப்போதும் அது யாரும் இல்லாத நேரத்திலேயே தன் இடத்தை விட்டு வெளியே வரும். யாரையாவது பார்த்துவிட்டால் உடனே ஓடிச் சென்று மறைந்து விடும். அதற்கு மாமிசமும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றினோம்.

மெள்ள எல்லோருக்கும் அந்தக் கழுகு மீது அனுதாபம் ஏற்பட்டது. இயற்கைக்கு மாறாக அந்தக் கழுகு அங்கேயே இருப்பதைக் கண்டு ஒரு வேளை அது மடிந்து விடுமோ என்று அஞ்சினர். அப்படியானால் வெளியில் சுதந்திரமான இடத்திற்குச் சென்று மடியட்டும் என்று முடிவு செய்தனர். உடனே அதை மிகுந்த துன்பத்துடன் பிடித்தனர். அப்போதும் அது அடங்கி நடக்கவில்லை. அதைப் பிடித்தவனை அலகினால் கொத்தி, கால் நகங்களால் பிராண்டத் தொடங்கிற்று. ஆனால் அது தீங்கிழைக்காத வண்ணம் கால்களையும், தலையையும் பிடித்துக் கொண்டு முற்றத்திற்கு வந்தான். வானத்தை நோக்கி அதை விசி எறிந்தான். கழுகோ சிறகை அடித்துப் பறக்கத் தொடங்கிற்று. அவ்வளவு காலம் தங்க இடமும், உண்ண உணவும் கொடுத்துக் காப்பாற்றிய எங்களையும் சிறைச் சாலையையும் ஒரு முறைகூடத் திரும்பிப் பார்க்க வில்லை.

''பார்த்தீர்களா? ஒரு முறைகூட நம்மைத் திரும்பிப் பார்க்காமல் போகிறது'' என்றான் ஒரு கைதி.

''திரும்பி வந்து உனக்கு நன்றி கூறவேண்டும் என்று எதிர் பார்க்கிறாயா?'' என்றான் மற்றொரு கைதி.

''இல்லை. அது தன் சுதந்திரத்தை உணர்ந்து கொண்டது.''

''ஆமாம். சுதந்திரம், சுதந்திரம்தான்!''

''அது எங்கோ சென்று மறைந்துவிட்டது'' என்று வானத்தைப் பார்த்துக் கொண்டே சொன்னான் ஒரு கைதி.

''ஏன் கூட்டமாக நிற்கிறீர்கள்? உள்ளே போங்கள்'' என்று அதட்டினான் காவலாள். நாங்கள் மௌனமாகச் சென்றோம்.

# 17

முதலில் ஒன்றைக் கூறிவிட்டு மற்றவற்றை விவரிக்க விரும்புகிறேன். அலக்ஸாண்டர் என்ற வாலிபன் கடன் தொல்லை தாங்காமல் சொத்து முழுவதையும் கைப்பற்றத் தகப்பனையே கொன்றதாக முன்பு கூறியிருக்கிறேன். நகரத்திலுள்ள அவனைத் தெரிந்தவர்களும் அவ்விதமே கூறினர். கைதிகளும் அவர்கள் கூற்றை ஆதரிப்பது போல் பேசினர். ஆனால் அலக்ஸாண்டர் மாத்திரம் ஒப்புக் கொள்ளவில்லை. வழக்கு நடக்கும் போதும் அவன் தன்னைக் குற்றவாளி என்று ஒப்புக்கொள்ளவே இல்லை. மேலும் அவன் சிறையில் இருந்த போது உற்காசத்துடனேயே காணப்பட்டான். முட்டாளாகவும், சிறுபிள்ளைத் தனத்துடனுமிருந்த அவனிடம் ஒரு கொடுமையையும் காணவில்லை. அவன் குற்றம் செய்திருப்பான் என்றும் நம்பமுடியவில்லை.

சில நாட்களுக்கு முன் சைபீரியாவிலிருந்து ஒரு செய்தி கிடைத்தது. அதில் ''ஒரு பாபமும் அறியாத வாலிப அலக்ஸாண்டர் பத்து ஆண்டுகள் கடின தண்டனையை அனுபவித்தான். அவன் நிரபராதி என்பதை நீதிமன்றம் மூலமாக நிர்ணயம் செய்யப்பட்டது. உண்மையான குற்றவாளி குற்றத்தை ஒப்புக் கொண்டு விட்டான். துரதிர்ஷ்டம் பிடித்த அலக்ஸாண்டர் நிரபராதி என்று விடுதலை செய்யப்பட்டான்' என்று குறிப்பிட்டிருந்தது.

இவ்விதம் நடக்கலாம் என்பதற்குப் போதிய காரணங்கள் இருக்கின்றன. இதன் மூலம் பல பயங்கரமான உண்மைகளும் வெளியாகலாம்.

இனி நம் மூலக் கதைக்கு வரலாம்.

கடைசியில் எனக்குச் சிறை வாழ்க்கை பழக்கப்பட்டு விட்டதாகக் கூறினேன். ஆனால் அந்தக் கடைசி நேரம் மிகவும் மனதை வாட்டுவதாகவும் மெள்ளவும் வந்தது. அதற்குச்

சுமார் ஒரு ஆண்டு காலம் பிடித்தது. அந்த ஒரு ஆண்டு என் வாழ்க்கையில் மிகவும் துன்பமயமானது. இந்த ஒரு காரணத்தாலேயே சிறை வாழ்க்கையின் சம்பவங்கள் ஒவ்வொன்றும் என் மனத்திரையில் நிலையாகப் பதிந்து விட்டது. எனக்கு அங்கு வாழ்ந்த காலத்தின் ஒவ்வொரு கணமும் நன்கு நினைவிருக்கிறது.

மற்ற கைதிகள் எந்த வகையிலும் வாழ்க்கையை நல்ல விதமாகக் கடத்தவில்லை என்று கூறியிருக்கிறேன். அந்த ஒரு ஆண்டு காலத்தில் நான் பல முறை ''அவர்கள் என்ன நினைக்கிறார்கள்? அவர்களுக்கு சிறை வாழ்க்கை பழக்கப்பட்டுவிட்டதா? உண்மையிலேயே அவர்கள் எல்லாவற்றையும் விட்டு விட்டனரா?'' என்று எண்ணி ஆச்சரியமடைந்திருக்கிறேன். அவர்களைக் குறித்து அறிய நான் மிகவும் ஆவலாக இருந்தேன். அவர்களோ பிரயாணத்தின் நடுவில் ஒரே ஒரு நாள் அங்கு தங்க வந்தவர்களைப்போல் நடந்து கொண்டார்கள். ஆயுள் தண்டனை பெற்றவர்கள்கூட அமைதியின்றி, ஒரு அற்புதம் நிகழலாம் என்று கனவு கண்டு ஏங்கிக் கொண்டிருந்தனர். மறைமுகமாக அமைதியின்றியிருப்பதை விவரிக்க முடியாவிட்டாலும் பார்த்ததுமே தெளிவாக உணரலாம்.

சிறைச் சாலைக்கே பிரத்யேகமான அதை நான் பார்த்ததுமே உணர்ந்து கொண்டேன். பகல் கனவு காண்பதைப் பார்த்ததுமே யாரும் தெரிந்து கொண்டு விடலாம். பகல் கனவு காண்பதால் அவர்கள் உடல் நலம் பாதித்தது. முகமும் உப்பி சோகை பிடித்தது போலத் தோன்றிற்று. இது எனக்குத் திகைப்பை உண்டு பண்ணிற்று. ஆனாலும் பகல் கனவு காண்பது அதிகரித்து வந்ததே தவிர அவர்களால் அதைக் கைவிட முடியவில்லை. சிலர் இதற்கு மறைமுகமாக வெட்கப்பட்டார்கள். பொறாமைக்காரர்களாக உள்ளவர்கள் பகல் கனவு காண்பவர்களாகவும், ஆவல் நம்பிக்கை ஆகியவைகளையுடையவர்களாகவும் இருப்பார்கள் என்று நினைக்கிறேன். கள்ளங்கபடமற்றவர்களாகவும் எளிமையான உள்ளம் படைத்தவர்களாகவுமுள்ளவர்களை முட்டாள் என்று கருதி வெறுத்தார்கள்.

ஒரு சிலர்தான் தங்கள் நம்பிக்கைகளை மறைமுகமாக வளர்த்து வந்தனர். இவர்களைத் தவிர மற்றொரு வகையானவர்களும் இருந்தார்கள். இதற்கு உதாரணமாக ஸ்டரடோயாவைச் சேர்ந்த வயதானவனை எடுத்துக் கொள்ளலாம். இப்படிப்பட்டவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். அவர்கள் தம் மனப் புயலை மாற்றச் சிலவழிகளைப் பின்பற்றினர். பிரார்த்தனையும் மதசம்பந்தமான காரியங்களில் தன்னையே தியாகம் செய்து கொள்ள வேண்டும் என்ற

எண்ணமும் அவர்களுக்கு உதவி புரிந்தன. வேத நூலை ஒருவன் படிப்பதைக் கண்டால் கைதிகள் பொறாமைப்படுவார்கள். இதை முன்பு கூறியிருக்கிறேன். இத்தகைய உள்ளம் படைத்த ஒருவன்தான் சிறைச்சாலை அதிகாரியின் மீது செங்கல்லை விட்டெறிந்தான். எல்லா நம்பிக்கைகளையும் இழந்த அவன் இயற்கைக்கு மாறான வகையில் தியாகம் செய்ய முனைந்தான். அதற்காகவே அவன் அதிகாரியின் மீது கல்லைவிட்டெறிந்தான். கெட்ட நோக்கத்தோடு நான் கல்லை எறியவில்லை. துன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்ற எண்ணத்திலேயே இவ்விதம் செய்ததாகக் கூறினான். உடல் அனுபவிக்கும் துன்பத்தால் அவன் உள்ளத்திற்கு எப்படி நன்மை கிடைக்குமோ எனக்குத் தெரியாது. நம்பிக்கை, குறிக்கோள் ஆக இரண்டும் இல்லாதவனே இருக்க முடியாது. அப்படி இல்லாதவன் துன்பம் தாங்காமல் கொடியவனாகிறான். எல்லாருமே சிறைச் சாலையிலிருந்து விடுதலை பெறவும், சுதந்திரமாக வாழவும் ஏங்கினர்.

இங்கு நான் கைதிகளைப் பாகுபடுத்திக் காட்ட முயற்சிக்கிறேன். உண்மையில் அது இயலுமா? உண்மையானது பல சிறு வேற்றுமைகளையும் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. எங்களுக்கென்று ஒரு தனிப்பட்ட வாழ்க்கை இருக்கிறது. இது வெளிப்படையானதல்ல. ஆனால் மனதுள்ளேயே மறைந்திருக்கும் வாழ்க்கை அது.

சிறைச் சாலைக்கு வந்தபுதிதில் இந்த ஆத்மீக வாழ்க்கையை வெளித் தோற்றத்தின் மூலம் அறிய இயலவில்லை என்பதைப்பற்றிச் சிறிது குறிப்பிட்டிருக்கிறேன். ஒரு சமயம் நான் சக கைதிகளை வெறுக்கவும் தொடங்கினேன். அவர்களைக் கண்டு பொறாமையடைந்ததுடன் என்னுடைய துரதிர்ஷ்டத்திற்காக என்னையே நொந்து கொண்ட நாட்களும் உண்டு. அவர்கள் ஒரு இனமாகவும், சகாக்களுடனும், ஒருவர் மற்றவரை அறிந்தவர்களாகவும் கசை அடி, துப்பாக்கி மட்டை அடி ஆகிய தண்டனைகளை அனுபவித்தும் ஒவ்வொருவரும் பலாத்காரமாகப் பிணைக்கப்பட்ட என்னிடமிருந்து விலகிச் செல்ல எண்ணினர். இது எனக்குப் பொறாமையை உண்டு பண்ணிற்று.

எங்கள் சிறைச் சாலையில் எல்லாக் கைதிகளும் ஒரேவிதமானவர்கள் என்று கூறுவது தவறு. எல்லா கைதிகளும் மனித இனம் தான். 'மனித இனம் முழுவதும் சமம்தான்' என்ற எண்ணம் சிறந்ததாக இருக்கலாம். நடைமுறையில் அது பலவற்றை கண்களுக்குப் புலப்படாமல் மறைத்து விடுகிறது. அதை அனுபவமே

எடுத்துக் காட்டும். பண்பட்டவனுடைய உணர்ச்சிகள் சிறந்ததாகவோ அல்லது அவர்களுடைய ஆத்மீக வளர்ச்சி உன்னதமானது என்றோ நான் குறிப்பிடவில்லை. ஒருவருடைய உள்ளம், அதன் உணர்ச்சிகள் ஆகியவற்றை பாகுபடுத்தி இத்தன்மையது என்று தீர்மானிப்பது மிகவும் கடினம். இங்கு கல்வி ஒரு அளவுகோலே அல்ல. துன்பம் அனுபவிப்பவர்களில் ஒன்றுமறியாதவர்களாகவும், அழுத்தப்பட்டவர்களாகவும் உள்ளவர்களின் உணர்ச்சிகள் மேன்மையானதாகக் காணப் படுகின்றன என்பதை ஒப்புக் கொள்கிறேன். சிறைச்சாலையினுள் ஒரு கைதியை நான் பலகாலமாக அறிந்திருக்கலாம். அவனை ஒரு மடையன் என்று வெறுத்துமிருக்கலாம். ஆனால் சந்தர்ப்பம் வந்தபோது உன்னதமான உணர்ச்சிகளை வெளிப்படுத்தி யிருக்கிறான். சில சமயங்களில் நம் எண்ணத்திற்கு மாறுபட்டும் சம்பவங்கள் நடைபெறலாம்.

கல்வியானது சில சமயங்களில் காட்டுமிராண்டித்தனம், குறைகூறும் குணம் ஆகியவற்றை ஏற்படுத்துகிறது. இதை நான் முன்பும் பார்த்திருக்கிறேன். இதற்கு என் மனதினுள் மன்னிப்பு என்ற சொல்லே தென்படவில்லை.

மாறுபட்ட பழக்க வழக்கங்கள், உணவு, மற்றும் சிலவற்றை வாழ்க்கையில் உயர்ந்த நிலையிலிருந்த ஒருவனால் தாங்குவது மிகவும் கடினமானது. அவன் சிறைச்சாலையில் சுகபோகங்களுடன் இருப்பதைவிடச் சுதந்திரமாகப் பட்டினி கிடந்து சாகவும் தயாராக இருப்பான். உறுதியான உள்ளம் படைத்தவனுக்கு எத்தகைய மாறுபட்ட வாழ்க்கையும் ஒரு பொருட்டே அல்ல. மிகவும் மென்மையானவர்கள் கூட கடினமான வேலைகளைச் செய்து மோசமான ரொட்டியைத் தின்று இங்கு வாழ்ந்து வருகிறார்கள். இது அவர்களுக்குப் பழக்கமாகியும் விடலாம்.

மிகவும் முக்கியமானது இதுதான். சாதாரண நிலையிலுள்ள ஒருவன் தண்டனை பெற்றுச் சிறைச் சாலையினுள் வந்த சில மணி நேரத்திற்குள் அதைத் தன் இல்லமாகவே கருதிவிடுகிறான். சிறையிலுள்ள ஒரு இனத்தைச் சேர்ந்தவனாகவே மாறிவிடுகிறான். எல்லோரும் அவனை உணர்ந்து கொள்கின்றனர். அவனும் அனைவரையும் புரிந்து கொண்டு விடுகிறான். அவனை அனைவரும் தம் இனத்தைச் சேர்ந்தவனாகவே கருதுகிறார்கள். ஆனால் உயர்ந்த நிலையிலிருந்த ஒருவன் நிலைமையோ அடியோடு மாறுபடுகிறது.

அவன் எவ்வளவு நல்லவனாகவும், பெருந்தன்மை வாய்ந்தவனாகவும் இருந்த போதிலும் பல ஆண்டுகளுக்குப்

பின்னும்கூட அவனை மற்றவர்கள் வெறுக்கின்றனர். அவனைப் புரிந்து கொள்ளாதது மாத்திரமல்ல, நம்பவும் மறுக்கின்றனர். எந்தக் காலத்திலும் அவர்களுடைய சகாவாக அவன் ஆகவே முடியாது. கடைசியில் அவன் தனியனாகவும், அவர்களுக்குப் புதியவனாகவும் இருந்து இந்த தனிமைக்காக மனதினுள்ளேயே புழுங்க வேண்டியதுதான். இந்த நிலை மற்றவர்களால் ஏற்படுவதல்ல. அவர்களைச் சேர்ந்தவனாக அவன் இல்லாததே இதற்குக் காரணமாகும். இதைவிட மோசமான ஒன்று இருக்கவே முடியாது. ஒரு குடியானவனை ஒரு சிறையிலிருந்து மற்றொன்றிற்கு அனுப்புகிறார்கள். அவன் அங்கு ரஷ்யாவின் குடியானவன் ஒருவனைக் காண்கிறான். அவனுடன் சில மணி நேரத்திலேயே கலந்து பழகி, தன் குடிசையில் வசிப்பதைப் போலவே இருக்கத் தொடங்குகிறான். ஆனால் ஒரு சீமானின் நிலையோ முற்றிலும் மாறுபட்டது. திடீரென்று அவனுடைய உரிமைகள் அனைத்தும் பறிக்கப்பட்டதும் அவன் சாதாரண மக்களிடமிருந்து அடியோடு பிரிக்கப்பட்டதை உணர்கிறான். அவன் பல ஆண்டுகள் அரசாங்கத்தில் ஊழியம் செய்திருக்கலாம். அச்சமயங்களில் சாதாரண மக்களைத் தினமும் சந்தித்து அவர்களுடைய நன்மையைக் கோருபவனாகவும், தந்தையைப் போலும் நடந்து கொண்டிருக்கலாம். அப்படியும் அவனால் சாதாரண மக்கள் எத்தன்மையினர் என்பதை அறிந்து கொள்ளாமல் போயிருக்கலாம். திடீரென்று மாறுபட்ட நிலையைக் காணும்போது அவன் நடந்து கொண்ட முறைகள் வெறும் பாலைவனமாகத் தோன்றலாம். இந்த வரிகளைப் படிப்பவர்கள் நான் மிகைப்படுத்திக் கூறுவதாக நினைக்கலாம். அவ்விதம் இல்லை. நான் உண்மையைத் தவிர வேறு எதையும் கூறவே இல்லை. மேலும் புத்தகங்களின் வாயிலாக இந்த முடிவுக்கு வரவில்லை. அனுபவமே என்னை இந்தத் தீர்மானத்திற்கு வரச் செய்தது. என்றாவது ஒரு நாள் அனைவரும் உணர்வார்கள்.

எல்லாவற்றையும் கவனிக்கத் தொடங்கிய நாளிலிருந்து சம்பவங்கள் எனக்குச் சதி செய்வதாகத் தோன்றிற்று. சிறைச் சாலைக்கு வந்த முதல் கோடைகாலம் முழுவதும் நான் தனிமையிலேயே சுற்றித் திரிந்தேன். என்னை நேசித்தவர்கள் கூட என் மனப் போக்கை உணர்ந்து பாராட்டவில்லை. நாங்கள் எக்காலத்திலும் சமமாக இருந்ததுமில்லை. ஒரு காலத்தில் பிரபுக்களாக இருந்தவர்களுடன் கலந்து பழகினேன். ஆனால் அதனால் எனக்கு ஒரு மன ஆறுதலும் ஏற்படவில்லை. எனக்கு எல்லாமே சலிப்பைத் தந்தன. அதிலிருந்து விடுபடவும் இயலவில்லை.

அதே கோடைகாலத்தில் ஜூன் மாதக் கடைசியில் ஒரு சம்பவம் நடந்தது. ஒரு நாள் கைதிகள் சிறைச் சாலையின் முற்றத்தில் வரிசையாக நிற்கத் தொடங்கினர். அப்போது பன்னிரண்டு மணி ஆயிற்று. வெப்பம் அதிகரித்தது. பிற்பகல் வேலைக்குச் செல்வதற்கு முன் நாங்கள் வழக்கமாக அந்த நேரத்தில் சிறிது ஓய்வுடன் இருப்போம். அந்தக் கணம் வரை சிறைச் சாலையினுள் என்ன நடந்து கொண்டிருந்தது என்றே எனக்குத் தெரியாது. கடந்த மூன்று நாட்களாகக் கைதிகள் ஆத்திரமடைந்திருந்தனர். இதை மாத்திரம் ஓரளவு கவனித்தேன். ஆனால் அவர்கள் அதற்கு முன்பே ஆத்திரமடைந்தும் இருக்கலாம். பிறகு சில கைதிகள் வெறுப்புடன் பேசுவதைக் கண்டேன். கடுமையான வேலை, வெப்பம் அதிகமாகவுள்ள நாட்கள், விடுதலைக் கனவுகள், குறுகிய இரவுகள் ஆகிய அனைத்தும் எங்களை அமைதியுடன் இருக்க விடவில்லை. இவை அனைத்தும் ஒன்று சேர்ந்து மோசமான உணவு என்ற வகையில் எழுச்சியை ஏற்படுத்தியிருக்கலாம். சில நாட்களாகவே சிறைச்சாலையினுள் முக்கியமாக உணவு விடுதியில் முணு முணுப்பு இருந்து வந்தது. சமையல்காரரிடம் கைதிகளுக்கு அதிருப்தி ஏற்பட்டது. ஒருவனையும் மாற்றினார்கள். ஆனால் மறுநாளே புதிய சமையல்காரனை வெளியேற்றி விட்டு பழையவனை அழைத்து வந்தார்கள்.

வேலை கடுமையாக வாங்குவதையும் உணவு மோசமாகக் கொடுப்பதையும் பற்றிக் கைதிகள் காரசாரமாகப் பேசினர். சிறை அதிகாரி மீதும் குறை சொன்னார்கள். குற்றஞ் சாட்டினார்கள். சிலர் இந்த எழுச்சியை எள்ளி நகையாடினர். இதனால் ஒரு நன்மையும் ஏற்படாது என்றனர்.

வழக்கத்திற்கு மாறாகக் கைதிகள் வரிசையாக நின்றிருப்பதைக் கண்டு காவலாளிகளின் தலைவன் பயந்து ஓடிவந்தான். விவரத்தைக் கேட்டான். கைதிகளும் பணிவுடன் சிறை அதிகாரியிடம் பேச வேண்டும் என்று கூறினர். அவன் பயந்து நடுநடுங்கி அங்கிருந்து ஓடினான். சிறை அதிகாரியிடம் விவரத்தைத் தெரிவிக்கத் தாமதிக்கக்கூடாது என்று எண்ணினான். இதைத் தவிர அவன், கைதிகள் ஏன் அதிகாரியைக் காணவிரும்புகிறார்கள் என்பதைக் கேட்கவும் இல்லை.

எந்த விபரமும் தெரியாமல் அவர்களுடன் நான் நின்றிருந்தேன். பெயர் கூப்பிடப் போகிறார்களோ என்று எண்ணினேன். காவல்காரர்கள் வந்து எண்ணிப் பார்க்காததைக் கண்டு ஆச்சரியமடைந்தேன். என் சக கைதிகளின் முகம் உணர்ச்சி

வசத்தினாலும் ஆத்திரத்தினாலும் மாறி வெளுத்திருந்தது. எல்லோரும் மௌனமாக இருந்தார்கள். நானும் அவர்களுடன் சேர்ந்து நிற்பதைக் கண்டு ஆச்சரியமடைந்தனர். அவர்கள் சொல்லவிருக்கும் குறைகளை நானும் ஆதரிக்கப் போகிறேன் என்று கருதியிருக்கலாம். ஆனால் விரைவிலேயே என் பக்கம்திரும்பி கேள்வி கேட்கத் தொடங்கினர்.

குலகாவ் வந்து என் கையைப்பற்றி ''இது உங்கள் வேலை இல்லை'' என்று கூறி வரிசையிலிருந்து என்னைப் பிரித்து அழைத்துச் சென்றான்.

அவன் முகம் வெளுத்திருந்தது. கருத்த விழிகள் மின்னின. சிறை அதிகாரி வருவதை அவன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். மேலும் அவன் என்னிடம் ''இது எங்களுடைய விவகாரம். உங்களுக்கு இதில் ஒரு சம்பந்தமும் கிடையாது. நீங்கள் எங்காவது சென்று காத்திருங்கள். சமையலறையில் உங்களைச் சேர்ந்தவர்கள் இருக்கிறார்கள். அவர்களுடன் போயிருங்கள்'' என்றான்.

போலந்துக்காரர்களும், மற்றும் பலரும் அங்கே இருந்தார்கள். ஒன்றும் தோன்றாத நிலையில் நான் சமையலறையினுள் சென்றேன். எனக்குப் பின்னால் குறைகளைத் தெரிவிக்க நின்றிருந்த கைதிகள் கேலியாகச் சிரித்து ஏதோ சொன்னார்கள்.

அவ்விதம் நான் எந்தக் காலத்திலும் வெட்கித் தலை குனிந்ததே கிடையாது. எனக்கு ஏற்பட்ட அவமானத்தைத் தாங்கவும் இயலவில்லை. அது மிகவும் துரதிர்ஷ்டம் பிடித்த நேரம் எனலாம். டோக்ராவிஸ்கியைச் சந்தித்தேன். அவன் உயர்ந்த நிலையிலுள்ள பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவன். வாலிபன். மற்றொரு பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்த கைதியை அவன் நேசித்தான். மற்ற கைதிகள் எங்களிலிருந்து அவனை மாத்திரம் பிரித்து எடுத்து நேசிக்கத் தொடங்கினர். அவன் மிகவும் துணிவானவன். திடகாத்திரமாகவும் இருப்பான்.

''நண்பரே என்ன விவகாரம்? உள்ளே வாருங்கள்?'' என்று டோக்ராவிஸ்கி அழைத்தார்.

''அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள்?'' என்று முற்றத்தில் வரிசையாக நின்றிருக்கும் கைதிகளைக் குறித்துக் கேட்டேன்.

''அவர்கள் தங்களுடைய குறையை எடுத்துச் சொல்லப் போகிறார்கள். இது தெரியாதா? இதனால் ஒரு நன்மையும் ஏற்படப் போவதில்லை. கைதிகளை யார் நம்புவார்கள்? அவர்களுடைய தலைவனைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். இப்போது நாம்

வெளியில் தலை காட்டினால் பழியை நம்மீது சுமத்துவார்கள். முதலில் நம்மை ஏன் இங்கு அனுப்பினார்கள் என்பதை நினைத்துப் பாருங்கள்! அவர்களுக்குக் கசை அடியைத் தவிர வேறு ஒன்றும் கிடைக்காது. ஆனால் நமக்கோ விசாரணை நடைபெறும். சிறை அதிகாரி நம்மை வெறுக்கிறான். அவன் எதிர்பார்த்த தருணம் இந்த சம்பவத்தின் மூலம் கிடைக்கப் போகிறது. மேலும் அவன் தன் குறைகளைப் போக்கிக் கொள்ள நம்மைப் பயன் படுத்துவான்.''

''நம்மை ஒழித்துக்கட்ட மற்ற கைதிகள் எந்த வகையிலும் தயங்கமாட்டார்கள்' என்று எம். ஸ்கி சொன்னார்.

''அவர்கள் நம்மீது அனுதாபப்படமாட்டார்கள். அந்தக் கவலையே வேண்டாம்.'' என்று டோக்ராவிஸ்கி கூறினார்.

பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுடன் மற்றும் சிலரும் அங்கு இருந்தார்கள். பல காரணங்களினால் தங்கள் குறைகளைத் தெரிவிக்க விரும்பிய கூட்டத்தினருடன் சேர விரும்பவில்லை. அதனால் இங்கு தங்கி விட்டார்கள். அவர்களில் சிலர் கோழை. சிலரோ குறைகளைச் சொல்வதால் ஒரு பயனும் ஏற்படாது என்று எண்ணினர். இவ்விதம் மற்ற கைதிகளை விட்டுப் பிரிந்து இங்கு வந்து தங்கியவர்களில் ஒருவன் அசிம் அசிமோவிச். அவன் இத்தகைய செயல்களை வெறுப்பவன். பிரச்சினை விரைவாகத் தீர வேண்டும், பலன் எதுவாகவும் இருக்கட்டும் என்று அவன் கவலைப்பட்டுக் கொண்டிருந்தான்.

ஈஸய்யாவும் குழம்பிப் போயிருந்தான். நாங்கள் பேசுவதை உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்தான். அதே சமயம் அவன் உள்ளுக்குள் கவலையுடன் இருந்தான். போலந்து நாட்டைச் சேர்ந்த சாதாரண நிலையிலிருந்த சிலரும், எளிதில் அஞ்சுகிற சில ரஷ்யர்களும் இருந்தார்கள். அவர்கள் எப்போதும் அழுத்தப்பட்டும், மௌனமாகவுமே இருப்பார்கள். முடிவு என்ன ஆகிறது என்பதை அறிய அவர்கள் துணிவை வரவழைத்துக் கொள்ள முயன்று கொண்டிருந்தனர்.

ஒரு முடிவும் ஏற்படாது என்ற எண்ணமுடைய சில அஞ்சா நெஞ்சமுள்ள கைதிகளும் எங்களுடன் இருந்தார்கள். குல்கனாவை பிராணி மருத்துவத்தில் பின் தங்கச் செய்த யோவ்சின் அங்கு காணப்பட்டான். சமையல்காரர்கள் இந்த சச்சரவில் கலந்து கொள்ளாமல் ஒதுங்கியிருந்தனர்.

அவர்களைச் சுட்டிக் காட்டி ''இவர்களைத் தவிர அனைவரும் அங்கு சென்று விட்டனர்'' என்று எம்.ஸ்கிடம் கூறினேன்.

''அதனால் நமக்கு?'' என்றார்.

''நாம் வெளியே தலை காட்டியிருந்தால் மேலும் பல தொல்லைகளுக்கு உள்ளாக நேரலாம். அது எதற்கு? இத்தகைய செயல்களால் ஏதாவது நன்மை ஏற்படும் என்று நம்புகிறீர்களா? அவர்கள் விவகாரத்தில நாம் ஏன் குறுக்கிட வேண்டும்?''

''ஒரு பயனும் ஏற்படாது. அவர்களில் குறைந்தது ஐம்பது பேருக்காவது கசை அடி கிடைக்கலாம்.''

அச்சமயம் யாரோ ''சிறை அதிகாரி வருகிறார்'' என்றான். உடனே நாங்கள் அனைவரும் ஜன்னல் பக்கம் சென்று நடப்பதைக் காண முயற்சித்தோம்.

சிறை அதிகாரி கோபத்துடன் வந்து சேர்ந்தான். மௌனமாக ஆனால் மன உறுதியுடன் அவர்களை நெருங்கினான். இத்தகைய தருணங்களில் அவன் துணிவுடன் நடந்து கொள்வான். ஆத்திரமடையமாட்டான். அச்சமயத்தில் மது அருந்தியிருந்தான். அவனைப் பின் தொடர்ந்து டயடாவ் என்பவனும் வந்தான். அவன் சிறைச்சாலையின் கணக்குகளைக் கவனிப்பவன். மிக முக்கியமானவன். சிறை அதிகாரியிருந்தாலும் உண்மையில் சிறைச்சாலையின் நிர்வாகத்தை நடத்தி வருபவன் அவன் தான். காவலாளியின் தலைவனும், ஏதாவது தவறாக நடந்து விடாமல் தடுப்பதற்காக நான்கு காவலாளிகளுடன் வந்தார்கள்.

எதிர்பார்த்தவிதமே சிறை அதிகாரி நடந்து கொண்டான். அவன் உரத்த குரலில் பேசினான். ''சதி...சச்சரவு...துப்பாக்கி மட்டை அடி தண்டனை...யார் தலைவன்...நீயார்... நீதானே...'' என்றான் சிறை அதிகாரி. யாரையோ குத்தினான்.

பதில் கூறப்பட்டது கேட்கவில்லை. ஆனால் ஒரு வினாடிக்குப் பிறகு கைதிகளைப் பிரித்தார்கள். ஒருவர் பின் ஒருவராக மூன்று கைதிகள் காவலாளிகளின் அறைக்குச் சென்றார்கள்.

''உங்களுக்கு விசாரணை நடைபெறும். என்ன என்பதைக் காட்டுகிறேன். சமையல் அறையில் இருப்பது யார்?'' என்று ஜன்னலில் நின்று கொண்டிருந்த எங்களைப் பார்த்துக் கேட்டான் சிறை அதிகாரி.

டயடாவ் மெள்ள சமையலறைக்கு வந்தான். எங்களுக்கு ஒரு குறையும் இல்லை என்று சொன்னதும் அவன் சிறை அதிகாரியிருக்குமிடத்திற்குச் சென்றான்.

''ஒன்றுமில்லையா. நல்லது. அவர்களையும் இங்கு அழைத்து வாருங்கள்'' என்று மெல்லிய குரலில் சொன்னான் சிறை அதிகாரி.

நாங்கள் வெளியே வந்தோம். எங்கள் பெயர்களைக் குறித்துக் கொள்ளும்படி டயடாவிடம் சொன்னான் சிறை அதிகாரி. பிறகு குறை இல்லாதவர்கள் பெயரையும் குறித்துத் தன்னிடம் கொண்டு கொடுக்கச் சொன்னான். கடைசியில் ''உங்களைப் பாதுகாப்பில் வைக்கிறேன். புத்தி வரும்படி செய்கிறேன்'' என்று அனைவரையும் பயமுறுத்தினான்.

''கடவுளே, என்ன நேருமோ'' என்று கூட்டத்தில் யாரோ ஒருவன் சொன்னான்.

குரல் வந்த திசையை நோக்கி சிறை அதிகாரி ஓடினான். ''யார் ராஸ்டராசியாவா? வா, முன் அறைக்கு'' என்றான்.

ராஸ்டராசியாவ் மௌனமாக கூட்டத்தை விட்டுப் பிரிந்தான். அவன் ஒன்றுமே சொல்லவில்லை. ஆனால் அவன் மீது பழி வந்து விட்டது.

''உங்களில் யாருக்கும் ஒரு குறையும் இல்லையே! நல்லது. அது எனக்கே தெரியும். சச்சரவு செய்பவர்கள்தான் இந்தத் தொல்லைகளுக்குக் காரணம். அவர்களைக் கண்டு பிடிக்கலாம். வேலைக்குச் செல்ல நேரமாகி விட்டது. முரசு முழங்கச் சொல்'' என்று டயடாவிடம் சொன்னான் சிறை அதிகாரி.

எங்களைக் கணக்கு எடுப்பதையும், நாங்கள் மௌனமாக வேலைக்குச் செல்வதையும் சிறை அதிகாரி பார்த்துக் கொண்டிருந்தான். நாங்கள் அவனுடைய பார்வையிலிருந்து மறைவது அவனுக்கு மகிழ்ச்சியை அளித்தது. பிறகு காவலாளிகளின் அறைக்குச் சென்றான். அங்கு சச்சரவுக்குக் காரணமான கூட்டத்தின் தலைவனுக்குத் தண்டனை அளித்தான். அது கடுமையானதாக இருக்கவில்லை. எப்படியாவது விரைவில் காரியத்தை முடிக்க வேண்டும் என்று அவசரப்பட்டான். அழைத்துச் சென்ற கைதிகளில் ஒருவன் மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். அவனுக்கு உடனே மன்னிப்பு அளிக்கப்பட்டது.

கைதிகள் தங்கள் குறைகளைத் தெரிவிக்க நடவடிக்கை எடுப்பது சாதாரணமான செயல் அல்ல. அது மேல் அதிகாரிகளிடம் தெரிவிக்கவில்லை என்பது உண்மைதான். சிறை அதிகாரியிடமே தெரிவித்தாலும் அது மோசமானதுதான். மேலும் அது தனிப்பட்ட முறையில் ஒருவர் செய்தது அல்ல. பலர் ஒன்று சேர்ந்து குறைகளை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இந்த விவகாரத்தை எப்படியும் வெளிக்குத் தெரியாமல் மறைத்தே ஆக வேண்டும்.

குற்றம் சாட்டப்பட்ட தலைவர்கள் மறுநாளே பாதுகாப்பிலிருந்து விடுதலையடைந்தனர். உணவு வகைகளிலும் மாறுதல் ஏற்பட்டன. சிறை அதிகாரி அடிக்கடி வந்து போனான். ஒவ்வொரு சிறு தவறையும் கண்டு பிடித்தான்.

கைதிகளைப் பொறுத்தவரை அவர்கள் தங்களுடைய ஆத்திரத்தை அடக்கிக் கொள்ள வெகு நேரமாயிற்று. முன்போல அவர்கள் உணர்ச்சி வசமாகவில்லை. ஆனால் எக்காரணத்தாலோ கவலையடைந்திருந்தனர். சிலர் சிலை போல திகைத்திருந்தனர். மற்றவர்கள் துரதிர்ஷ்டம் பிடித்த சம்பவத்தைக் குறித்து முணுமுணுத்துக் கொண்டிருந்தனர்.

அந்த சம்பவம் நடந்த அன்று மாலை நான் பெட்ராவைச் சந்தித்தேன். அவன் என்னையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். என்னிடம் ஏதோ இரண்டொரு விவரங்களைக் கூறிவிட்டு என்னுடன் நடக்கத் தொடங்கினான். அன்றைய சம்பவம் குறித்து அவனிடம் கேட்டு அறிய விரும்பினேன்.

''பெட்ராவ், உனக்கும் உன் நண்பர்களுக்கும் என் மீது ஆத்திரம் ஏற்பட்டது அல்லவா?'' என்றேன்.

''யாருக்கு ஆத்திரம் ஏற்பட்டது?'' என்று பதில் கேள்வி கேட்டான் பெட்ராவ்.

''மற்ற கைதிகள்!''

''அவர்கள் ஏன் ஆத்திரமடையப் போகிறார்கள்? குறைகூற உங்களுக்கு என்ன இருக்கிறது? நீங்கள் உங்களுடைய சொந்த உணவை உண்கிறீர்கள்.''

''உங்களில் சிலரும் அவர்களுடைய சொந்த உணவையே உண்கிறார்கள். நாங்கள் உங்கள் சகா என்ற முறையில் உங்களுடைய நடவடிக்கைகளில் கலந்து கொள்ள வரவேண்டாமா?''

''நீங்கள் எங்கள் சகாவா?'' என்று பெட்ராவ் ஆச்சரியமடைந்த கேட்டான்.

நான் அவனைப் பார்த்தேன். அவன் நான் சொன்னதை புரிந்து கொள்ளவில்லை. ஆனால் நான் அவனை அறிந்து கொண்டேன். வெகு நாட்களாக என் மனதை வாட்டி வந்த பிரச்சினைக்கு அப்போது தெளிவாக விடை கிடைத்துவிட்டது. அது வரை நான் ஏதோ ஒரு வகையாகவே அவ்விதம் நினைத்திருந்தேன். ஒரு நாள் இல்லை. ஆயுள் முழுவதும் கூடக் கைதியாக இங்கு இருந்தாலும் நான் அவர்களுடைய சகாவாக முடியாது. ஆனால் என் மனத்திரையை விட்டு அகலாமல் இருந்தது, அந்தக் கணம் பெட்ராவ் என்னைப்

பார்த்த பார்வைதான். ''நீங்கள் எங்கள் சகாவா?'' என்று கேட்டு அவன் பார்த்த பார்வை ''நீங்கள் உங்கள் வழியே செல்லுங்கள். நாங்கள் எங்கள் வழியே போகிறோம். உங்களுக்கென்று ஒரு தனி வாழ்க்கை இருப்பது போல எங்களுக்கும் உண்டு'' என்று சொல்வதாகத் தோன்றிற்று.

அந்த துரதிர்ஷ்டம் பிடித்த சம்பவத்திற்கு பிறகு எங்களை மற்ற கைதிகள் கொன்று விடுவார்களோ என்று நினைத்தேன். அவ்விதம் நடைபெறவில்லை. ஒரு சிறு முணுமுணுப்புக்கூட இல்லை. எப்பொழுதும் போலவே எங்களிடம் அவர்கள் நடந்து கொண்டார்கள். தங்களுடைய சகாக்களில் அந்த சம்பவத்தின் போது ஒத்துழைக்காமல் பின் தங்கியவர்களிடம் கூட அவர்கள் ஆத்திரமடையாததை அறிந்தேன். அவர்கள் செய்த தவறையும் குறிப்பிடவில்லை. இவ்விதம் அவர்கள் இருக்க என்ன காரணம் என்பதை என்னால் அறிந்து கொள்ளவே முடியவில்லை.

18

ஆரம்பத்தில் முக்கியமான என்னைப் போன்று உயர் நிலையிலிருந்தவர்களுடனேயே பழகி வந்தேன். ஆனால் அத்தகையவரில் மூன்று ரஷ்யர்களே இருந்தனர். அவர்களில் ஒருவன் அசிம் அசிமோவிச். அவனிடம்தான் நான் நெருங்கிப் பழகி வந்தேன். எத்தகைய சூழ்நிலையிலும் மன ஆறுதலுக்கு அவனையே நாடுவேன். அவனைத் தனிப்பட்டவனாகவே கூற வேண்டும். மற்ற எவருடனும் அவனை ஒப்பிடவே முடியாது. சிலர் சுதந்திரமாகவோ, சிறையில் அடைபட்டோ எப்படியிருந்தாலும் கவலைப்படவே மாட்டார்கள். அசிம் அசிமோவிச்சோ முற்றிலும் மாறுபட்டவன்.

அவன் தன் வாழ்நாள் முழுவதையும் கழிக்கப் போகிறவனைப் போல் ஆரம்பதிலிருந்தே எல்லாவற்றையும் செய்துவந்தான். படுக்கை, பாத்திரங்கள் ஆகிய அனைத்தையும் ஒரு வகைப் படுத்தி வைத்துக்கொண்டான். சிறைச் சாலையில் அவன் இன்னும் பல ஆண்டுகள் கழித்தாக வேண்டும். ஆனால் அவன் விடுதலையைக் குறித்து என்றாவது கனவுகூடக் கண்டானா என்பது சந்தேகம் தான். அவன் நல்ல குணமுள்ளவன். எனக்கு உதவி செய்ததுடன் ஆலோசனைகளும் சொல்லி வந்தான். சில சமயங்களில் தொண தொணவென்று பேசத்தொடங்குவான். அப்போது சலிப்பு ஏற்படும். ஒரு சமயம் இவனை எனக்கு நண்பனாக்கிய விதியை நொந்து கொண்டும் இருக்கிறேன். ஆனால் இந்த நிலைமை ஆரம்பத்தில் தான்.

அவன் தன் கடந்தகால வாழ்க்கையைக் குறித்துச் சொல்லிக் கொண்டே போவான். ராணுவத்தில் அவன் பணி புரிந்துவந்த காலத்தில் யார் தளபதியாக இருந்தார் என்பதிலிருந்து தொடங்குவான். காகஸஸ் பகுதியில் நடந்த யுத்தத்திலும் வேறு ஒரு போர்முனையிலும் அவன் புரிந்த தீரச் செயலுக்காக அங்கு பதக்கமும், வாளும் பரிசளிக்கப்பட்டதாம்.

ஆரம்பத்தில் அவனை வெறுத்த நான் பிற்காலத்தில் என் செயலுக்காக வருந்தினேன். நானும் அவனும் வெளிப்படையாக சச்சரவு வைத்துக் கொண்டதே கிடையாது.

மூன்று ரஷ்யர்களுடன் வேறு எட்டு பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் நான் சிறை தண்டனை அனுபவித்த காலத்தில் நண்பர்களானார்கள். அவர்களில் இருவருடன் நான் பேசுவதை நிறுத்திக் கொண்டேன். மற்றவர்களில் மூவர் கற்றறிந்தவர்கள். பி,எம்.ஸ்கி, ஜாகோவிஸ்கி ஆகிய மூவருமே அவர்கள். ஜாகோவிஸ்கி சிறந்த கணித மேதை. அவர் சிறந்த கல்விமானாக இருந்தும் ஆத்திரமடையும் குணமும், குறுகிய மனப்பான்மையும் கொண்டவர். மற்ற இருவரும் முற்றிலும் மாறுபட்டவர்கள். ஜாகோவிஸ்கி வருவதற்கு முன் எம்.ஸ்கி ஒருவனே இங்கு இருந்தான். நாடுகடத்தப்பட்ட முதல் ஆண்டு அவன் சொல்ல முடியாத துன்பம் அனுபவித்திருக்கிறான்.

ஜாகோவிஸ்கி எப்போதும் பிரார்த்தனை செய்து கொண்டிருப்பான். எங்கள் அரசியல் கைதிகள் அனைவருமே வாலிபர்களாக இருந்தார்கள். ஜாகோவிஸ்கிதான் வயது அதிகமானவர். அவருக்கு ஐம்பது வயதாகியிருந்தது. அவருடைய சகாக்களான பி யும், எம்.ஸ்கி யும் அவரை வெறுத்தார்கள். அவருடன் பேசுவதையும் தவிர்த்தார்கள். அவரைப் பிடிவாதக்காரரர், சச்சரவு செய்யக்கூடியவர் என்று வர்ணித்தார்கள். சுதந்திரமான இடத்தைவிட சிறைச்சாலையில் மக்கள் வளர வளர, சிறிது காலம் கடந்தோ ஒருவர் மற்றவர்களுடன் சச்சரவு செய்து கொள்வார்கள். ஜாகோவிஸ்கி தன் தொழிலை நன்கு அறிவார். கணிதத்தில் அவருக்குள்ள புலமையை வெகு அழகாக எடுத்துக் காட்டுவார். அவர் உலக உற்பத்தி சம்பந்தமாக ஒரு பிரத்யேகக் கொள்கையைக் கண்டு பிடித்தார். அதைக் கட்டுரையாகவும் எழுதி பத்திரிகையில் பிரசுரித்தார். ஆனால் அதைப் படித்த அவருடைய நண்பர்களோ எள்ளி நகையாடினராம்.

எப்பொழுதும் மண்டியிட்டு பிரார்த்தனை செய்து கொண்டிருப்பார். இதனால் மற்றவர்களின் மதிப்பையும் மரியாதையையும் உயிர் போகும் வரை பெற்றிருந்தார். மருத்துவ மனையில் அவர் நோய்வாய்ப்பட்டு இறந்ததை நான் அருகில் இருந்து பார்த்தேன். அவர் சிறைச் சாலைக்கு வந்த அன்று நடந்த சம்பவம் காரணமாகவே கைதிகளுக்கு அவரிடம் மதிப்பும் மரியாதையும் ஏற்பட்டது. அவருடன் இருவர் வந்தனர். முன்பு இருந்த சிறைச் சாலையில் அவர்களுடைய தாடியை அகற்ற வில்லை. அவருடைய தாடியும் முழநீளம் வளர்ந்திருந்தது. இது சட்ட விரோதமானது. ஆனால் அதற்காக இவர்கள் மீது குற்றம் சுமத்துவது அநீதியாகும்.

அவர்களைக் கண்ட சிறை அதிகாரி ஆத்திரமடைந்தான். ''இவர்களைப் பார்த்தால் கொள்ளைக்காரர்கள், நாடோடிகள் போல இருக்கிறதே. இவர்கள் யார்?'' என்று கேட்டான்.

ஜாகோவிஸ்கிக்கு ரஷ்யமொழி அவ்வளவாகத்தெரியாது. நாடோடி, கொள்ளைக்காரன் என்று தங்களையே கேட்டதாக எண்ணிவிட்டார். அதனால் அவர் ''நாங்கள் நாடோடிகள் இல்லை. அரசியல் கைதிகள்'' என்றார்.

''என்ன? என்னிடமா இந்தப் பேச்சு! போ. காவல்காரன் அறைக்கு. இவனுக்கு நூறு கசை அடி கொடுங்கள்'' என்று கட்டளையிட்டான் சிறை அதிகாரி.

ஒருதடையும் சொல்லாமல் ஜாகோவிஸ்கி சென்றார். மௌனமாகத் தண்டனையை ஏற்றார், மற்ற இருவரும் சிறைக்குச் சென்றனர். எம்.ஸ்கி, கதவருகிலேயே ஜாகோவிஸ்கிக்காகக் காத்திருந்தான். அதற்கு முன் பார்த்திராவிட்டாலும் ஜாகோவிஸ்கி தண்டனையை அனுபவித்துவிட்டு வந்ததும் கட்டித் தழுவிக் கொண்டான்.

கசை அடி தண்டனையை அனுபவித்து விட்டு ஜாகோவிஸ்கி சற்றும் முணுமுணுக்காமல் வெளிறிய முகத்துடன் வந்ததாக எம். ஸ்கி சொன்னான். கைதிகள் அவரைப் பார்த்து திகைத்து விட்டனர்.

''ஜாகோவிஸ்கி தம் மனைவி மக்களையும், பிறந்த ஊரையும் விட்டு வந்திருந்தார். அவர் தண்டனை அனுபவித்துவிட்டு வந்து மண்டியிட்டுப் பிரார்த்தனை செய்ததைக் கண்டு நான் அங்கிருந்து ஓடிவிட்டேன்'' என்றும் எம்.ஸ்கி சொன்னான்.

அந்த நாளிலிருந்து கைதிகள் ஜாகோவிஸ்கியிடம் தனி மரியாதை காட்டத் தொடங்கினர். அவர் மௌனமாகத் தண்டனை ஏற்றார் என்று அவர்கள் பாராட்டினர்.

சைபீரியாவுக்கு வரும் கைதிகளில் பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களானால் ரஷ்யர் அல்லது வேறு பகுதியினர் அவர்களிடம் நடந்து கொள்ளும் முறையே மிருகத்தனமாக இருக்கும். இதற்கான காரணம் நன்கு தெரிந்ததே. முதன்மையான அதிகாரிகளும் பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் தான். இரண்டாவது அவர்கள் கொடிய தண்டனைகளை ஏற்க மறுப்பார்கள். தண்டனையை நிறைவேற்றுபவனையும் அச்சமின்றி தாக்குவார்கள். மூன்றாவதாக முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் தண்டனை பெற்று சைபீரியாவுக்கு கூட்டம் கூட்டமாக வந்தனர். இந்தக் காலத்தில் அவர்கள் தங்கள் தகுதியைக்

காட்டியதுடன் சைபீரியா முழுவதும் அவர்களைக் கௌரவிக்கும் படியும்செய்தனர். நான் சிறையிலிருந்த காலத்தில் வெகுகாலமாக இருந்து வந்த பழக்கங்களின்படி கற்றறிந்த கைதிகளை வேறு விதமாகக் கவனிக்கவில்லை. எல்லாக் கைதிகளையும் போலவே அவர்களை நடத்தினர்.

முதன் முதலில் சிறை அதிகாரியைச் சந்தித்ததைக் கூறுகிறேன். டபோலாஸ்க் சிறையில் நானும் பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்த கைதி ஒருவனும் இருந்தோம். அப்போதே இந்தச் சிறை அதிகாரியைக் குறித்துக் கேள்விப்பட்டோம். மோசமான குணமுள்ளவன் என்றும் அறிந்தோம். அந்தச் சிறையில் நாங்கள் இருக்கும்போது இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் நாடு கடத்தப்பட்டு, அங்கு வசித்து வந்தவர்கள் எங்களுடன் தொடர்பு வைத்திருந்தனர். அவர்கள் எங்களுடைய வருங்கால சிறை அதிகாரியைக் குறித்து எங்களை எச்சரித்தனர். ராஜப் பிரதிநிதியின் மூன்று பெண்கள் தங்கள் தந்தையைக் காண ரஷ்யாவிலிருந்து வந்தனர். அவர்களை எங்களுக்கு ஆதரவுகாட்டி வந்தவர்கள் சந்தித்தனர். எங்களைக் குறித்தும் கூறினர். மூன்று பெண்களும் தம் தகப்பனாரிடம் எங்களைக் குறித்துப் பேசினர். ஆனால் ராஜப் பிரதிநிதி என்ன செய்வார்? அவர் சிறை அதிகாரியிடம் எங்களை நல்ல முறையில் நடத்தும்படி கூறுவதாக வாக்களித்தார்.

நானும் என் சகாவுமாக ஒருநாள் பிற்பகல் புதிய சிறைச் சாலைக்கு வந்து சேர்ந்தோம். சிறை அதிகாரியின் வருகைக்காக நாங்கள் வெளிப்புறத்திலேயே நின்றிருந்தோம். சிறை அதிகாரியும் வந்தான். எக்காரணத்தாலோ அவனைப் பார்த்ததும் சிலந்தியின் நினைவே வந்தது. அது எப்படி தன் வலையில் சிக்கியவற்றை தப்பவிடாமல் விழுங்கிவிடுமோ அவ்விதமே இவனும் இருக்கலாம் என்று எண்ணினேன்.

என் சகாவிடம் ''உன் பெயர் என்ன?'' என்று கேட்டான். அவன் தட்டுத் தடுமாறிச் சொன்னான்.

பிறகு என்னைப் பார்த்து, ''உன்னுடையது?'' என்றான் சிறை அதிகாரி.

நான் சொன்னேன். உடனே காவலாளியின் தலைவனிடம் ''இவர்களை அழைத்துச் செல். இவர்களுடைய தலையை மொட்டை அடித்துவிடு. நாளைக்கே அவர்களுடைய விலங்குகளை மாற்றவேண்டும்... உங்களுக்கு இந்த நீண்ட மேல் அங்கி எங்கே கிடைத்தது?'' என்று எங்கள் சாம்பல்நிற மேல் அங்கியைப் பார்த்துக் கேட்டான்.

டபோலாஸ்க் சிறையில் கொடுக்கப்பட்டது என்றேன். ''ஹூம். புதிய உடை. பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து இவ்வித உடையை அளிக்கத் திட்டம் போட்டிருக்கலாம்'' என்றான் சிறை அதிகாரி. பிறகு ''அவர்களிடம் வேறு என்ன இருக்கிறது?'' என்று காவலாளியின் தலைவனிடம் கேட்டான்.

''அவர்களுடைய சொந்த ஆடைகள் இருக்கின்றன.''

''அவற்றை வாங்கி ஏலம் போடுங்கள். கைதிகளிடம் ஒரு பொருளும் இருக்கக்கூடாது...நல்லவிதமாக நடந்து கொள்ளுங்கள். உங்களைக் குறித்து ஏதும் குற்றம் குறைவெளிவரக்கூடாது. வந்தால் கசை அடி, துப்பாக்கி மட்டை அடி. சிறு தவறுக்கும் கடுமையான தண்டனைதான்!'' என்று பயமுறுத்தினான்.

சிறைச்சாலைக்கு வந்த அன்று எனக்கு உடல் நலிவில்லாமல் இருந்தது. சிறைச்சாலையைப் பார்த்ததுமே அது அதிகரித்தது.

முதல் மூன்று மாதங்கள் நானும் பி என்பவரும் பொறிஇயல் பகுதியில் கணக்கர் வேலை பார்த்தோம். அந்த அதிகாரி மிகவும் கண்டிப்பானவர். ஆனால் நல்லவர். எல்லோரிடத்திலும் அன்புடன் பேசிப் பழகுவார். எந்தக் கைதியும் அவரைக் கெட்டவர் என்று கூறி நான் அறியேன். அதே சமயம் நல்லவிதமாகப் பழகுகிறாரே என்று அவரிடம் எந்தக் கைதியும் மரியாதைக் குறைவாக நடந்துகொள்ள மாட்டான். மேலும் பணிவுடனேயே பேசி, அவர் சொல்லுக்குக் கட்டுப்படுவான்.

சிறை அதிகாரிக்கும் பொறி இயல்நிபுணருக்கும் அடிக்கடி சச்சரவு நடந்துகொண்டிருந்தது. அதனால் நிபுணர் வெகுவிரைவிலேயே அந்தச் சிறைக் காரியாலயத்தைவிட்டு வேறு ஒன்றுக்கு மாற்றிக்கொண்டு சென்றார்.

சில காலம் பொறி இயல் காரியாலயத்தில்வேலை செய்த பிறகு தொழிற்சாலைக்கு மாற்றப்பட்டேன். நானும் பி என்பவரும் அங்கு வேலை செய்து கொண்டிருந்தோம்.

எம். ஸ்கி நாளுக்கு நாள் மெலிந்துகொண்டே போனான். அவனுடைய மனநோய் அவனை வாட்டி வதைத்தது. எனக்கு இரண்டு ஆண்டுகள் முன்னதாக அவன் அந்த சிறைக்கு வந்திருந்தான். நான் வந்ததும் அந்த இரண்டு ஆண்டுகளில் நாட்டில் நடந்தவற்றைக் கேட்டு அறிந்தான். நாட்கள் செல்லச் செல்ல அவன் அடியோடு மாறினான். நீறுபூத்த நெருப்பு போல அவன் காணப்பட்டான். அவனுக்குத் தாயாரின் நினைவு வந்துவிட்டால் வருத்தப்படுவான். ''அவள் உயிருடன் இருக்கிறாளோ இல்லையோ? அவளுக்கு

வயதாகிவிட்டது. உடல் நலமும் இல்லை. உலகத்தில் என்னை அவள் எல்லாவற்றிலும் மேலாக நேசிக்கிறாள். நான் துப்பாக்கி மட்டையடி தண்டனையை அனுபவித்த விவரத்தை அறிந்து அவள் துடிதுடித்திருக்கிறாள்'' என்று கூறுவான்.

ஒரு நாள் பகல் பதினோறு மணிக்கு அதிகாரி அவனை அழைத்தான். அவனைக் காணச் சென்றதும் அதிகாரி புன்முறுவல் செய்து ''நேற்றிரவு என்ன கனவு கண்டீர்கள்?'' என்று கேட்டான்.

அவனுடைய கேள்வி எம்.ஸ்கியை திடுக்கிடச் செய்தது. இதயத்தில் கூரிய கத்தியால் குத்தியது போலிருந்தது. ஆனால் அவன் மனதைத் திடப்படுத்திக்கொண்டு ''என் தாயாரிடமிருந்து கடிதம் வந்ததாக் கனவு கண்டேன்'' என்றான்.

''அதையும்விட நல்ல செய்தி கிடைத்திருக்கிறது. நீங்கள் விடுதலையடைந்துவிட்டீர்கள். உங்கள் தாயார் விண்ணப்பம் செய்து கொண்டார். அது ஆலோசிக்கப்பட்டது. இதோ உங்களை விடுதலை செய்வதற்கான கட்டளை. நீங்கள் இப்பொழுதே சிறைச்சாலையிலிருந்து போகலாம்.''

எம்.ஸ்கி முகம்வெளுக்கத் திரும்பி வந்தான். நாங்கள் அவனைப் பாராட்டினோம். அவனுடைய நல்ல காலத்தை எண்ணி எல்லா கைதிகளும் மகிழ்ச்சி அடைந்தனர்.

என்னுடைய நண்பர்கள் நால்வரில் பியும், ஜாகோவிஸ்கியும் வாலிபர்கள். அவர்களுக்குக் குறுகியகால தண்டனையே அளிக்கப்பட்டிருந்தது. அவர்கள் அதிகமாகப் படிக்காவிட்டாலும் மிகவும் நேர்மையானவர்கள். பி என்பவன் வீடுகளுக்கு வர்ணம் பூசுவதில் சிறந்தவன். அவனுடைய திறமையை அறிந்த நகர மக்கள் தங்கள் வீடுகளில் வர்ணம் பூச அழைத்தனர். அவனுடன் இரண்டு கைதிகளையும் உதவியாக வேலை செய்ய அனுப்பினர். மற்ற இருவரும்கூட அவனிடம் வர்ணம் பூசும் வேலையை நன்கு கற்றனர். அவர்கள் நகரத்து வீடுகள் மாத்திரமல்ல, அவர்கள் மாளிகை அரசாங்கக் கட்டிடம், மில்கள் ஆகியவற்றையும் வர்ணம் பூசினர். கடைசியில் சிறை அதிகாரியின் இருப்பிடத்தையும் வெகு நேர்த்தியாக வர்ணம் பூசினர். இதைக் கண்ட சிறை அதிகாரி ''இனி நான் திருமணம் செய்துகொள்ள வேண்டியதுதான்'' என்றான். மேலும் அவன் அரசியல் கைதிகளிடம் திடீரென்று மாறுபட்டு நடக்கத் தொடங்கினான். அவன் ஜாகோவிஸ்கியை அழைத்து ''ஒரு சமயம் உன்னிடம் நான் தவறாக நடந்து கொண்டேன். ஒரு காரணமுமின்றி உனக்குக் கசை அடி தண்டனை அளித்தேன். அதற்காக வருந்துகிறேன். என்ன தெரிந்ததா?'' என்றான்.

ஜாகோவிஸ்கி மௌனமாகத் தெரிந்தது என்று தலை அசைத்தார்.

''உன்னுடன் நான் நட்பாக இருக்க விரும்புகிறேன். என்ன தெரிகிறதா? நான் சிறை அதிகாரி....''

இந்த சம்பவத்தை என்னிடம் ஜாகோவிஸ்கியே விவரித்தார். அதிலிருந்து முன்கோபமும், தவறான முறையில் நடப்பதும் குடிகாரனான சிறை அதிகாரியின் உள்ளத்திலும் சிறிது மனிதத்தன்மை இருப்பது வெளியாயிற்று.

சிறை அதிகாரியின் கனவு பலிக்கவில்லை. அவன் திருமணம் செய்து கொள்ளவில்லை. அதற்கு மாறாக அவன்மீது குற்றம் சாட்டப்பட்டு விசாரணை நடந்தது. அதன் காரணமாக அவன் வேலையைவிட்டு விலக வேண்டியதாயிருந்தது. பல பழைய பாபங்கள் அவனைச் சூழ்ந்துகொண்டன. ஒரு சமயம் அவன் நகரத்தின் தலைவனாகவும் இருந்தான். எதிர் பாராத வகையில் அவன் தலையில் இடி விழுந்தது. பாதாளத்தில் அழுத்தப்பட்டான். அவன் ஒழிந்ததைக் கண்டு கைதிகள் ஆனந்தக் கூத்தாடினர். ஒரு கொண்டாட்டமே நடத்தினர்.

சிறை அதிகாரியோ தன் மாறிய நிலைக்காக பெண்களைப் போல்அழுது புலம்பினான். தன் பொறுப்பை வேறு ஒருவரிடம் ஒப்படைத்தான். தன் குதிரைகளையும், நிலபுலன்களையும் விற்றான். கடைசியில் ஓட்டாண்டியானான். அதன் பிறகு அவனைச் சாதாரண உடையில் சந்திப்போம். அப்பொழுதும் அவன் தன் முரட்டுத் தனத்தைவிடவில்லை. ஆனால் அதிகார உடை மறைந்ததும் அவனை ஒருவரும் மதிப்பதே இல்லை. அதிகாரத்திலிருந்த போது தன்னைக் கடவுளாகக் கருதினான். அதை இழந்து சாதாரண உடையில் அவன் ஒரு கீழ்த்தரமான வேலைக்காரனையும்விடக் கேவலமாகக் காணப்பட்டான். அதிகாரமும், அதற்கான உடையும் மனிதனை எவ்விதம் மாற்றுகிறது என்பது மிகவும் ஆச்சரியகரமானது.

# 19

"எட்டு கண்கள்" என்று அழைக்கப்பட்டு வந்த சிறை அதிகாரி பதவியிலிருந்து விலகியதும் சிறைச்சாலையில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. முதலில் கடுமையான வேலை செய்ய வேண்டும் என்ற பகுதியை நீக்கினார்கள். அதற்குப் பதிலாக தண்டனைக்குரிய பட்டாளத்தைப் புகுத்தினார்கள். அது யுத்த மந்திரி காரியாலயத்திற்குட்பட்டதாக இருந்ததால் ரஷ்யாவில் தண்டனைக்குரிய பட்டாளமாகத் தோன்றிற்று. இதனால் இரண்டாவது பிரிவு கைதிகளை எங்கள் சிறைக்கு அழைத்து வரமாட்டார்கள். அவர்களுடைய இடத்தை சட்டப்பூர்வமான உரிமையை இழக்காத ராணுவத்தைச் சேர்ந்த கைதிகள் பற்றிக் கொண்டனர். ஆனால் அவர்கள் ஆறு ஆண்டுகளுக்கும் குறைவான சிறை தண்டனை பெற்றவர்களாகவே இருந்தார்கள். அவர்கள் தண்டனை முடிந்து விடுதலை பெற்றதும் மீண்டும் ராணுவ சேவைக்குச் செல்லலாம். அவர்கள் இரண்டாம் முறையாகக் குற்றம் புரிந்து மீண்டும் தண்டனை பெற்றாலோ அது பழைய முறையில் இருபது ஆண்டுகளுக்குக் குறையாமல் இருக்கலாம்.

அதற்கு முன்பும் எங்கள் சிறைச்சாலையில் ராணுவத்தைச் சேர்ந்த கைதிகளுக்காக ஒரு பகுதி இருந்தது. வேறு எங்கும் அவர்களை வைக்க இயலாததாலேயே அவ்விதம் செய்தார்கள். இப்பொழுதோ சிறைச்சாலை முழுவதுமே ராணுவத்தின் அதிகாரத்தின்கீழ் இருந்தது. சாதாரணக் கைதிகள் அவர்கள் தண்டனைக் காலம் முடியும்வரை அங்கேயே வைக்கப்பட்டனர். இத்தகைய புதிய கைதிகளை இங்கு அழைத்து வருவதை நிறுத்திக் கொண்டனர். சுமார் பத்து ஆண்டுகளுக்குள் சாதாரணக் கைதிகள் ஒருவர்கூட இங்கு இருக்க மாட்டார்கள்.

பிரத்யேக பகுதியும் அப்படியே இருந்தது. இதனால் சிறைச்சாலையில் எப்போதும்போலவே வாழ்க்கை நடந்து கொண்டிருந்தது. அதே நிலைமை, அதே வேலை, கிட்டத்தட்ட முன்போலவே எல்லாக் கட்டுதிட்டங்களும் இருந்தன. அதிகாரிகள்தான் மாறினார்கள். உயர்தர ராணுவ அதிகாரி நியமிக்கப்பட்டார். அவருக்கு நான்கு உதவியாளர்கள் இருந்தார்கள். அவர்கள் மாறி மாறி சிறைச் சாலையின் வேலைகளைக் கவனித்து வந்தனர். விடுதிகளின் பழைய தலைவர்கள் நீக்கப்பட்டனர். பத்து கைதிகளுக்கு ஒரு தலைவனாக ஏற்படுத்தினர். அந்தத் தலைவர்களில் ஒருவனாக அசிம் அசிமோவிச் தேர்ந்தெடுக்கப்பட்டான்.

மாறுதல்களைக் கண்டு ஆரம்பத்தில் கைதிகள் உணர்ச்சி வசமாகி சர்ச்சை செய்தனர். புதிய அதிகாரியை நோட்டம் பார்க்கத் தொடங்கினர். ஆனால் அடிப்படையில் ஏதும் மாறுதல் ஏற்படாததைக் கண்டதும் அவர்கள் விவாதிப்பதைவிட்டனர். வாழ்க்கையும் முன்போலவே சென்றது. பழைய சிறை அதிகாரி போனது அனைவருக்கும் ஒரு மன அமைதியை அளித்தது. எல்லோரும் நிம்மதியாக மூச்சுவிட்டனர். யாரும் தம் குறையை நேரிடையாகச் சொல்லலாம். நிரபராதிகள் தண்டனை பெறுவதைக் கூடுமானவரை தடுக்கலாம் என்று அனைவரும் அறிந்தனர்.

முன்போலவே சாராயம் விற்கப்பட்டது. இப்போது கைதிகள் இல்லை, அதிகாரிகளே அந்தக் காரியத்தைச் செய்தனர். இயன்றவரை அவர்கள் தம் நிலையை உணர்ந்து நியாயமாக நடந்துகொண்டனர். முதலில் சிலர் கைதிகளை தொந்தரவு செய்ய எண்ணினர். அநுபவமின்மையால் ராணுவத்தினரைப்போல கைதிகளிடத்திலும் முரட்டுத்தனமாக நடந்து கொள்ளலாம் என்று தவறாகக் கருதினர். விரைவிலேயே அவர்கள் தங்கள் தவறை உணர்ந்தனர். சிறிய அதிகாரிகளைச் சாராயம் பருகும்படி கைதிகள் கேட்டுக் கொள்வார்கள். பிறகு தங்களுடனேயே அவர்கள் சாராயம் பருகியதாகக் கூறத் தொடங்குவர். கடைசியில் எல்லா சிறிய அதிகாரிகளும் நல்லவிதமாக நடக்க ஆரம்பித்தனர். கைதிகளுக்குத் தொந்தரவு கொடுப்பதையும் நிறுத்திக்கொண்டனர். மேலும் அவர்களே கடைத் தெருவிற்குச் சென்று கைதிகளுக்குத் தேவையானவற்றையும் வாங்கி வந்து கொடுத்தனர்.

ஏன் மாறுதல்கள் செய்தனர் என்று எனக்குத் தெரியாது. நிர்வாகத்தில் மாறுதல் ஏற்பட்ட பிறகு, நான் அங்கு இரண்டு ஆண்டுகளே இருக்க நேர்ந்தது.

என்னுடைய சிறை வாழ்க்கையை ஆரம்பத்திலிருந்து ஒவ்வொரு ஆண்டும் நடந்தவற்றை விவரிக்கட்டுமா? என் தண்டனை காலம் முடிய நடந்த ஒவ்வொரு சம்பவத்தையும் விவரிப்பதென்றால் மேலும் பல அத்தியாயங்களாக வளர்ந்து சலிப்பை உண்டு பண்ணலாம். முக்கியமானவற்றைக் கூறினாலே போதுமானது. இப்பொழுதே ஓரளவு கைதிகளின் வாழ்க்கையைக் குறித்து வாசகர்கள் தெரிந்துகொண்டிருப்பார்கள்.

சில சம்பவங்கள் எனக்கு வேதனை அளிப்பதாக இருக்கின்றன. பல நிகழ்ச்சிகள் எனக்கு நினைவில்லை. சிறை வாழ்க்கையின் பிற்பகுதி மறந்தே போய்விட்டது எனலாம். ஒரு ஆண்டு போலவே மற்றவையும் ஒரேவிதமாக சலிப்பைக் கொடுப்பதாக இருந்தது என்றே கருதுகிறேன். புது வாழ்விற்கான ஏக்கம் எனக்கு நம்பிக்கை, வலிமை, பொறுமை ஆகியவற்றை ஏற்படுத்தியது.

இன்னும் ஆயிரம் நாட்கள் மீதமிருந்தும் நான் பொறுமையாக நாட்களை எண்ணிக்கொண்டிருந்தேன். ஒரு நாள் கடந்து அடுத்த புதிய நாள் உதயமானதும் நான் மகிழ்ச்சியினால் துள்ளிக் குதித்தேன். இப்போது ஆயிரம் நாட்கள் இல்லை. தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றி ஒன்பது நாட்கள் தான் என்று மகிழ்ச்சியடைவேன்.

பல நண்பர்கள் இருந்தும் நான் தனியனாகவே வாழ்கிறேன். எனக்கும் தனிமையிலேயே அதிக விருப்பமும் இருந்தது. அதனால் என்னுடைய வாழ்க்கை, என்னுடைய செயல்கள் ஆகியவற்றைச் சீர்தூக்கிப் பார்த்துக்கொள்வேன். இந்த இடத்திற்கு என்னை அனுப்பிய விதியையும் வாழ்த்துவேன். ஆனால் என் செயல்களுக்கு நான் நீதியாகிவிடக்கூடியவனாகவோ, அல்லது கடந்த காலத்தை ஆராய்ந்து அறியும் தன்மையையோ பெற்றுவிடவில்லை. கடந்த காலத்தில் செய்த தவறுகளை இனி நடக்கவிடமாட்டேன் என்று உறுதி பூண்டேன். எதிர்கால வாழ்க்கையை எப்படிக் கடத்துவது என்று தீர்மானித்தேன். அவ்விதம் நடக்கவும் முடிவு செய்தேன். என்னால் இவ்விதம் நடக்க முடியும் என்ற கண்மூடித்தனமான நம்பிக்கை என் உள்ளத்தில் உதயமாயிற்று நிடுநிலையை நோக்கி ஏங்கியிருந்தேன். புதிய போராட்டத்திற்கு வலிமையை ஏற்படுத்திக்கொள்ள முயன்றேன். ஆனால் அந்த நாட்களை இப்போது நினைவிற்குக் கொண்டு வரும்போது வேதனையாக இருக்கிறது. எல்லோரும் அறிந்துகொள்ள வேண்டும், இவ்வித சிறை வாழ்க்கையை இளம் வயதிலேயே நடத்த நேர்ந்தால் அவர்களுக்கு இது உதவியாக இருக்கும் என்றே எழுதுகிறேன்.

திடீரென்று முடிப்பதற்குப் பதிலாகச் சிறிது விவரிப்பதே நல்லது.

''யாராவது இந்தச் சிறையிலிருந்து தப்பிச் செல்ல முடியுமா? தப்பித்தான் சென்றிருக்கிறார்களா?'' என்று யாரோ என்னிடம் கேட்பது போலிருந்தது. ஒரு கைதி இரண்டு ஆண்டுகள் தண்டனையை அநுபவித்துவிட்டால் அதைப் பல ஆண்டுகளாகக் கணக்கு எடுத்துக்கொள்வான் என்று முன்னமேயே கூறியிருக்கிறேன். அவர்கள் மீதமுள்ள தண்டனை காலத்தையும் அங்கேயே கடத்திவிட்டு, ஒரு அபாயத்திற்கும் உள்ளாகாமல் சிறையிலிருந்து விடுபட்டு குடியேறுவதற்குப் போகலாம் என்று நினைப்பார்கள். குறுகிய கால தண்டனை அடைந்தவர்கள் விடுதலைக்காக ஏங்கிப் பலவிதமாகச் சிந்தித்துக் கொண்டிருப்பார்கள். நீண்ட கால தண்டனை பெற்றவர்களோ அபாயத்திற்குள்ளாகக் கூடியவற்றைப் பற்றி முடிவு செய்வார்கள். எங்கள் சிறையில் இது இயலாது. கோழைத்தனத்தினாலா, கடுமையான ராணுவப் பாதுகாப்பினாலா, நாலாபக்கங்களிலும் ஏராளமான மக்கள் சூழ்ந்திருப்பதினாலா இது இயலாமல் போகிறது என்பதை என்னால் தீர்மானமாகக் கூற முடியாது. இவற்றையும் ஒரு காரணமாக எடுத்துக் கொள்ளலாம். எங்கள் சிறையிலிருந்து தப்பிச் செல்வது மிகவும் கடினம். அப்படியும் நான் சிறையிலிருந்த காலத்தில் இத்தகைய சம்பவம் ஒன்று நடைபெற்றது. இரண்டு முக்கியமான கைதிகள் தப்பிச் செல்ல முயன்றனர்.

பழைய சிறை அதிகாரி சென்றதும் ஏ.வி. என்ற கைதி தனிமையில் விடப்பட்டவனைப்போலாகி விட்டான். அதற்கு முன் அவன் கைதிகளை உளவு பார்த்து அதிகாரிகளுக்கு அறிவித்து வந்தான். இப்போது அதற்கு இடமே இல்லாமல் போய் விட்டது. அதனால் அவன் அங்கிருந்து தப்பிச் செல்ல முடிவு செய்தான். தன் எண்ணம் நிறைவேற அவன் குல்காவைத் தேர்ந்தெடுத்தான்.

குல்காவ் வாலிபன். வாழ்க்கையை அனுபவிக்க வேண்டும் என்ற அவா அளவு கடந்து உள்ளவன். திடகாத்திரமான அவன் எதையும் செய்யக் கூடியவன்.

ஏ.வி. யும், குல்காவும் நண்பர்களாக இருந்ததில்லை. அவர்கள் திடீரென்று ஒன்று சேர்ந்து அடிக்கடி தனியிடத்திற்குச் சென்று பேசியது அனைவருக்கும் ஆச்சரியமாக இருந்தது. சிறைச்சாலையிலிருந்து தப்பிச் செல்ல காவலாளியின் உதவியும் தேவை. இதற்கும் அவர்கள் முயற்சித்தனர். கொலர் என்ற குட்டி அதிகாரியின் நட்பைப் பெற்றனர். பிறகு இருவரும் தப்பிச் செல்ல ஒருநாளைத் தேர்ந்தெடுத்தனர். கோடை காலத்தில் கடைசி பகுதியான ஜூன் மாதத்தையே அவர்கள் தப்பிச் செல்லத்

தகுதியானதாகக் கருதினர். அக்காலம் தான் பிரயாணம் செய்யத் தகுதியானதாகவும் இருக்கும்.

ஆனால் அவர்கள் கோட்டையைவிட்டு நேராக எங்கும் நடந்து போய்விட முடியாது. குன்றின்மீது நகரம் இருக்கிறது. முதலில் அவர்கள் உடைகளை மாற்றிக் கொள்ள வேண்டும். இதற்கு முதலில் நகரத்தின் வெளி பாகத்தை அடைந்தால்தான் இயலும். அப்போதும் ஒரு இடையூறு இருந்தது. அங்கு உதவி செய்ய யாராவது நண்பர்கள் இருக்க வேண்டும். குல்காவுக்கு நகரத்தின் எல்லையிலுள்ள ஒருத்தியின் நட்பு ஏற்பட்டிருந்தது. அவனுக்காக அவள் வெகு காலமாக பணத்தைச் செலவழித்து வருகிறாள்.

நம் வீரர்கள் இருவரையும் அன்று காலை ஷிவ்கின் என்ற கைதியுடன் ராணுவத்தினர் பகுதிக்கு வேலைசெய்ய அனுப்பினர். ஷிவ்கின் எண்ணெயில் எரியும் அடுப்புகள் செய்பவன். ஏ.வி. யும் குல்காவும் அவனுக்கு உதவியாளர்கள். மூன்று கைதிகளுடன் இரண்டு காவல்காரர்கள் செல்ல வேண்டும். இருவரில் ஒருவனாக கொலர் வந்தான்.

அவர்கள் காலை ஆறுமணிக்கு வேலை செய்யுமிடத்தை அடைந்தனர். அங்கு அவர்களைத் தவிர வேறு யாரும் இருக்க வில்லை. சுமார் ஒரு மணி நேரம் அவர்கள் வேலை செய்திருப் பார்கள். அதன் பிறகு ஷிவ்கின்னிடம் தொழிற்சாலைக்குச் சென்று அவர்களுக்குத் தேவையான கருவிகளை எடுத்து வருவதாக ஏ.வி. யும் குல்காவும் சொன்னார்கள். ஷிவ்கின் அவர்களை தாமதமின்றி வரும்படி கூறினான். உடனே கொலர் காவலுக்குப் பின் தொடர அவர்கள் இருவரும் அங்கிருந்து சென்றனர்.

அரைமணி நேரமாயிற்று. அவர்கள் திரும்பி வரவில்லை! இது கொலரின் சிந்தனைக்குப் பயன்பட்டது. அவன் வாழ்நாளில் எவ்வளவோ பார்த்திருக்கிறான். குல்காவ் ஒரு விசித்திரமானவன். ஏ.வி.யோ முற்றிலும் மாறுபட்டவன். அவன் குல்காவை நோக்கிக் கண் சிமிட்டியதைக் கவனித்தான். கொலர் அவர்களுடன் செல்லும் போது மற்றொரு காவல்காரனுக்கு இன்ன செய்ய வேண்டும் என்று கட்டளையிட்டான். அதுவும் ஒரு நூதனமாக இருந்தது. இவை அனைத்துமாக கொலருக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. ஏ.வி.யும் குல்காவும் ஏதாவது தவறு செய்து விட்டால் அவனுக்குத்தான் அதிக தொல்லைஏற்படும். இது அவனுக்கு நன்றாகத் தெரியும். தாமதிக்காமல் அதிகாரிகளுக்குத் தன் சந்தேகத்தைத் தெரிவித்துவிட வேண்டும் என்று தீர்மானித்தான்.

கொலர் தன்னுடன் இருந்த காவல்காரனை அழைத்துக்கொண்டு புறப்பட்டான். அவனிடம் ஏதும் சொல்லவில்லை. நேராக அதிகாரிகளிடம் சென்று தன் சந்தேகத்தைத் தெரிவித்தான். முதலில் அவர்கள் அதை நம்பவில்லை. பிறகு அவர்கள் சிறிதும் தாமதம் செய்யாமல் ராஜப்பிரதிநிதிக்குத் தெரிவித்தார்கள். ஏ.வி. யும் குல்காவும் முக்கியமான கைதிகள் என்று எக்காரணத்தாலோ அவர் நம்பினார். அவர்கள் தப்பிச் சென்றால் தலைநகரத்திலிருந்து ஓயாத தொல்லைகள் கொடுத்துக் கொண்டிருப்பார்கள். மேலும் குல்காவ் பிரத்யேகப் பகுதியைச் சேர்ந்த கைதி. இந்த பகுதியைச் சேர்ந்தவர்கள் எந்தக் காலத்திலும் தப்பிச் சென்றதே இல்லை. உடனே நாலா பகுதிகளுக்கும் செய்தி அனுப்பப்பட்டது. கைதிகளின் அங்க அடையாளங்களையும் மற்ற விவரங்களையும் தெரிவித்து சுற்றுபுற நகரங்களிலுள்ள அதிகாரிகளுக்கும் கடிதம் எழுதினார்கள். குதிரைப் படையையும் மலைப் பகுதியில் தேடிக் கண்டுபிடிக்க அனுப்பினார்கள். சுருக்கமாகச் சொல்வதென்றால் ஒவ்வொரு அதிகாரியும், காவல்காரர்களும் நடுநடுங்கி நாலா பக்கங்களிலும் அலைந்து திரிந்தார்கள் எனலாம்.

அதே சமயம் சிறைச்சாலையிலுள்ள கைதிகள் உணர்ச்சி வசமானார்கள். ஏ.வி.யும் , குல்காவும் தப்பிச் சென்று விட்டார்கள் என்ற செய்தி கிடைத்ததும் அவர்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு ஒரு எல்லையே இல்லாமல் போயிற்று. ஒவ்வொருவரும் அவர்கள் இருவரைக் குறித்தே பேசத் தொடங்கினர். அதுவரை ஏ.வி. யைக் குறித்து மோசமாக நினைத்து வந்தவர்கள் கூட அப்போது அவனைப் போன்ற அறிவாளி, துணிச்சல்காரன் இருப்பானா என்றனர்.

வாதம் குறுக்குவாதம் ஆகியவையும் நடைபெற்றன.

சிலர் தப்பிச் செல்லவே முடியாது. அவர்கள் இருவரும் அகப்பட்டுக் கொள்வார்கள் என்று வாதித்தனர். சிலரோ அவர்கள் இதற்குள் பல கல்தூரம் போயிருப்பார்கள். இனி அவர்களை யாராலும் பிடிக்கவே முடியாது என்றனர். இன்னும் சிலரோ அருகாமையிலுள்ள நகரத்திலேயே அவர்களுக்கு நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய இல்லத்திற்குச் சென்று ஒருவிதமாக எல்லாம் அடங்கும் வரை அங்கேயே தங்கியிருப்பார்கள்-பிறகு துணிவுடன் வெளியே வந்து தங்கள் விருப்பமான இடத்திற்குச் செல்வார்கள் என்று கூறினர்.

கைதிகள் தப்பிச் சென்று ஒரு வாரமாயிற்று. அதுவரை அவர்களைக் குறித்து ஒரு செய்தியும் வரவில்லை. சிறையிலிருந்த கைதிகளோ ''அவர்கள் இருவரும் அகப்பட்டுக்கொள்ளும்படியான

முட்டாள்கள் அல்ல. எல்லாவற்றையும் முன்னதாகவே ஏற்பாடு செய்து வைத்திருப்பார்கள்'' என்று கூறினர்.

ஆனால் ஏழாவது நாள் பிற்பகலே வதந்திகள் உலாவத் தொடங்கின. தப்பிச் சென்ற கைதிகள் இருக்குமிடத்தைக் கண்டுபிடித்து விட்டதாகத் தெரிய வந்தது. இதைச் சில கைதிகள் ஆதரித்தனர். சிலரோ இச் செய்தியை பொய் என்றனர்.

மறுநாள் காலை கைதிகள் அகப்பட்டுக் கொண்டனர். அவர்களைத் திரும்ப அழைத்து வருகிறார்கள் என்ற செய்தி கிடைத்தது. இந்தச் செய்தியினால் சிறையிலிருந்த கைதிகளின் மனநிலை எப்படி மாறியிருந்தது என்பதை விவரிக்கவே முடியாது. முன்பு தாங்களும் தப்பிச் செல்லலாம் என்று எண்ணிய கைதிகளும் இப்போது நிலை குலைந்து உட்கார்ந்துவிட்டனர்.

குல்காவையும், ஏ.வி. யையும் அழைத்து வந்தனர். அவர்களுக்காக விசாரணை நடத்த ஏற்பாடாயிற்று. அதுவரை ஏதோ கூறிக் கொண்டிருந்த மற்ற கைதிகள் இப்போது அவர்கள் இருவரிடத்திலும் அனுதாபம் காட்டத் தொடங்கினர்.

''ஒவ்வொருவரும் ஆயிரம் துப்பாக்கி மட்டை அடிபட நேரிடும்'' என்று கூறிக் கொண்டனர்.

''ஏ.வி.க்கு ஆயிரம் அடி கொடுக்கலாம். ஆனால் மற்றவன் பிரத்யேகப் பகுதியைச் சேர்ந்தவன். அவனுக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்படலாம். அவன் இத்துடன் ஒழிந்தே போய்விடுவான்'' என்றனர்.

அவர்கள் நினைத்தது தவறு. ஏ.வி. க்கு ஐநூறு துப்பாக்கி மட்டை அடியே அளிக்கப்பட்டது. முன்பு அவன் நல்லவிதமாக நடந்து கொண்டதை எண்ணி, இது தான் அவன் செய்த முதல் தவறு என்று தண்டனையைக் கடுமையாக்காமல் விட்டனர். குல்காவுக்கு ஆயிரத்து ஐநூறு துப்பாக்கி மட்டை அடிகள் கொடுக்கப்பட்டன. விசாரணையின் போது வேறு ஒருவரையும் இந்த வழக்கில் சேர்க்கவில்லை.

காவல்காரன் கொலர் நிலைமை மோசமாயிற்று. அவனுக்கு இரண்டாயிரம் துப்பாக்கி மட்டை அடி தண்டனையும், கடின வேலை செய்யும்படி சிறைச் சாலைக்கும் அனுப்பப்பட்டான்.

ஏ.வி. க்கு அக்கடுமையான தண்டனை கிடைக்காததற்கு மருத்துவர்களும் ஒரு காரணம் எனலாம். அப்படியும் அவன் மருத்துவசாலையில் இருக்கும்போது அடுத்த முறை இப்படிச் செய்வேன் அப்படிச்செய்வேன் என்று பிதற்றிக் கொண்டிருந்தான்.

குல்காவ் வழக்கம்போல் காணப்பட்டான். துப்பாக்கி மட்டை அடி தண்டனையைப் பெற்று சிறைக்கு மீண்டும் வந்தவன் ஏதுமே நடைபெறாததைப் போல நடந்துகொண்டான். ஆனால் அவனுடைய புகழ் மங்கிவிட்டது. கைதிகள் அவனை மோசமாக நடத்தினர். குல்காவுக்கு ஏற்பட்ட தோல்வி அவனை இந்த நிலைக்குக் கொண்டு வந்தது. அதுவே வெற்றி கிடைத்திருந்தால் மனிதர்களின் போக்கே வேறுவிதமாக மாறிவிடும் என்பதில் சந்தேகமே இல்லை.

# 20

என் தண்டனை காலத்தின் கடைசி நாட்களில் கடுமையாக வேலை செய்ததை விவரித்தேன். அந்த நாட்கள் சிறைக்கு வந்த ஆரம்ப காலத்தைப் போல் என் நினைவிலிருந்து மறையாது பசுந்தளிர் போல் இருந்தன. அவற்றை நான் விவரிக்கப் போவதில்லை. நான் பொறுமையை இழந்த போதிலும் அந்தக் கடைசி நாட்களில் என் வாழ்க்கை நல்லவிதமாகவும் எளிமையாகவும் கடப்பதாகவே கருதினேன். எனக்குப் பல நண்பர்களும், என்னுடைய நன்மையைக் கோருபவர்கள் பலரும் இருந்தனர். நான் மோசமானவன் இல்லை என்று மற்ற கைதிகளும் கடைசியில் உணர்ந்தனர். அவர்களில் பலர் என்னை நேசித்து எனக்கு உதவி புரிந்து வந்தனர்.

தண்டனையின் கடைசி காலத்தில் முன் எப்போதும் இல்லாத சலுகைகள் எனக்குச் சிறை சாலையினுள் கிடைத்தன. நகரத்திலுள்ள அரசாங்க அதிகாரிகள் என்னுடைய பால்ய நண்பர்களாகவும் பள்ளித்தோழர்களாகவும் இருந்தனர். அவர்கள் என் பணத்தை வைத்திருந்தனர். புத்தகங்களைப் படிக்கக் கொடுத்தனர். பல ஆண்டுகளாக நான் புத்தகத்தையே தொட்டதில்லை. வெகு நாட்களுக்குப் பிறகு பத்திரிகையைப் படிக்கத் தொடங்கிய அந்த நாள் என் மனத்திரையை விட்டுஅகலவே அகலாது. அன்று மாலை படிக்க உட்கார்ந்தவன் பொழுது விடியும் வரை அதைக் கீழே வைக்கவே இல்லை. அப்போது என் உள்ளத்தில் பழைய வேகம் கிளைத்து எழுந்தது. புதிய வாழ்க்கை எனக்கு எவ்விதம் நூதனமாக இருக்கலாம் என்று எண்ணினேன். முன்பு எனக்குப் பல ஆசிரியர்களை நன்கு தெரியும். இப்போதோ புதியவர்களாகப் பலர் காணப்படுகிறார்கள்.

பழைய சிறை அதிகாரி இருக்கும் போது புத்தகம் பத்திரிகை ஆகியவற்றைச் சிறைச் சாலையினுள் கொண்டு வரவே முடியாது. அப்படியே கொண்டு

வந்தாலும் சோதனை செய்யும் போது அகப்பட்டு விட்டால் பெரிய தொல்லைதான். கேள்வி மேல் கேள்வியாகக் கேட்பார்கள். ''யாரேனும் உதவி செய்பவர்கள் இருக்கலாம்'' என்று கூறி அனைவருக்கும் தொல்லை கொடுப்பார்கள். இதனால் நான் அவ்வளவு காலமும் புத்தகங்களைக் கண்களால் பார்க்காமலும் இருந்தேன்.

நாங்கள் குளிர் காலத்தில் அந்தச் சிறைக்கு வந்தோம். அதனால் அதே காலத்தில்தான் நாங்கள் விடுதலையடைவோம். நான் குளிர்காலத்தை எதிர் நோக்கிப் பொறுமையிழந்து காத்திருந்தேன். கோடை காலம், மாரிக் காலம் சென்று பனிவருவதற்கு அடையாளமாக இலைகள் உதிரத் தொடங்கின. முதல் பனித்துளி தரையில்விழக் கண்டதும் என் உள்ளம் துள்ளி விளையாடிற்று. வெகு காலமாக எதிர்பார்த்த விடுதலை நாள் நெருங்கிவிட்டது.என் இதயம் சுதந்திரத்தை எண்ணி வேகமாகப் படபடக்கத் தொடங்கிற்று. ஆனால் விடுதலையடையும் நாள் நெருங்க நெருங்க நான் ஆச்சரியப்படும் வகையில் பொறுமையுடன் இருந்தேன். கடைசி சில நாட்களில் நான் ஆச்சரியப்படும் வகையில் என்னையே நொந்து கொண்டேன். அந்த நாட்களில் ஓய்வு நேரங்களில் உலாவும்போது சந்தித்த பல கைதிகள் என்னைப் பாராட்டினார்கள்.

''நீங்கள் எங்களை விட்டுப் போகிறீர்கள். விரைவிலேயே விடுதலையடைந்து விடுவீர்கள்'' என்று கூறுவர்.

அவர்களில் மார்டினாவ் என்பவனிடம் ''நீங்களும் விரைவில் விடுதலையடைந்து விடுவீர்கள்'' என்றேன்.

அதற்கு அவன் ''இன்னும் ஏழு ஆண்டுகளைக் கடத்த வேண்டும்'' என்றான். எதிர்காலத்தை எண்ணி அவன் பெருமூச்சு விடுவான்.

பலர் முழுமனதுடன் என்னைப் பாராட்டினார்கள். என்னிடம் மேலும் நட்பாகப் பழகினர். அதன் பிறகு என்னை அவர்களில் ஒருவனாகவே கருதவில்லை.

போலந்தைச் சேர்ந்த வாலிபன் அடிக்கடி முற்றத்தில் உலாவிக் கொண்டிருப்பான். அவன் தன் உடல் நலத்தைப் பேணிக்காக்கவே அவ்விதம் செய்வதாகத் தோன்றும். ஒரு நாள் அவன் என்னைப் பார்த்துப் புன்முறுவல் செய்து ''நீங்கள் விடுதலையடைவதை நான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். நீங்கள் விடுதலை பெற்ற மறு ஆண்டு நான் சுதந்திரமடைவேன்.'' என்றான்.

தனிமை, பகல் கனவு காணுதல் ஆகிய இருந்தும் அந்த விடுதலையானது உண்மையான சுதந்திரத்தையும்விட சுதந்திர

மானதாகத் தோன்றியது. விடுதலையைக் குறித்து கைதிகள் தங்களுக்கே உரித்தானவகையில் மிகைப் படுத்திக் கூறினர். அதிகாரியின் பணியாள் எங்களுக்கு ஒரு அரசனைப் போலத் தோன்றினான். சுதந்திரமானவனுடன் கைதியை ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஒன்று தெளிவாகிறது. அவன் தலையை மொட்டை அடிக்காமலும், விலங்கோ, அல்லது காவலாளியோ இல்லாமல் எங்கும் போய் வரலாம்.

என் விடுதலைக்கு முன், நான் சிறைச் சாலையின் சுற்றுப் புறத்தில் கடைசி முறையாக நடந்து சென்றேன். இவ்வளவு ஆண்டுகளாக எத்தனையோ முறை அங்கு சுற்றித் திரிந்திருக்கிறேன். சிறைச்சாலைக்கு வந்த முதல் ஆண்டு விடுதிக்குப் பின்னால்நான் உடைந்த உள்ளத்துடன் உலாவினேன். என் விடுதலைக்கு இன்னும் எத்தனை நாட்கள் இருந்தனவோ அவற்றை நான் எவ்விதம் கணக்கிட்டு வந்தேன் என்பது நன்றாக நினைவிருக்கிறது. கடவுளே! அது நடந்து எத்தனையோ காலமாகி விட்டது போல் அல்லவா தோன்றுகின்றது? விடுதியின் ஒரு மூலையில்தான் கழுகு வசித்து வந்தது. பெட்ராவும் அடிக்கடி விடுதியின் பின்புறம் தான் வந்து பேசுவான். சமீபத்தில் கூட அவன் ஓட்டமும் நடையுமாக என் அருகில் வந்து என் எண்ணத்தை உணர்ந்து எதற்காகவோ ஆச்சரியப் பட்டான்.

சிறைச்சாலையின் நான்கு சுவர்களுக்கிடையே எவ்வளவோ வாலிபம் வீணாகிவிட்டது. பலருடைய திறமையும், சக்தியும் பயன்படுத்தாமல் போய்விட்டது. உண்மையைச் சொல்லப் போனால் சிறைச் சாலையினுள் தண்டனை பெற்று வந்தவர்கள் சாதாரணமானவர்கள் இல்லை எனலாம். அவர்கள் நம் மக்களிலேயே திடகாத்திரமானவர்களாகவும் அபூர்வசக்தி பெற்றவர்களாகவும் இருந்தனர். ஆனால் இந்த இணையற்ற சக்தி இழக்கப்பட்டு விட்டது. இதற்காக யார்மீது குற்றம் கூறுவது?

யார் குறை கூறுவது என்பதும் கேள்வியாக இருந்தது.

மறு நாள் காலை பொழுது விடியும் சமயம், கைதிகள் வேலைக்குச் செல்வதற்கு முன் நான் விடுதிகளுக்குச் சென்று எல்லோரிடமும் விடைபெற்றேன். பல முரட்டுக் கைகளும் என் கையை அன்புடன் பற்றிக் குலுக்கின. சிலர் உண்மையான நண்பர்களைப் போலக் கை குலுக்கினர். சிலரோ ஒப்புக்கு கையைப் பற்றினர். மற்றவர்களுக்கு நான் விடுதலையாகிச் சென்றதும் முற்றிலும் மாறுபட்டவனாகி விடுவேன் என்பது தெரியும். நகரத்தில் எனக்கு நண்பர்கள் இருக்கிறார்கள். நான் நேராக அவர்கள் இல்லத்திற்கே செல்வேன்,

அவர்களுக்கு சமமாக இருப்பேன் என்பதையும் அறிவார்கள். என் விவகாரங்கள் அறிந்த கைதிகளின் பேச்சு அன்பாக இருந்தது. ஆனால் அது ஒரு பிரபுவினிடம் பேசுவது போலவும் காணப்பட்டது. சிலர் என்னை வெறுப்பது போல முகத்தைத் திருப்பிக் கொண்டு சென்றனர்.

முரசு முழங்கியதும் எல்லோரும் வேலைக்குச் சென்றார்கள். நான் மாத்திரம் தங்கிவிட்டேன். அன்று காலை முதலில் எழுந்தவன் சுஷிலாவ்தான். சரியான தருணத்தில்எனக்குத் தேநீர் தயாரித்துக் கொடுக்க அவன் பாடுபட்டான். என்னுடைய ஆடைகளையும் என்னிடமிருந்த பணத்தையும் நான் கொடுத்தபோது அவன் எவ்விதம் அழுதான்!

''இதெல்லாம் இல்லை. உங்களைப் பிரிந்து நான் எவ்விதம் இருப்பேன்? என்னால் இது இயலுமா? நீங்கள் இல்லாமல் நான் என்ன செய்வேன்?'' என்று பற்களைக் கடித்துக்கொண்டு தனக்கு வந்த துக்கத்தை அடக்க முற்பட்டான் சுஷிலாவ்.

அசிம் அசிமோவிச்சிடம் விடை பெற்றேன். ''நீங்கள் விரைவில் விடுதலையடையலாம்'' என்றேன்.

''நானா? நான் இன்னும் வெகுகாலம் இங்கேயே இருக்க வேண்டும்'' என்று கையைப் பற்றி அழுத்தினான் அசிம் அசிமோவிச். நான் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு கண்ணீர் பெருக்கினேன்.

கைதிகள் வேலைக்குச் சென்ற சிறிது நேரத்திற்குப் பிறகு கடைசியாக நானும் என்னுடன் தண்டனையடைந்து சிறைக்கு வந்த மற்றொருவரும்சிறைச்சாலையை விட்டுப் புறப்பட்டோம். முதலில் நாங்கள் எங்கள் விலங்குகளை அகற்ற கருமானிடம் போக வேண்டியிருந்தது. ஆனால் எங்களுடன் ஆயுதம் தாங்கிய காவல்காரர்கள் வரவில்லை. ஒரு சிறு அதிகாரியே வந்தான். எங்கள் விலங்குகளை அகற்றுபவன் ஒரு கைதிதான். அவனே கருமான் பட்டறையில் வேலை செய்கிறான். என் சகாவின் விலங்குகளை அகற்றியதும் நான் பட்டறையின் அருகில் சென்றேன். அந்த இடத்தை ஒரு முறை பார்த்துவிட்டு என் காலைத் தூக்கி பட்டறையின்மீது வைத்தேன். விலங்குகளால் எனக்குத் துன்பம் நேராமல் அகற்ற கருமான் முயற்சித்தான்.

அதற்குள் மற்றொருவன் ''முதலில் பிணைப்பு ஆணியை அகற்று. பிறகு விலங்கை கழட்டு'' என்று கூறினான்.

விலங்குகள் கழன்று தரையில் விழுந்தன. கடைசி முறையாகப் பார்க்க நான் அவற்றை எடுத்தேன். ஒரு காலத்திற்கு முன் அவை என்

